இஃது, இரண்டு நெறியாக்கும் ஒக்கும்
இவற்றைக் குணவலங்கார மென்றுங் கூறுப

அஃதேல், இன்ன விலக்கணமெல்லாம் முன்னையோர் மொழிந்தது, ஈண்டல் பயின்ற வடமொழிக்கன்றே, செந்தமிழ் மொழியின் வந்தவாறு என்னை? எனின்,—இதன் முதனூல் செய்த ஆசிரியர் உலகத்துச் சொல்லையெல்லாம் சமஸ்கிருதம், பிராகிருதம், அபப்பிரஞ்சம் என மூன்றுவகைப்படுத்தினார் அவற்றுள், சமஸ்கிருதம் புத்தேளிர் மொழியெனவும், அபப்பிரஞ்சம் இதர சாதிகளாகிய இழிசனர் மொழி எனவுங் கூறினார் அதனால், பிராகிருதம் எல்லா நாட்டு மொழி யெனவும் படும் அல்லதூஉம், பிரகிருதி யென்பது இயல்பாகலான், பிராகிருதம் இயல்புமொழி

அந்தப் பிராகிருதத்தைத் **தற்பவம், தற்சமம், தேசியம்** என மூன்றாக்கினார் அவற்றுள், **தற்பவம்** என்பன-ஆரியமொழி திரிந்து ஆவன அவை பாடம் - பாவம் எனவும், 'தசநான் கெய்திய டணைமருண் ஞென்றுள்' எனவும் வரும் **தற்சமம்** என்பன - ஆரியச்சொல்லும் தமிழ்ச்சொல்லும் பொதுவாய் வருவன, அவை - குங்குமம், மூலம், மலயமாருதம் என்பன **தேசியம்** என்பன - அவ்வந்நாட்டவர் ஆட்சிச்சொல்லேயாய்ப் பிற பாடை சேர்க்காதன அவை - நிலம், நீர், தீ, சோறு என்பன

இவற்றையே செய்யுட் சொல்லென்று தமிழ் நூலாரும் வேண்டினாராகலின், இவ்வாற்றான் தமிழ்ச் சொல்லெல்லாம் பிராகிருத மெனப்படும் அச்சொற்களால் இயற்றப்படும் எல்லாக் கவிக்கும் அவ் வலங்காரமனைத்தும் உரியவாகலின், ஈண்டு மொழிபெயர்த்து உரைக்கப்பட்டன

(**கு - ரை**) சமாதியென்பது, வடசொல், ஒரு பொருளினிடத்து மற்றொன்றின் தன்மையை நன்கு ஆரோபிப்பது தந்து புணர்த்து உரைத்தல் - கொணர்ந்து சேர்த்துச் சொல்லுதல் இம் மேற்கோள்களில், உயர்திணைக்குரிய பருகுதல் காலுதல் என்ற வினைகள் அஃறிணையாகிய சூரிய மண்டலத்தின் மேலேற்றிக் கூறப்பட்டனவும், பிராணிகட்குரிய விழித்தல், வார்த்தல் என்ற வினைகள் குவளை மலர்மேலேற்றிக் கூறப்பட்டனவும், இளமங்கையர்க்குரிய கன்னித்தன்மை, மதிமேலேற்றிக் கூறப்பட்டதும், மகளிர்க்குரிய குமரித்தன்மை, மரத்தின்மேலேற்றிக் கூறப்பட்டதும் காண்க இவையிரண்டும் ஒப்புடைப்பொருளின

மேற் பெயர் புணர்த்த சமாதி பெயர் - பெயர்ச்சொல் மிகையை - 'அதிக வசனம்' என்பர் (௨௫)

இவ்வியலுக்குப் புறனடை

௨௬. ஏற்ற செய்யுட் கியன்ற வணியெலாம்
முற்ற வுணர்த்தும் பெற்றிய தருமையிற்
காட்டிய நடைநெறி கடைப்பிடித்
கூட்டி யுணர்த லான்றோர் கடனே

(இ - ள்) உலகத்து நிலைபெறுடைய செய்யுளனைத் திறத்தும் பொருந்திய அணிவேறுபாடெல்லாம் ஒழிவின்றி யுணர்த்தும் பெற்றி அரிதாகலான், காட்டப்பட்ட ஒழுக்க நெறியே பற்றுக்கோடாக இவற்றோடுங் கூட்டிக்கொண் டுணர்தல் முற்றக் கற்றோரது கடனும் (எ - று)

மாங்கனியும், தீம்பாலும், வருக்கைச் சுளையும், சருக்கரையும் தம்முள் வேறுபட்ட சுவையவெனினும் கூறுவது மதுரமொன்றன்றே? அதுபோல, எழுத்துச்செறிவும், சொற்செறிவும், பொருட்செறிவும் செறிவென்றே சொல்லுவதல்லது, பிறிதொரு வகை பேசிற் பெருகிய அகல முடைத்தாமெனக் கொள்க ஒழிந்தனவும் அன்ன

(கு - ரை) இவ்வளவால் யாது கூறியதோவெனின், பொருள் எளிதில் விளங்கத் தக்கதாய்ச் சொல்வன்மை யில்லாததாய் விளங்குகின்ற மிடுக்கில்லாத நடையொன் றுண்டு, அது வைதர்ப்பம் எனப் பெயர் பெறுமெனவும், பொருளாழ்ந்ததும் சொல் வன்மையுமுள்ள மிடுக்கான நடையொன்றுண்டு, அது கௌடம் என்று பெயர் பெறு மெனவுங் கூறியதாயிற்று எந் நடைக்கும் ஓசையுடைமையும் ஆழமுடைமையும் இருத்தல் வேண்டும் (௨௬)

பொதுவணியியல் முற்றிற்று

# ௨. பொருளணியியல்

காபபு

௨௭ எனனை யுடையாள கலைமடநதை யெவவுயிரககும
அனனை யுடைய வடிததளிரகள—இனனளிசூழ
மெனமலரககே கனறு மெனவுரைபபர மெயயிலா
வனமனத்தே தஙகுமோ வநது

(இ - ள) (மிகவும இழிவான) எனனை யடிமையாக வுடையாள, கலைமடநதை, எலலா வுயிருககுந தாயாயுளள வளது தளிராகிய அடியிணைகளானவை, இனிதாகிய பண முரலும வணடுகள சூழகினற மிருதுவாகிய மலரின மீது மிதிபபினுங கனறுமெனறு சொலலாநிறபர, இததனமை யாகிய தளிரடிகள, உணமையறற கடினமாகிய என மனத தினகண வநது நிலையாக நிறகும (எ - று)

ஓகாரம - அசை

(கு - ரை) தஙகுமோ எனற ஓகாரததை வியபபுப பொருளதாகக கொளளினும அமையும, இனி, எதிரமறை யாககொணடு தஙககடவனவோ? அலல என உரைதது, கவி தனமனததின இழிவைப புலபபடுததிய தாககுதலும ஒனறு கலை மடநதை எனபது சரசுவதியைக குறிககும போது, கலை - கலவியும, அபபெயர வன தாககையைக குறிககும போது, கலை - மானுமாம மடநதை - பெண பணமுரலும - இசைபாடும கனறும - வாடும ஊரும - வாகனமாகக கொணடு ஏறி நடததும ஓ அசை (௧)

பொருளணிகள

௨௮ தனமை யுவமை யுருவகந தீவகம
பினவருநிலையே முனன விலககே
வேறறுப பொருளவைபபே வேறறுமை விபாவனை
ஒடடே யதிசயந தறகுறிப பேறறம
ஏது நுடப மிலேச நிரனிறை
ஆரவ மொழிசுவை தனமேமபாடடுரை

பரியா யம்மே சமாயிதம் முதாத்தம்
அரிதுணர் அவநுதி சிலேடை விசேடம்
ஒப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோதம்
மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமிவை
[1]ஏற்ற செய்யுட் கணியே ழைந்தே

இவ்வியல் பொருளானும் அணிகள் இயல்புணர்த்தினமையால், பொருளணியோத் தென்னும் பெயர்த்து. அஃதேல், சொல்லா லுணர்த்தப்படும் அணி யீண்டுணர்த்திலரோ வெனின், மிகுதி பொருண்மேலதாகலான் மிகுத்தன்று பெயர் கொடுக்கப்பட்டது.

இவ்வியலினுள் இச்சூத்திரம், அலங்காரங்களின் பெயரும், முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) தன்மையும், உவமையும், உருவகமும், தீவகமும், பின்வருநிலையும், முன்னவிலக்கும், வேற்றுப் பொருள் வைப்பும், வேற்றுமையும், விபாவனையும், ஒட்டும், அதிசயமும், தற்குறிப்பேற்றமும், ஏதுவும், நுட்பமும், இலேசமும், நிரனிறையும், ஆர்வமொழியும், சுவையும், தன்மேம்பாட்டுரையும், பரியாயமும், சமாயிதமும், உதாத்தமும், அவநுதியும், சிலேடையும், விசேடமும், ஒப்புமைக் கூட்டமும், விரோதமும், மாறுபடுபுகழ்நிலையும், புகழாப்புகழ்ச்சியும், நிதரிசனமும், புணர்நிலையும், பரிவருத்தனையும், வாழ்த்தும், சங்கீரணமும், பாவிகமும் என இவை முப்பத்தைந்தும் மேற்கூறிய செய்யுட் கலங்கார மென்று சொல்லப்படும் (எ - று).

இவை யெல்லாம் உம்மை தொக்கது எண்ணேகார மிடையிட் டெண்ணப்பட்டவற்றை அவ்வும்மை விரித் துரைக்கப்பட்டன. தன்மையும் உவமையு மென விரித் துக்கொள்க.

அஃதேல், இது முறைமையாயினவா றென்னையோ வெனின், இயல்பு விகாரமென விரண்டல்லது வேறில்லை,

1 ஏற்ற செய்யுட் கியன்ற வணியே எனவும் பாடம்.

அவறறுள தனமை, இயலபாகலான முறகூறபபடடமுறை மைததாயத தனமையெனறுஞ சொனனமை யெனறுஞ சொலலபபடும உவமை விகாரமாய மிகக வரவிறறாயப பினவருகினற பலவலஙகாரஙகட குபகார முடைததாக லாற றனமையினபின வைககபபடடது ஒழிநதனவும வைததவா றயததுணாநதுகொளக ஈணடுரைபபிற பெரு கும அலலதூஉம தொலலாசிரியா சொலலிய நெறி யெனினு மமையும

இனி 'ஏறற' எனறதனுற சில செயயுட கேறறுச சில செயயுட கேலாதனவு முள வொருதிறததணி யெனக கொளக

'அரிதுணரவருதி' எனறு சிறபபிதத வதனுற சிறபபு முதலானவற றணமை மறுககுஙகால அம மறையானே, ஒரு புகழதோனற வைககபபடுமெனபது அஃது அத னிலககணங கூறும வழியே யுணாநதுகொளக 'மெயபபடு விரோதம' எனபதறகு மெயயென அடைகொடுததது தமிழாசிரியா முரணெடாடை யெனறு தொடைபபாற படுததுச செயயுட குறுபபாககினறா, இவவாசிரியாதனே யலஙகாரததினபாற படுததினாாகலினவ வேறுபா டறிவித தறகெனக கொளக இவையெலலாம மேறகூததிரச சுருகக நோககி ஈணடுரைககபபடடன ஒழிநத வகல முரையிற கொளக

(கு - ரை) இதிற கூறபபடும பொருளணிகளுள 'தீவகம' பினவருநிலை, நிரனிறை, சிலேடை, விரோதம முதலிய சில அணிகள ஒருசாா சொலலைபபறறி நிறறலால, 'மிகுதி பொருள மேலதாதலால, மிககதனுற பெயா கொடுககபபடடது' எனறுா தனமை முதல வாழததது ஈறுகவுளள முபபதது மூனறு அணிகளும தனியே வருவன, சஙகீரணமும பாவிகமும முறையே பல அணிகள சோநதும காபபிய முழுவதிலும அமைநதும வருவன, இவவேறுபாடு தோனற, இடையில 'ஒடு' கொடுததுப பிரிததாா சஙகீரணம பாவிகம எனற முறைமைககுக காரணமும இதனுல விளஙகும (உ)

## ௧. தன்மை யணி

தன்மை, சுபாவம் (இயல்பு) தன்மையெனினும், தன்மை நவிற்சியெனினும் ஒக்கும். இதனை முதனூலார் சுவபாவோக்தி என்பர். சுவபாவம் - தன்மை, உக்தி - சொல்லுதல்.

௨௯. எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்கும்
சொன்முறை தொடுப்பது தன்மை யாகும்.

என்பது, நிறுத்தமுறையானே தன்மையென்னு மலங்காரத்துப் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எவ்வகைப்பட்ட பொருளும், மெய்ம்மைக் கூறுபாட்டான் விளக்குஞ் சொன்முறையாற் பாடப்படுவது தன்மையென்னும் அலங்காரமாம் (எ - று.)

(வி - ரை.) மெய்ம்மைக் கூறுபாட்டான் - உண்மையின் வகையினால். இவ்வணி பொருளின் இயல்பை நேரிற் பார்த்தாற்போலத் தோன்றுமாறு உள்ளபடி விளங்கச் சொல்லுவது. அங்ஙனம் சொல்லுங்கால், 'உண்டு வளர்ந்தான்,' 'இரண்டு கண்ணன்,' 'ஓடிவந்தான்' என்றாற்போல யாதொரு சமத்காரத்துக்கும் இடமில்லாதபடி கூறின், அது அணியாகாதென்றும், இரசிகர்கள் கேட்டு உவக்கும் படியானதோர் தன்மை நிகழக் கூறினால் மாத்திரமே அணியாகுமென்றும் அறிக. இஃது, எல்லா வணிகளுக்கும் பொதுவாம். (௩)

௩0. அதுவே,
பொருள்குணஞ் சாதி தொழிலொடு புலனும்.

(இ - ள்.) அத்தன்மை பொருளும், குணமும், சாதியும், தொழிலும் என்னும் இவைபற்றித் தோன்றும் (எ - று.)

(வி - ரை.) பொருட்டன்மை, குணத்தன்மை, சாதித்தன்மை, தொழிற்றன்மை எனத் தன்மையணி நான்கு வகைப்படும் என்க.

இவற்றுள்—க-வது, பொருட்டன்மை வருமாறு —

பொருட்டன்மை - பொருளிடத்துள்ள பலவிதமான இயல்புகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது.

நேரிசை வெண்பா

"நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன
நூலணிந்த மார்ப னுதலவிழியன—தோலுடையன
கைமமான மறியன கனனமழுவன கச்சாலை
எமமா னிமையோாக கிறை" எனபது

(இ - ள) கருங்குவளை போன்ற அழகிய மிடற்றினை யும, முடியின் கண்ணே நீண்டுருக்கப்பட்ட சடையினையும மார்பினிடத்தே யணியப்பட்ட முப்புரி நூலினையும நெற்றியின்கட் சோந்த விழியினையும், உடையாக அசைத்த தோலினையும, கரதலத் தேந்திய மானினையும, கனல போன்ற மழுவினையும, திருக்கச்சாலை யென்னும திருப பதியினையு முடையவனுய எம்மை யாண்டுகொண்ட பெரி யோன இமையவாக்குத் தலைவன (எ - று)

அன் சாரியை, நீலமணி போன்ற மிடற்றின னென்வு மனமயும மிடற்றன, சடையன, மார்பன, விழி யன எனச செவவெண்ணுக்கினு மமையும 'கனமழுவன' எனப பாடமோதிப 'பெரிய மழுவினன' எனபாரு முளா கனலையும மழுவையுமுடைய னென்றுக்கினும அமையும 'கச்சாலை எம்மான' என்றது - கச்சாலையிலே யுறையும பெரியோ னென்னு மமையும

(கு - ரை) இங்கே கச்சாலை யெம்மான எனபது பொருள கருதிய வாசகம நீலமணி மிடறுடைமை முதலி யன அப்பொருளிடத்துள்ள தன்மைகள மிடறு-கழுத்து அசைத்த - கட்டிய தோல - புலித்தோல இப பாட்டி லுள்ள 'மிடற்றன' முதலியவற்றை அனவிகுதி பெற்ற ஆண்பால பெயர்களாகக கொள்ளுதலே நேர' செவ வெண - எண்ணும்மை தொக்கது கனல மழு - சொலிக கின்ற மழு (வினைத்தொகை) இஃது ஒருருவின் தன்மை யைக கூறியதலை, பொருட்டன்மையாம

உ வது குணத்தன்மை வருமாறு —

குணத்தன்மை - குணத்திலுள்ள பலவிதமான தன்மைகளை உள்ளவாறே அலங்கரித்துக கூறுவது

### நேரிசை வெண்பா

"உள்ளங் குளிர வுரோமஞ் சிலிர்த்துரையுந்
தள்ளவிழ் நீரரும்பத் தன்மறந்தாள் — புள்ளலைக்குந்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத பொன்' என்பது

(இ - ள்) நெஞ்சமானது குளிர மெய்ம்மயி ரரும்பி மாற்றமுந் தளரக் கண்ணிலே புனல் தோன்றத் தன்னுருவத்தையு மறந்தாள் புட்குலம் அலைக்கா நின்ற மது நிறைந்த தாமரையையுடைய பழனஞ் சூழ்ந்த தில்லைப் பொதுவின்கண்ணே அழகுடைத்தாகிய கூத்தையாடுகின்ற (சபாபதியின்) பொலிவினையுடைய (திருவடித்) தாமரையை வணங்கின பொன்னனை யொப்பாள் (எ - று)

'உரையுந் தள்ள' என்னு மும்மையால் நாணம், மடம், அச்சம், பயிர்ப்புந் தளர வெனக் கொள்க

(கு - ரை) இங்கே மறந்தாள் என்பது குணங்கருதிய வாசகம் உள்ளங் குளிர்தல் முதலியன மறத்தலாகிய குணத்தோடு நிகழும் அதன் தன்மைகள் மறத்தற்கண் அக் குணங்கள் இயல்பாக நிகழுமா றறிக தில்லைப் பொது - சிதம்பர சபை இது கடவுளைத் தொழுதலா லாகும் ஆனந்தத்தின் தன்மையைக் கூறியதனால், குணத் தன்மையாம்

௩-வது, சாதித்தன்மை வருமாறு —

சாதித்தன்மை - சாதியிலுள்ள பலவிதமான தன்மைகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது சாதியாவது ஒரு நிகரன வாகிய பல பொருளுக்குப் பொதுவாக நிற்பதோர் தன்மை

### நேரிசை வெண்பா

"பத்தித் தகட்ட கறைமிடற்ற பைவிரியும்
துத்திக் கவைநாத் துளையெயிற்ற — மெய்த்தவத்தோர்
ஆகத்தா னம்பலத்தா னாரா வமுதணங்கின்
பாகத்தான் சூடும் பணி" என்பது

(இ - ள்) பத்தியாகிய வரைகள் பொருந்திய வயிற்றினையுடையனவாய்க் கருமையாகிய மிடற்றினை யுடையன வாய்ப் படத்தின்கண் பொறி நிறத்தையும், இரண்டு பிரி

வான நாவையும், புரையையுடைய பலவினையு முடையனவா யிருப்பன மெய்யாகிய தவத்தினை யுடையோர் அகத்தின கண் ணுள்ளான, அம்பலத்திலே சிறப்பான, பருகாத அமுதமன்ன உமாதேவியின் பாகத்தையுடையான் சூடும் பணிகள் (எ - று)

பதித்த அகட்ட என்பது பதித்த தகட்டவென விகாரமாயிற்று அகத்தா னென்பது ஆகத்தானென முதனீண்டது

(சூ - ரை) பணி என்றது ஆபரணமென்றும், பாம் பென்றும் பொருள்படும் இது சாப்ப சாதியின் தன்மை யைக் கூறியதனால், சாதித்தன்மை

ச-வது, தொழிற்றன்மை வருமாறு —

தொழிற்றன்மை - தொழிலினுள்ள பலவிதமான தன்மைகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது

நேரிசை வெண்பா

"சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்
தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும்—வீழ்ந்தபெரும்
பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை
வாசத்தார் நீங்காத வண்டு"　　　　என்பது

(இ - ள்) பாசநீங்கிய முத்தர்களை விட்டு நீங்காத பரஞ்சோதியின் வாசனையையுடைய பசுமையாகிய கொன் றைமாலையைப் பிரியாத வண்டு சூழ்ந்து பண்ணை முரன்று சேரச்சென்று மணத்தைச் செறிந்து மீதே பறந்து விரும்பி மதுவை யுண்டு தாதைக் கோதா நிற்கும் (எ - று)

ஆசிரியப்பா

"மான்ஞேற் பள்ளி மகவொடு முடங்கி
ஈன்பிணை வொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல
உளிவாய்ச் சுரையின் மிளிர மண்டி
விடுநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்புல லடக்கிய வெண்பல லெயிற்றியர்
பார்வை யாத்த பறைதாள் விளவின்
நிழன் முற்றி னிலவுரற் பெய்து"　　　　என்பது மது

இஃது இலக்கியத்திற் சிறுபான்மை, இலக்கணத்துள்ளே பயின்று வருவதெனக் கொள்க.

(கு - ரை) இது வண்டின் தொழிலைக் கூறியதனால், தொழிற்றன்மை. சூழ்ந்து முரலுதல் முதலியன தாதுண்ணுதற்கண் இயல்பாக நிகழுந் தன்மைகள். (௪)

## உ உவமையணி

௩௧ பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை.

(இ - ள்) பண்பு, தொழில், பயன் என்பன காரணமாக ஒன்றாகியும், பலவாகியும் வரும் பொருளோடு பொருளினைய வைத்து ஒப்புமை புலப்படப் பாடுவது உவமையென்னு மலங்காரமாம் (எ - று).

ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்தலாவது—ஒரு பொருளோடு ஒரு பொருளும், ஒரு பொருளோடு பல பொருளும், பலபொருளோடு பலபொருளும், பல பொருளோடு ஒரு பொருளும் இயையப் புணர்த்தல்.

(கு - ரை) புணர்த்துச் சொல்லப்படும் அவ்விரு பொருள்களுள்ளே, ஒப்புமை யறிதற்குக் காரணமாய் நிற்கும் பொருள் உபமானம் எனவும், அதனால் உவமிக்கப் படும் பொருள் உபமேயம் எனவும் சொல்லப்படும்.

க-வது பண்புவமை வருமாறு —
"பவளத் தன்ன மேனி" எனவும்,
"வேய் புரை பணைத்தோள்" எனவும்,
"தெம்முனை யிடத்திற் சேய்கொல்
அம்மா வரிவை யவர்சென்ற நாடே" எனவும் வரும்.
உ-வது தொழிலுவமை வருமாறு —

ஆசிரியப்பா

"அரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்
றிருமா வளவன்" எனவும்,
"களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல" எனவும் வரும்.

௩-வது பயனுவமை வருமாறு —

ஆசிரியப்பா

"மாரி யன்ன வண்கைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே" எனவும்,
"செற்றார்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை"
எனவும் வரும்.

அஃதேல்,
"வேய்புரை பணைத்தோள்"
என்பது, வடி வுவமை எனவும்,
"தெம்முனை யிடத்துச் சேய்கொல்"
என்பது, எல்லையுவமை எனவும் சொல்லுபவா லெனின்,

சூத்திரம்

"வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
இன்ன திதுவென வரூஉ மியற்கை
என்ன கிளவியும் பண்பின் றொகையே"

என்புழி வடிவும் பண்பெனக் கூறினார் ஆசிரியர் தொல்காப்பியனார். சேய்மை யணிமை யென்பனவும், அளவாகலாற் பண்பெனப்படும்.

இனி, ஒருபொருளோ டொருபொருள் —
"செவ்வா னன்ன மேனி" எனவும்,

ஒரு பொருளோடு பலபொருள் —
"அவ்வான், இலங்குபிறை யன்ன விளங்குவால் வையெயிறு"
எனவும்,

பல பொருளோடு பல பொருள் —
"களிறெறி சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே" எனவும்,

பல பொருளோ டொருபொருள் —
"பெரும்பெயர்க் கரிகாலன் முன்னிலைச் செல்லார்
பீடின் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே" எனவும் வரும்.

அஃதே லுவமையும் பொருளும் ஒத்தபண்பு மாவன யாவை யெனின், 'பவளம் போலுஞ் செவ்வாய்' என்புழிப் பவளம் உவமை

யென்றும், உவமானமென்றும் படும் வாய் பொருளென்றும், உவமேயமென்றும் படும் செம்மை இரண்டற்கும் பொதுவாகிய குணமென்றும் போறு மென்பது உவமையுருபிடைச்சொல் இஃது பண்புகாரணமாக வந்த உவமை யெனப்படும் இதனை உவமை யென்றதென்னெனின், 'பவள வாய்' என்பதனைத் தொகையுவமை யென்றும், 'பவளச் செவ்வாய்' என்பதனை விரியுவமை யென்றுங் கூறிடவாகலின், அல்லதூஉம், 'பவளம்போலச் செய்ய வாய்' என்பதனை முற்றுவமை யென்றுங் கூறுபவாகலின்

ஈண்டு உவமை யலங்கார மென்பது அத்தொடர்ச்சொன் முழுவது மெனக்கொள்க

மற்றும் **பண்பியும், பண்பும், தொழிலும், பயனும்** எனக் கூறப்படுவன நான்கு அவற்றுள்,

**பண்பி**யென்பன காட்சிப்பொருளுங் கருத்துப்பொருளு மாகிய இயங்குதிணையு நிலைத்திணையு மாம்

**பண்**பென்பன அவற்றின் குணமாயத் தோன்றித் தமக்கு வேறு குணமின்றி நிகழ்வன

**தொழி**லென்பன அவற்றின் புடைபெயர்ச்சியாய்க் காலம் புணர்ந்து நிற்பன

**பய**னென்பன அவை காரணமாகப் புலப்படுங் காரியம்

பண்பியாகிய ஒரு பொருட்கு ஒரு பொருள் உவமையாங்கால், இரண்டற்கும் பொதுவாகியதோர் குணம் எதுவாகலானும், தொழில் எதுவாகலானும் பயன் எதுவாகலானும், ஒப்பித் துரைக்கப்படும் 'என்றிவற்றின்' என்பதனுள், பண்பு-தொழில் பயனென்பன, ஒரோவொன்றேயன்றிப் பலவுங் காரணமாகவரும் அவை —

"கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கான நாடன்" என்பது தொழிலும், பண்பும்

"காந்த, ளணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டிற் றோன்றும்"
என்பது பண்பும், தொழிலும்

அல்லதூஉம், அவ்விலேசானே பண்பு தொழில் பயனென்பனவே யன்றிச் சொற்புத்தமை காரணமாகவும், பிறகாரணமாகவும் வரும் உவமையலங்காரமென்பது அவை முன்னர் உரைக்கப்படும்

ஒப்புமை தோன்ற என்றதனால், அவ்வுவமை கேட்போருளங் கொண்டு விளக்கத் தோன்றுவதே யாகல்வேண்டும், யாதானு மொரு முகத்தாற் கூறற்க வென்பது (௫)

உவமை வகை

௬௨ அதுவே,
விரியே தொகையே யிதர விதரம்
உரைபெறு சமுச்சய முண்மை மறுபொருள்
புகழ்ந்த னிந்தை நியம மநியமம்
ஐயந் தெரிதரு தேற்ற மினச்சொல்
லெய்திய விபரீத மியம்புதல் வேட்கை
பல்பொருள் விகார மோக மபூதம்
பலவயிற் போலி யொருவயிற் போலி
கூடா வுவமை பொதுநீங் குவமை
மாலை யெனனும் பால தாகும்

(இ - ள்) அச் சொல்லப்பட்ட வுவமையலங்காரம், விரியுவமையும், தொகையுவமையும், இதரவிதரவுவமையும், சமுச்சயவுவமையும், உண்மையுவமையும், மறுபொருளுவமையும், புகழுவமையும், நிந்தையுவமையும், நியமவுவமையும், அநியமவுவமையும், ஐயவுவமையும், தெரிதருதேற்ற வுவமையும், இனச்சொலுவமையும், விபரீதவுவமையும், இயம்புதல்வேட்கை யுவமையும், பல்பொருளுவமையும், விகாரவுவமையும், மோகவுவமையும், அபூதவுவமையும், பலவயிற்போலி யுவமையும், ஒருவயிற்போலி யுவமையும், கூடாவுவமையும், பொதுநீங்குவமையும், மாலையுவமையும் எனனும் இருபத்துநான்கு பாகுபாடுடையதாம், (எ - று)

இவையெல்லாஞ் சொல்லின் முடியு மிலக்கணத்த வாகலாற் பெரும்பானமையும் தம்பொருளே யிலக்கணம் புலப்படுத்தும், அல்லது உரையினுங் கொள்க

அவற்றுள், க-வது விரி யுவமை யென்பது, பண்பு முதலியன விரிந்து நிற்பது

நேரிசை வெண்பா

வ - று "பாலபோலு மின்சொற் பவளம்போற் செந்துவர்வாய்
சேலபோற் பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்
புயல்போற் கொடைக்கைப் புனனாடன் கொல்லி
அயல்போலும் வாழ்வ தவர்" என்பது.

(இ - ள்) பாலைப்போல இனிதாகிய சொல்லினையும், பவளத்தைப் போன்றுச் சிவந்து விளங்கிய வாயினையும், சேலைப்போலத்துப் பிறழ்தலால் விளங்கிய அழகினை யுடைத் தாகிய நெடிய கண்ணினையுமுடைய அவர் வாழுமிடம், மின்னும் முழக்கமும், காலவரையுமின்றிச் சான்றோராலே புகழ்ப்பட்டு போந்த நெறியே ஒழுகிய மறைபோன்று கொடுத்தலால் விளங்கிய கையை யுடையனாகிய சோழ னுடைய கொல்லிமலைப் பக்கம்போலும், (எ - று)

உ-வது **தொகை யுவமை** யென்பது பண்பு முதலியன தொக்கு நிற்பது.

### நேரிசை வெண்பா

ஐ - று "தாமரை வாண்முகத்துத் தண்டரளம் போன்முறுவல்
காமரு வேய்புரைதோட் காரிகையீர்!—தேமருவும்
பூங்குழலின் வாசப் பொறைசுமந்து சோர்ந்ததோ
பாங்குழலுந் தென்றற் பரிசு" என்பது

(இ - ள்) தாமரைபோன்ற ஒளியையுடைய முகத் தினையும் குளிர்ந்த முத்துப்போன்ற நகையினையும், அழகு மருவிய வேய்போன்ற தோளினையு முடைய மாதரீர்! உம் முடைய பக்கத்திலே புலாவுகின்ற தென்றலின் றன்மை உம்முடைய தேன் பொருந்திய பூவினையுடைத்தாகிய குழலின்கண்ணுண்டாகிய நறுநாற்றப் பாரத்தைத் தாங்கிக் கொண்டு வருகின்ற வருத்தத்தாற்றோ மெலிவிய வுருவுடைத் தானது? சொல்லுவீராக, (எ - று)

ந-வது **இதரவிதர வுவமை** யென்பது, பொரு ளொருகா லுவமையாயும், உவமை பொருகாற் பொருளாயும் ஒரு தொடர்ச் சிக் கண்ணே வருவது

(கு - ரை) பொருள் - உபமேயம்

### நேரிசை வெண்பா

வ - று "களிக்குங் கயல்போலு நுங்கணுங் கண்போற்
களிக்குங் கயலுங் கனிவாய்த்—தளிர்க்கொடியீர்!
தாமரைபோன் மலரு நும்முக நும்முகம்போற்
தாமரையுஞ் செவ்வி தரும்" என்பது

(இ - ள்) கொவ்வைக் கனிபோன்ற வாயினையுடைத் தாய்த் தளிரோடு கூடிய கொடிபோன்ற மடவீர்! செருக்

கினை யுடைத்தாகிய கயல்போன்ற தன்மையை யுடைத்தா யிருந்தன நும்முடைய நாட்டங்களானவை இத்தன்மைத் தாகிய வும்முடைய நாட்டங்களிற் குவமையாகின்றன, கயற்குலமானவை இஃதன்றியே, உம்முடைய முக மண்டலமானது தாமரைபோன மலராநின்றது, அத் தன்மைத்தாகிய தாமரை உம்முடைய முகமண்டலம் போலச் செவ்வியினை யுடைத்தாகின்றது, (எ - று)

நேரிசை வெண்பா

" தளிபெற்று வைகிய தண்சுனை நீலம்
அளிபெற்றார் கண்போ லலரும்—அளிபெற்ற
நல்லார் திருமுகத் தாற்ற ளிபெற்ற
கல்லாரம் போன்மலருங் கண் " என்பது

(இ - ள) மழையை யேற்றுக்கோட்லிற் றட்பத்தை யுடைத்தாகிய சுனையின்கண் ணிருக்கின்ற நீலப்பூவானது தலைவரா னலம் பாராட்டப்பெற்ற மடவார் கண்ணேபோல மலரா நின்றது, அத்தன்மைத்தாக அளிபெற்ற மடவா ருடைய அழகிய முகமண்டலத்து மிக்க குளிர்ச்சியை யுடைத்தாகிய கண்களும் நீலம்போல மலரா நின்றன,
(எ - று)

௬-வது சமுச்சய வுவமை யென்பது, அதனை யொப்ப தித் துணையன்றி யிதனு னொக்கு மென்பது

நேரிசை வெண்பா

வ - று " அளவே வடிவொப்ப தன்றியே பச்சை
இளவேய நிறத்தானு மேய்க்கும்—துளவேய
கலைக்குமரி போர்துளக்குங் காரவுணர் வீரம்
தொலைக்குமரி யேறுகைப்பா டோள் " என்பது

(இ - ள) துழாய மாலையைச் சூடிய கலைமடந்தை யாகிய கன்னி, போரிட்டுப் பகைவரை நடுக்கஞ் செய்யும் கருமையான நிறத்தையுடைய அசுரரின் ஆண்மையைக் கெடுக்கும் சிங்கப்போத்தை வாகனமாகவுடையாள் தோள் களைப் பசிய இளவேயானது அளவினானும் வடிவினானு மொப்பதன்றிப் பசுமை நிறத்தானு மொக்கும், (எ - று)

௭-வது உண்மை யுவமை யென்பது, உவமையைக் கூறி மறுத்துப் பொருளினையே கூறி முடிப்பது

நேரிசை வெணபா

வ - று ' தாமரை யனறு முகமே யிவையும
காமருவண டலல கருநெடுஙகண—தேமருவு
வலலி யினல ளிவளென மனஙகவரும
அலலி மலாககோதை யாள" எனபது

(இ - ள) இது தாமரை மலரனறு முகமே, இவையும அழகு மருவிய வணடலல கறுதது நீணட கணகளே, தேன மருவபபடட கொடியலலள இவள மடநதையே இததனமையாகிய அவயவஙகளுடைய இவள எனனுளளங கவரும அகவிதழகளையுடைய பூவாற செயயபபடட மாலையினை யுடையாள, (எ - று)

இன - சாரியை

௬-வது மறுபொருளுவமை யெனபது, முனனா வைதத பொருடகு நிகராவதோா பொருட பினனா வைபபது

நேரிசை வெணபா

வ - று "அனனைபோ லெவவுயிருந தாஙகு மனபாயா
னினனையா ரொபபாா நிலவேநதா—அனனதே
வாாிபுடை சூழநத வையகததிற கிலலையால
சூாியனே போலுஞ சுடா" எனபது

(இ - ள) தாயினை யொபபாக எவவகைபபடட உயிாகளையும தாஙகு மனபாயனே! நிலததிலுணடாகிய வேநதாில உனனை யொபபாருமிலலை, அதுபோலக கடல சூழநத வையகததிறகுச சூாியனை யொககுஞ சுடருமிலலை, (எ - று)

எ-வது, புகழுவமை யெனபது, உவமையைப புகழநது உவமிபபது

நேரிசை வெணபா

வ - று "இறையோன சடைமுடிமே லெஞஞானறுந தஙகும
பிறையோ திருநுதலும பெறற—நிறைகடலசூழ
பூவலயந தாஙகு மரவின படமபுரையும
பாவைநின லகுற பரபபு" எனபது

(இ - ள) ஒலிககினற கடலாற சூழபபடட நிலப பரபபைத தாஙகுகினற சேடனுடைய படபபரபபை ஒக

கின்றது உனது அல்குல் அதுவேயன்றி, முக்கட்கடவுண் முடியினைப் பிரியாது எந்நாளுந் தங்கும் பிறையினுடைய அழகினை நின்னுடைய அழகிய நுதலும் பெற்றது, ஆத லால், பாவாய்! நின்னுருவத் தன்மை யிருந்தபடியென, (எ - று)

அ வது நிந்தை யுவமை யென்பது, உவமையைப் பழித்து உவமிப்பது

நேரிசை வெண்பா

வ - று "மறுப்பயின்ற வாணமதியு மம்மதிக்குத் தோற்கும் நிறத்தலரு நேரொக்கு மேனும்—சிறப்புடைத்துத் தில்லைப் பெருமா னருள்போற் றிருமேனி முல்லைப்பூங் கோதை முகம்" என்பது

(இ - ள்) தில்லைக்கட் கூத்தாடுகின்ற பெரியோன் அருளையொத்த அழகிய மேனியினையுடைய, முல்லைப் பூவாற் செய்யப்பட்ட கோதையினை யுடையாள் முகமானது மறுப் பிரியாத ஒளியினையுடைத்தாகிய மதியமும், அம் மதியத்திற்குக் கருகுகின்ற தாமரை மலரும் உவமிக்கப் பொருந்துமெனினுஞ் சிறப்புடையது, (எ - று)

க-வது நியம வுவமை யென்பது, இன்னதற்கு இன்னதே யுவமையா மென்த் தேற்றேகாரம் புணர்த்துத் துணிந்து சொல்லு வது

நேரிசை வெண்பா

வ - று "தாதொன்று தாமரையே நின்முக மொப்பதுமற் றியாதொன்று மொவ்வா திளங்கொடியே!—மீதுயர்ந்த சேலே பணியப் புலியுயர்த்த செம்பியர்கோன் வேலே விழிக்கு நிகர்" என்பது

(இ - ள்) இளங்கொடியை ஒப்பாய்! எல்லாருடைய கொடிக்கு மேலாகிய வுயர்ந்த பாண்டியனுடைய சேற் கொடி தாழ்த் தனது புலிக்கொடி யுயர்த்த சோழனுடைய வேலே விழிக்கு நிகராவது தாதுக்கள் பொருந்தியிருக் கப்பட்ட தாமரைமலரே நின்முகத்தை யொப்பது இஃ தல்லது உன் விழியினையு முகத்தினையு முலகத் துண்டாகிய யாவும் ஒவ்வா, (எ - று)

ஏகாரம் - அசை

௧௦-வது அநியம வுவமை யென்பது, நியமித்த உவமையை விலக்கிப் பிறிது உடம்படுப்பனவா மென்பது.

நேரிசை வெண்பா

உ-று 'கௌவை விரிதிரைக் காவிரிசூழ் நன்னாட்டு
மௌவல் கமழுங் குழன்மடவாய்'— செவ்வி
மதுவார் கவிரிதழே வாய்போல்வ தன்றி
அதுபோல்வ துண்டெனினு மாம்"

(இ - ள்) ஆரவாரத்தையும் பரந்த திரைகளையு முடைத்தாகிய காவிரிசூழ் நன்னாட்டின்கண் மௌவற் பூவாற் செய்த மாலையானது நாறப்பட்ட குழலினையுடைய மடவாய்! செவ்வியும் தேனும் நிறைந்த முருக்கிதழே நின் வாயை யொப்பது அதுவன்றி, அப்பூப்போல்வது உலகத் துண்டாயினும் நின் வாயை யொக்கும், (எ - று)

௧௧-வது ஐய வுவமை யென்பது, உவமையையும் பொருளையும் ஐயுற் றுரைப்பது.

நேரிசை வெண்பா

உ-று "தாதளைந் துண்டு நறுமாறுந் தாமரைகொல்
மாதார் விழியுலவு வாண்முகங்கொல்—யாதென
திருபாற் கவருற் றிடையூச லாடி
ஒருபாற் படாதென துளம்"

(இ - ள்) தாதைக் கலந்து வண்டுகள் சூழப்பட்ட தாமரை மலரோ காதலைச் செய்யப்பட்ட விழியுலவுகின்ற ஒளியினையுடைய முகமண்டலமோ என்னென்று என் மனமானது ஊசலைப்போ லாடி இருதலைப்பட்டு ஒன்றன் கட் டுணிகின்றதில்லை, (எ - று)

௧௨-வது தெரிதருதேற்ற வுவமை யென்பது, ஐயுற்றதனைத் தெளிந்து துணிவது.

நேரிசை வெண்பா

உ-று "தாமரை நாண்மலருந் தண்மதியால் வீறழியும்
காமர் மதியுங் கறைவிரவும்—ஆமிதனால்
பொன்னை மயக்கும் புனைசுணங்கி னாள்முகமே
என்னை மயக்கு மிது"

(இ - ள்) காலை மலருந் தாமரையும் குளிர்ந்த மதி னாலே அழகு கெடும், அழகிய மதியும் களங்கத்தோடு

கூடியிருககும, ஆதலால, எனனை மயககரு செயத இது, பொனனை யொபபாக அலஙகரிககபபட்ட சுணஙகினை யுடையாளுடைய முகமே, (எ - று)

கஅ-வது இன்சொலுவமை யெனபது, பொருளினு முவமைக கோர மிகுதி தோனறக கூறி யுவமிதது, இனன மிகுதியை யுடைததேனும ஒபபதனறிச சிறநததன றெனபது

நேரிசை வெணபா

வ - று "மானவிழி தாஙகு மடககொடியே! நினவதனம
மானமுழுது நதாஙகி வருமதியம—ஆனாலும
முறறிழை நலலாய! முகமொபப தனறியே
மறறுயாசசி யுணடோ மதிககு"

(இ - ள) நிறைநத அணிகளையுடைய நலலாய! நின னுடைய முகமானது மானினவிழி யொனறனையே தாஙகா நினறது, (ஆகாயததினகண) வருகினற மதியானது மானின அவயவமுழுதுந தாஙகாநினறது, இபபடி முழுவ துந தாஙகினும நின முகததை யொபபதனறியே விசேட முடைததாகவறறோ அமமதியம? (எ - று)

கசு-வது, விபரீத வுவமை யெனபது, மேறசொனனபடி உவமை யாய வருவதனைப பொருளாககிப, பொருளாய வருவதனை யுவமை யாககி யுரைபபன

நேரிசை வெணபா

வ - று "திருமுகம போனமலருஞ செயய கமலம
கருநெடுஙகண போலுங கயலகள—அரிவை
இயலபோலு மஞஞை யிடைபோலும கொமபா
மயலபோலும யாமபோம வழி"

(இ - ள) அரிவையுடைய திருமுகததை யொகக மலரும சிவநத கமலம, கறுதது நெடிதாகிய கணகள போலும கயலகள, சாயலபோலும மயில, மருஙகுல போலும கொமபு, ஆதலால, இவவழியில யாம போகினற போககு மயலபோலும, (எ - று)

மயல - ஆசை

ஆசிரியபபா

"ஓவத தனன வொணடுறை மருஙகின
கோவத தனன கொஙகுசோ புறைதலின

வருமுலை யனன வணமுகை புடைநது
திருமுக மவிழநத தெயவத தாமரை" எனபதூஉமது

கரு-வது இயல்புதல்வேட்கை யுவமை யெனபது, பொருளை இனனது போலுமெனறு சொலல வேடகினற தெனனுளள மெனபது

### நேரிசை வெணபா

வ - ரு.

"நனறுதீ தெனறுணரா தெனனுடைய நனனெஞசம
பொனறுதைநத பொறசுணஙகிற பூஙகொடியே'—மனறல
மடுததலைநத தாமரையின வாணமுகததிற கொபபென
றெடுததியமப வேணடுகினற தினறு"

(இ - ள) பொனறுதைநத போலு மழகிய சுணங கினையும பொலிவினையு முடைததாயக கொடியை யொப பாய! நனறு தீ தெனபதனை யொனறுந தெளியாது நறு நாறறததை யுடைததாய மடுவிடததுநினறு தயஙகாநினற தாமரை நினனொளியினை யுடைததாகிய முகததிற கொப பாமெனறு எடுததுரைககவேணடுகினறது, இனறு என னெஞசம, (எ - று)

கசு-வது பலபொருளுவமை யெனபது, ஒருபொருடகுப பல வுவமை காடடுவது

### நேரிசை வெணபா

வ - று "வேலுங கருவிளையு மெனமானுங காவியும
சேலும வடுவகிருஞ செஞசரமும—போலுமால
தேமருவி யுணடு சிறைவண டறைகூநதற
காமருவு பூஙகோதை கண"

(இ - ள) மதுவை விருமபியுணடு சிறைவணடு முரல கினற கூநதலையும, அழகிய மாலையையு முடையாளுடைய கணகளானவை வேலையும, கருவிளை மலரையும, மிருது வாகிய நோககததையுடைய மானையும, காவிமலரையும, சேலையும, மாவடுவையும, செவவிய சரததினையும போலும, (எ - று)

ஆல அசை

கஎ-வது விகார வுவமை யெனபது, ஒருவமையை விகாரப படுததி யுவமிபபது

### நேரிசை வெணபா

உ - ற "சீத மதியி னொளியுஞ செழுஙகமலப
போதின புதுமலாசசி யுஙகொணடு—வேதாதன
கைமமலரா னனறிக கருததால வகுததமைததான
மொயமமலாபபூங கோதை முகம"

(இ - ள) செறிநத மலாகளாற பொலிவுபெறற கூநத லினை யுடையாள முகததினைப பிரமன குளிாநத மதியினக ணுணடாகிய ஒளியினையும, செழிதத கமலபபோதி னுண டாகிய புதிய மலாசசியையுங கொணடு, தன கைததா மரையினானறித தனனுளளக கருததா னமைததான (எ - று)

### ஆசிரியபபா

"முததுககூாத தனன முளையிளங கூரெயிறறு
மணிதொடுத தனன வைமபான மறுததுடைதது
மதியமவைத தனன வாணமுகத தொகுதி"

எனவும வரும

கஅ-வது, **மோகவுவமை** யெனபது, ஒரு பொருணமே லெழுநத வேடகையானவநத உளள மயககந தோனற உரைபபது

### நேரிசை வெணபா

வ - று "கயலபோலு மெனறுநின கணபழிபபல கணணின
செயலபோற பிறழுந திறததாற—கயலபுகழவல
ஆரததா னோமருஙகு லநதாள வாணமுறுவல
ஈரததா னுளவெதுமபும யான"

(இ - ள) முததினற செயயபபடட பூணுல வருநதா நினற மருஙகுலினையும, அழகிய முததினுடைய ஒளி போனற முறுவலினையு முடையாய! உனனுடைய குறிப பினால மனமழியும யான, கயலபோலுமெனறு நின கணணினைப பழிபபன, நின கணபோற பிறழுந திறபபாட டாற கயலைப புகழவன, (எ - று)

(கு - ரை) பிறழுதல - விளஙகுதல ஆரம - முதது வடம ஈரம - குறிபபு இதனை மயககவுவமை யென வழங குதலு முணடு இஙகு உவமை கூறுமிடதது மதிமயகக முணமை தோனறக கூறினமை காணக

௧௯-வது, அபூதவுவமையென்பது, முன்பு இல்லதனை உவமையாக்கி யுரைப்பது.

நேரிசை வெண்பா

௯ - று "எல்லாக் கமலத் தெழிலுந் திரண்டொன்றின்
வில்லேர் புருவத்து வேனெடுங்கண்—நல்லீர்!
முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழும்
அகம்போலு மெங்க ளகம்"

(இ - ள்) வில்லினையொத்த புருவத்தினையும், வேல்போன்ற நெடிய கண்ணினையுமுடைய நல்லீர்! உம்முடைய முகத்தினை யொக்கும் எங்குமுள்ள கமலப் பூக்களின் செவ்வியும் சேர்ந்தொன்று மாயினென்ன, முறுவலைச் செய்தார் மருவிவாழு மிடம்போலும் எங்களுள்ளம், (எ - று)

அஃதேல், விகாரவுவமையோ டிதனிடை வேற்றுமை யென்னை யெனின், விகாரவுவமை, பிறரான் விகாரப்பட்டதாகக் கொண்டு அஃதொன்றற்கு உவமையாக்கி யுரைப்பது இஃது அன்னதன் றெனக்.

(கு - ரை) இதனை இல்பொருளுவமையென வழங்குதலுமுண்டு.

௨0-வது, பலவயிற்போலியுவமை யென்பது, ஒரு தொடர்மொழிக்கண் பல உவமை வந்தால் வந்த உவமைதோறும் உவமைச் சொற்றொடர்ப் புணர்ப்பது.

நேரிசை வெண்பா

௰ - று மலர்வாவி போலவார் மாதர் கமல
மலர்போலு மாதர் வதனம்—மலர்சூழ்
அளிக்குலங்கள் போலு மளக மதனுடைக்
களிக்குங் கயல்போலுங் கண்"

(இ - ள்) கமல மலர்ந்த வாவிபோலவார் மாதர், கமலமலர்போலும் மாதர் வதனம், மலர்சூழ் அளிக்குலங்கள் போலும் அளகம் அதனுள் களிக்காநின்ற கயல்போலுங் கண்கள், (எ - று)

௨௧-வது, ஒருவயிற்போலியுவமை யென்பது ஒரு தொடர்மொழிக்கண் பலவுவமை வந்தால், அவ் வந்த உவமைதோறும் உவமைச்சொற் புணராது ஒருவமைச்சொற் புணர்ப்பது.

(நு - ரை) ஒரு வயிறபோலி - ஓரிடததிறபோல எனனும உவமவுருபுடையது

நேரிசை வெணபா

வ - று 'நிழறகோப மலக நிறைமலாபபூங காயா
சுழறகலவ மேலவிரிதத தோகை—தழறகுலவு
தீமபுகை யூடடுறு செறிகுழலாா போலுஙகாா
யாமபிரிநதோாக கெனறு மினி"

(இ - ள) காயாமலரி னிழலினகண இநதிரகோபனு செறிய, அப பொலிவினையுடைய காயாவின நிறைநத மலரின சூழலிலே தன கலாபததை விரிதத மயிலானது தழலினகட டோனறிய நறுமபுகையினையூடடும செறிநத குழலினையுடைய மடவாரைபபோலுங காாகாலம, யாம பிரிநதுபோகபபடடாருககு எனறு மினி? (எ - று)

உஉ-வது, **கூடாவுவமை** யெனபது, ஒரு பொருடகுக கூடாத வதனைக கூடுவதாககொணடு அதனை யொனறறகு உவமையாககி யுரைபபது

நேரிசை வெணபா

வ - று "சநதனததிற செநதழலுஞ தணமதியில வெவவிடமும
வநதனவே போலுமா னுமமாறறம—பைஙதொடியீா!
வாவிக கமல மதிமுகஙகண டேககறுவாா
ஆவிக கிவையோ வரண"

(இ - ள) பைஙதொடியீா! சநதனததினகண செந தழலும, குளிாநத மதியினிடதது வெவவிய விடமும பிறநதாறபோலும, நுமமுடைய வாாததைகள, ஆனால, குளிாநத வாவியிடததுக கமலமலரும மதியமுமபோலும முகஙகணடேககறுவாா ஆவிககிவையோ காவல (எ - று)

உந-வது **போதுநீங்குவமை** யெனபது, உவமையைக கூறி மறுததுப பொருடனனையே யுவமையாக உரைபபது

நேரிசை வெணபா

வ - று "திருமருவு தணமதிககுஞ செநதா மரையின
விரைமலாககு மேலாந தகையால—கருநெடுஙகண
மானே! யிருளளககு சூழநதவின வாணமுகம
தானே யுவமை தனககு"

(இ-ள்) கரிய நெடிய கண்களையுடைய மானே! குளிர்ந்த மதிக்கும், திரு மருவப்பட்ட சிவந்த தாமரையினது நறுநாற்றத்தையுடைய மலருக்கும் மேலாகிய தன்மையை உடைத்தாகலான், இருளாகிய அளகஞ்சூழ்ந்த நின்னொளியினையுடைய முகந்தானே தனக்கு உவமையாம், (எ-று)

திரு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம்

(கு-ரை) இப்பொருளுக்கு ஒப்பு வேறொன்றுமில்லை யென்பது இதன் கருத்து

உ௪-வது, மாலையுவமை யென்பது ஒரு பொருட்குப் பல வுவமை வந்தால் அவை யொன்றினொன் றிடைவிடாது தொடர்ச்சி யுடையவாகப் புணர்த்துக் கடைக்கண் பொருள்கூட்டி முடிப்பது

நேரிசை வெண்பா

உ-று "மலயத்து மாதவனே போன்று மவன்பா லலைகடலே போன்று மதனுட—குலவும் நிலவலய மேபோன்று நேரியன்பா னிற்கும் சிலைகெழுதோள் வேந்தர் திரு"

(இ-ள்) பொதிய மலையிடத்து அகத்தியனைப் போன்றும், அவனுண்ணப்பட்ட அலையையுடைய கடல் போன்றும், அதனு ளுண்டாகிய நிலவட்டம் போன்றும், சோழனுடைய இடத்தே பொருந்தே நிற்கும், விற்பயின்ற தோள்களையுடைய வேந்தர் செல்வம், (எ-று) (௧)

௩௩ அற்புதஞ் சிலேடை யதிசயம் விரோதம்
ஒப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்
விலக்கே யேதுவென வேண்டவும் படுமே.

என்பது, இவ்வுவமை யலங்காரம் பிற வலங்காரங்களோடுங்கூடி வருமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்) அற்புதமும், சிலேடையும், அதிசயமும், விரோதமும், ஒப்புமைக் கூட்டமும், தற்குறிப்பேற்றமும், விலக்கும், ஏதுவும் எனச் சொல்லப்பட்ட எட்டலங்காரங்களோடு கூடியும் வரும் அவ்வுவமை யலங்காரம் (எ-று)

அவற்றுள், க-வது, அற்புதவுவமை

நேரிசை வெண்பா

உ - று "குழையருகு தாழ்க் குனிபுருவந் தாங்கி
உழைய ருயிர்பருகி நீண்ட—விழியுடைத்தாய்
வண்டே றிருளளகஞ் சூழ வருமதியொன்
றுண்டே லிவண் முகத்திற் கொப்பு"

(இ - ள்) குழை தாழ்ந்த முகத்தினையுடைத்தாய், வளைந்த புருவத்தினையுடைத்தாய்ப், பக்கத்தினின்றுங் கண்டாருடைய உயிரை உண்டு வளர்ந்த கண்களையுடைத்தாய்ச், சுரும்புகளாலே மேவப்பட்டிருக்குங் குழலைச் சூழக் கொண்டு வருவதொரு மதியமுண்டாயின் இவளுடைய முகத்திற்கொப்பாம், (எ - று)

௨௫-வது, சிலேடையுவமை அஃது இருவகைப்படும், செம்மொழிச் சிலேடை யுவமையும், பிரிமொழிச்சிலேடை யுவமையும், என

அவற்றுள், (1) **செம்மொழிச் சிலேடை யுவமை.**

நேரிசை வெண்பா

வ - று ‘ செந்திருவுந் திங்களும் பூவுந் தலைசிறப்பச்
சந்தத் தொடையோ டணிதழுவிச்—செந்தமிழ்நூல்
கற்றார் புனையுங் கவிபோன் மனங்கவரும்
முற்றா முலையாண் முகம்

(இ - ள்) திருவென்றும், திங்களென்றும், பூவென்றுஞ் சொல்லப்பட்ட இவற்றது பெயரை முதற்கண்ணே யுடைத்தா யோசையோடு கூடிச், சொற்கோவையோடு அலங்காரம் புணர்ந்து, பயின்றுருள்ளங் கவருந்தன்மை யுடைத்தாய்ச், செந்தமிழ் நூல் கற்றாராலே சொல்லப் பட்ட கவிபோலத், திருவினுருவத்தையுந் திங்களினுரு வத்தையும் பூவையும் உச்சிமீதி லுடைத்தாய், நிறத்தோடுங் கூடியிருந்துள்ள பூமாலையோடும் அழகு தழுவிப் பயின்று ருள்ளங்களைக் கவரு முகம், (எ - று)

இனிக் கவிமேற் செல்லுங்கால் சந்தம் - ஓசை, தொடை - சொற்கோவை, அணி அலங்காரம் எனவும்,

முகமேற் செல்லுங்கால் சந்தம் - நிறம், தொடை - மாலை, அணி - அழகு எனவும் வரும்

(2) **பிரிமொழிச் சிலேடை யுவமை**

நேரிசை வெண்பா

வ-று "நளிதடத்த வல்லியின் கண்ணெகிழ ஞாலத்
தளவி னிறைகடாஞ் சிந்திக்—களிறிகலும்
கந்த மலையா நிலவுங் கவட்டசைய
வந்த மலையா நிலம்"

(இ-ள்) செறிவினையும், பெருமையினையுமுடைய (காலிலே செறிந்திருக்கின்ற) விலங்கினைக் கண் அறத் தரை மீது நிறைந்த கடாம் பொழியத் தறியைச் சிறிப் புரைசைக் கயிறு அசைய வரும் யானைபோன்று, தென்றல் பெரிய பொய்கைப் பூவலவித் தேன் சோர உலகத்தார் நிறைகளை யழித்து விரை கமழ நெருங்கிய பணைகளை யசைத்து வருகின்றது, (எ-று)

யானையின்மேற் செல்லுங்கால் நளி - செறிவு தடம் - பெருமை வல்லி - விலங்கு கண் - பூட்டுவாய் நெகிழ்தல் - கழலுதல் ஞாலம் - பூமி நிறைகடாம் - பெரிய மதம் சிந்தி - பொழிய கந்து - தறி மலையா - சீறி நிலவுதல் - பொருந்துதல் கவடு - புரைசைக் கயிறு அசைய - ஆட வந்த - வரும் எனவும்,

தென்றன்மேற் செல்லுங்கால் நளி - பெருமை தடம் - பொய்கை அல்லி - பூ கள் - தேன் நெகிழ்தல் - சோர்தல் ஞாலம் - உலகம் நிறை - ஒழுக்கம் சிந்தி - அழித்து கந்தம் - விரை அலைதல் - நாறுதல் நிலவுதல் - பொருந்தல் கவடு - மரக்கொம்பு அசைதல் - அலைதல் எனவும் வரும்

இதனைச் சந்தான உவமை என்பாரு முளர் சந்தான மென்பது - இரண்டு பொருளுக்கு உபகாரமாயிருக்குஞ் சொற்களாலே கட்டப்படுவது இதனை இவ்வகை வேறு படுத்துக் காட்டிய தென்னையெனின், மேல், பண்பு முதலியனவே யன்றிச் சொற்பொதுமை காரணமாகவும் உவமை புணர்க்கப்படு மென்றூர், அது காட்டற் கென்க

௩-வது, அதிசய வுவமை

நேரிசை வெண்பா

வ-று "நின்னுழையே நின் முகங் கண்டு நெடுந்தடம்
தன்னுழையே தன்னையுங் காணுவம்—என்னும்

இதுவொன்று மேயன்றி வேறுமை யுண்டோ
மதுவொன்று செந்தா மரைக்கு"

(இ - ள்) நல்லாய், நின்னிடத்திலே நின் முகத்தினைக் காணுகின்றேம், பெரிதாகிய பொய்கையிலே தாமரையையும் காணுகின்றேம் என்கிற இத்தன்மையே யன்றி வேறுபாடு கண்டிலேம், மதுவினையுடைத்தாகிய தாமரைக்கும் நின்முகத்தினுக்கும், (எ - று)

(த - ரை) உறை - இடம் இங்கே உவமேயமாகிய மூலத்திற்கு "நின்னுறையே" எனவும், உவமானமாகிய தாமரைக்குத் "தடந்தனுறையே' எனவும் இரண்டிற்கும் வேறு வேறு கண்டோர் கூறி, இதனாலன்றி வேறு பேதமில்லை என்பதனால் அதிசயந் தோன்றியவாறு அறிக

நேரிசை வெண்பா

வ - று "பாலினிடை நீல மணித்திறஞ்சோ பான்மைபோல்
ஞாலம் பரந்த நகைநிலவு—மாலிருளாம்
வைம்மருவு மூவிலைவேல் வன்கட் டமருகக்கைச்
செம்மல் கருமாமை சேர்ந்து" என்பது அது

(இ - ள்) நீலமணியானது பாலைச் சேர்ந்து தன்னொளியைப் பாலுக்குக் கொடுத்தாற்போலக், கூர்மை மருவிய மூன்று தலையையுடைய சூலத்தையும், வலிய கண்ணை யுடைய தமருகத்தையுமுடைய கையனாகிய பரமசிவன் (மிடற்றிலுண்டாகிய) கறுத்த நிறத்தைச் சேர்ந்து உலகத்திற் பரந்த வெண்மையுடைய நிலவும் பெரிய இருணிறம் பெற்றது, (எ - று)

ச-வது, விரோத வுவமை

நேரிசை வெண்பா

வ - று 'செம்மை மரைமலருந் திங்களு நும்முகமுந்
தம்மிற் பகைவிளக்குந் தன்மையவே—எம்முடைய
வைப்பாகுஞ் சென்னி வளம்புகார் போலினியீர்!
ஒப்பாகு மென்பா ருளர்"

(இ - ள்) நமது தனமாகிய சோழனது வளவிய புகார் போன்ற இனிமையையுடையீர்! சிவந்த தாமரை மலரும் மதியமும் நுமது முகமும் தம்முள்ளே பகை

பெருக்கு தன்மையா யிருக்க, இவற்றை யுவமைக்குப் பொருந்து மென்பாரு முளர், இதற்குக் காரணஞ் சொல்லுவாமினி, (எ - று)

(ந - ரை) வைப்பு-தானம் (ந்தி) சென்னி-சோழனை

௯-வது, ஒப்புமைக்கூட்டவுவமை

நேரிசை வெண்பா

௨-று 'விண்ணின்மேற் காவல் புரிந்துறங்கான் விண்ணவர்கோன்
மண்ணின்மே லன்னை உயவேந்தே—தண்ணளியில்
சேரா வவுணர் குலங்களையுந் தேவர்கோன்
நேராமே லத்தகையை நீ"

(இ - ள்) விண்ணின்மே லுண்டாகிய உலகத்தைக் காக்குந் தொழிலின் மிக்கு உறங்கானாயினன், தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரன், மண்ணின்மே லுண்டாகிய உலகங்களைக் காக்கவேண்டி, வலிமையுடைய வேந்தனே! நீயும் உறங்காவாயினை, உள்ளங் குளிர்ந்து பிறரைக் காக்குந் தன்மையிற் சேராத அசுரர் குலங்களைக் களையா நிற்கும் இந்திரன், சத்துருக்களிடத்திலே நீயும் அத்தன்மையை, (எ - று)

௰-வது, தற்குறிப்பேற்றவுவமை

நேரிசை வெண்பா

வ-று "உண்ணீர்மை தாங்கி யுயர்ந்த நெறியொழுகி
வெண்ணீர்மை நீங்கி விளங்குமால்—தண்ணீர்த்
தடம்போலு மென்னத் தருகடம்பை மாறன்
கரம்போற் கொடைபொழிவான் கார்"

(இ - ள்) (முதுவேனிற் காலத்தில்) தடத்தி லுண்டாகிய குளிர்ந்த நீர்போல(ச் சேர்ந்தோர் யாவருக்கும் வருத்தம் நீங்கக்) கொடுக்க வல்ல கடம்பை யென்னும் பதியி லுண்டாகிய மாறனென்னும் இயற்பெயரை யுடையவனது கரம்போலக் கொடுப்பானினைந்து, மேகமானதும், உள்ளே நீரையுடைத்தா யுயர்ந்த வானெறியே நடந்து வெளுத்த தன்மையை நீங்கி விளங்காநின்றது, (எ - று)

இவன் கையும், பிறர்க்கு நீர் பெய்து கொடுக்குந் தொழிலானே நீர் புலராது உலகத்தார் கைகளுக்கு மேலா

கப பயினறு சிவநத தனமையை யுடைததாய விளஙகுதல கணடுகொளக தணணீரத தரமபோலு மெனனத தருங கர மெனக கூட்டுக இதறொழில் கைககேறற மெனக

எ-வது, விலக்குவமை

நேரிசை வெணபா

௨ ௱ "குழைபொருது நீணடு குமிழமேன மறியா
உழைபொருதென னுளளங கவரா—மழைபோல
தருநெடுஙகைச் சென்னி தமிழநா டனையார
கருநெடுஙகண போலுங கயல"

(இ - ள) மழையைபபோலக கொடுககவலல பெரிய கையினையுடைய சென்னியுடைய தமிழ நாட்டை யொபபா ருடைய கரிய நெடிய கணபோலும், கயலும், சஙகொடு பொருது வளாநது நீரககுமிழி மேலே மறிநது தனனிடத திலே பொருதும், எனனுளளததைக கவரமாட்டா எனற விதனனே, கணணும காதிலுணடாகிய குழையோடு சேரநது வளாநது குமிழுககுமீதே தாவுவதுபோனறு மானின விழியோடு பகைதது எனனுளளததைக கவரு மென னினறவாறு காணக, (எ - று)

கயல்மேற செலலுஙகால —குமிழ-நீரககுமிழி குழை-சஙகு உழை - பககம கவாதல - கொளளுதல எனவும், கணணின்மேற செலலுஙகால —குழை-மகரககுழை நீளதல-வாாதல குமிழ - மூககு மறிதல - தாவுதல உழை - மான பொருதல - பகைததல சென்னி - சோழன தமிழநாடு - சோணாடு எனவும வரும

அ-வது, ஏது உவமை

நேரிசை வெணபா

௨-௱ "வாளரவின செமமணியும வனனியிளம பாசிலையும
நாளினைய திஙக ணகைநிலவும—நீளொளியால
தேனுலவு பூஙகொனறைத தேவாகோன செஞசடைமேல
வானுலவு விறபோல வரும"

(இ - ள) ஒளியினையுடைய அரவின சூட்டினுண டாகிய மணியானது சிவநத வொளியை மிகுக்கலானும,

வன்னியாகிய மரகதத்தின் இளைய இலை தன்னுடைய பசு மையை மிகுத்தலானும், துகவித் திங்களானது தன்னுடைய வெண்மையை மிகுத்தலானும், தேனுல்வப்பட்ட பொலிவையுடைய கொன்றையினது பூ தன்கண்ணுண்டாகிய பொற்கென்ற நிறத்தை மிகுத்தலானும், தேவர்கட்குத் தலைவனாகிய முக்கட் கடவுளுடைய சிவந்த சடையானது வானம் துண்டாகிய வில்லுப்போலத் தோன்றுகின்றது, (எ - று)

அஃதேல், உவமையை விரித்த சூத்திரங்களெல்லாம் ஒன்றாக்கி யுரையாது இரண்டாக்கி யுரைத்த தென்னை யெனின், மேலைச் சூத்திரத்திற் சொல்லப்பட்டன "சொல்லின் முடிவினப்பொருள் முடித்தல்" என்னுந் தந்திர வுத்தி யான இவை "எதிரது நோக்கம்" என்னுந் தந்திரவுத்தி யாகலான் இரண்டாக வைத்தா ரென்பது

(நு - ரை) முந்தின சூத்திரத்திற் சொல்லப்பட்ட விரியுவமை முதலியன தத்தம் பெயரிலேயே தமது இலக்கணம் தோன்ற நின்றதனால், "சொல்லின் முடிவின் அப் பொருள் முடித்தல் என்னும் தந்திரவுத்தியின்" என்றும், இச்சூத்திரத்தில் வந்த அற்புதவுவமை முதலியன "எதிரது போற்றல்" என்னும் உத்தியால் மேல்வருகிற அவ்வவ்வணியின் இலக்கணத்தை நோக்கிக் கூறப்பட்டன வாதலால், 'எதிரது போற்ற லென்னுந் தந்திரவுத்தியின்' என்றுங் கூறினர்

௩௪ மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும்
பான்மாறு படுதலும் பாகுபா டுடைய

என்பது, அவ்வுவமைக் கெய்தியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) உவமேய அடைக்கு உவமான அடை மிகப் புணர்தலும், உவமேய அடைக்கு உவமான அடை குறையப் புணர்தலும், இழிந்த உவமையோடு உயர்ந்த பொருளுவமையாகலும், உயர்ந்த உவமையோடு இழிந்த பொருளுவமையாகலும், ஆண்பாற்குப் பெண்பா லுவமை

பாகலும, பெணபாறகு ஆணபா லுவமையாகலும, ஒருமைபபாறகுப பனமைபபா லுவமையாகலும, பனமைப பாறகு ஒருமைபபா லுவமையாகலுமாகிய வேறுபா டுடைய, (எ - று)

வேறுபா டெனபது, புனபுலவா புணாககுஙகால நனபுலவரால வேறுபடுததுச சிறபபினமையிற குறற மெனக கூறபபடுவதூஉம, அலலதூஉம நனபுலவராற சிறபபுடையவெனறு கொளளப புணாககபபடுவதூஉமா மெனக

அவறறுட சில வருமாறு —

நேரிசை வெணபா

"நீலப புருவங குனிய விழிமதாபப
மாலைக குழலசூழநத நினவதனம—போலும
கயலபாய வாசங கவருங களிவண
டயலபாய வமபோ ருகம"

(இ - ள) நீல நிறததையுடைய புருவமானது முரியக, கணமதாபபப பூமாலையையுடைய குழலாற சூழபபடட நினனுடைய முகமபோனறது, கயலமிளிர, மதுவை புணணபபடட களிதத சுருமபு பககததிலேயே பரவ, மலாநத தாமரை, (எ - று)

இதனுள உவமையாகிய முகததிற புருவ முரிவிற கொபபொனறு, பொருளாகிய தாமரைககண புணராமை யின, உவமேய அடைககு உவமான அடை மிககு வழுவா யிறறு

(கு - ரை) இஙகு, 'நீலபபுருவங குனிய' எனறது பயனினறி நினறதனால, வழுவெனபபடடது

நேரிசை வெணபா

'நாடடங தடுமாறச செவவாய நலஙதிகழத
தீடடரிய பாவை திருமுகம—காடடுமால
கெணடைமீ தாட நறுஞசே யிதழகிளர
வணடுசூழ செநதா மரை"

(இ - ள) மீதே கண தடுமாறி யுலாவச, சிவநத வாய அழகெறிபப, எழுதறகரிய உருவையுடைய பாவை

போன்றாள் திருமுகத்தை யொவ்வா தின்றது நீடு கெண்டை யுகள, நறு நாற்றத்தை யுடைத்தாய சிவந்த இதழ் விளங்க, வண்டாற் சூழப்பட்ட சிவந்த தாமரை (எ - று)

திட்டரிய பாவை - கொல்லியம்பாவை, இதனுள், பொருளாகிய தாமரைக்கண் வண்டொழுக்கிற் கேற்ப வோருவமை உவமையாகிய முகத்துக்கண் தோன்றப் புணர்த்தலின்மையின், உவமேய அடைக்கு உவமான அடை குறைந்து குற்றமாயிற்று

(ந - வர) 'வண்டுசூழ்' என்றது பயனின்றி நின்ற தளை, வழுவாயிற்று

நேரிசை வெண்பா

'மன்னவர்க்கு நாய்போல் வன்புடையார் வாள்வயவர்
மின்மினியும் வெஞ்சுடரோன் போல்விளங்கும்—அன்னப்
பெடைபோலுஞ் சந்திரன் பைந்தடங்கள் போலும்
மிடைமாசொன் றில்லா விசும்பு"

(இ - ள) வேந்தரிடை நாயிடத்துண்டாகிய நற் செய்தியைச் செய்தலால், வாளினையுடைய வலியோர் நாயை யொப்பர், மின்மினியும், வெய்ய சுடரோனைப்போல விளங்கும், அன்னப்பெடையை யொக்கும், மதியம், பசிய தடங்களைப்போலும், செறிந்திருக்கப்பட்ட மாசில்லாத ஆகாயம், (எ - று)

இதனுள், 'மன்னவர்க்கு நாய்போல் வன்புடையார் வாள்வயவர்' என்புழி, இறப்ப இழிந்தது இனைத்தாகப் புணர்க்கப்பட்டது உவமை

'மின்மினியும் வெஞ்சுடரோன்போல விளங்கும்' என்புழி மின்மினிக்கு நிகராகக லாகாத வெஞ்சுடரை யுவமிக்க, உவமை வழுவாயிற்று

'அன்னப்பெடை போலுஞ் சந்திரன்' என்புழி, ஆண்பாற்குப் பெண்பா லுவமையாய்க் குற்றமாயிற்று

'பைந்தடங்கள் போலு, மிடைமாசொன் றில்லா விசும்பு' என்புழி, ஒருமைப்பாலுக்குப் பன்மைப்பாலை உவமை காட்ட வழுவாயிற்று, பிறவுமன்ன

இனி, வழுவினறி வருஞ செயயுளை வநதுழிக காணக மிகுதல, குறைதல, தாழதல, உயாதல, பானமாறுபடுதன முதலியன குறறமேனும, குணம மிகுழிக கொளக (அ)

நகு போல மானப புரையப பொருவ
நேரக கடுபப நிகர நிகாபப
ஏர வேய மலைய வியைய
ஒபப வெளள வுறழ வேறப
அனன வனைய வமர வாஙக
எனன விகல விழைய வெதிரத
துணைதாக காணடாஙகு மிகுதகை வீழ
இணைசிவண கேழறறுச செததொடு பிறவு
நவைதீர பானமை யுவமைச சொலலே

எனபது, இடைநிறகும உவமைச சொறகளை யுணாததுதல நுதலிறறு

(இ - ள) போல முதல செதது ஈருகச சொலலைப பட்ட முபபதுதைநதும, இவை போலவன பிறவும, குறற மறற பாகுபாடுடைய உவமைச சொலலாம (எ - று)

பாகுபாடுடைய எனறதனால, போல வெனபது 'புலி போலும மறவன' எனப பெயரெசசமாயும, 'புலிபோல வநதான' என வினையெசசமாயும வரும, பிறவு மனன

பிறவு மெனறதனால, நாட, நக, நடுஙக, நநத, களள, கருத, காடட, மினிர, ஏயபப, மருள எனபன முதலியன வுங கொளக

இவறறுள தொகககும விரிநதுமதொகாதே விரிநதும நிறபன வெலலாங கணடுகொளக

ந உருவகவணி

நகா உவமையும பொருளும வேறறுமை யொழிவித
தொனறென மாடடினஃ துருவக மாகும

(இ - ள்) உவமையாம் பொருளையும், உவமிக்கப் படும் பொருளையும், வேறுபா டொழித்து ஒன்றென் பதோ ருள்ளுணர்வு தோன்ற வொற்றுமை கொளுத்தின் அஃது உருவகமென்னும் அலங்காரமாம்.

(கு - ரை) உவமானம் உவமேயம் என்னும் இரண் டிற்கும் பேதமின்மை தோன்றச் சொல்லப்படுவது உருவக வணி என உணர்க. இதன் இலக்கணம் —உவமேயத்தில் உவமானத்தை ஏற்றிக் கூறுதல்; ஒற்றுமை கொளுத்து தல் - பேதமில்லாதாக்கல்.

௩௭ தொகையே விரியே தொகைவிரி யென்றா
இயைபே யியைபில் வியநிலை யென்றாச்
சிறப்பே விருபகஞ் சமாதான மென்றா
உருவக மேக மநேகாங்க மென்றா
முற்றே யவயவ மவயவி யென்றாச்
சொற்றவைம் மூன்று மற்றதன் விரியே.

என்பது, அவ்வுருவகமென்னும் அலங்காரத்தை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அச்சொல்லப்பட்ட உருவக அலங்காரம், தொகை யுருவகமும், விரியுருவகமும், தொகை விரியுருவக மும், இயைபுருவகமும், இயைபி லுருவகமும், வியநிலையுரு வகமும், சிறப்புருவகமும், விருபகவுருவகமும், சமாதான வுருவகமும், உருவகவுருவகமும், ஏகாங்கவுருவகமும், அநேகாங்கவுருவகமும், முற்றுருவகமும், அவயவவுருவக மும், அவயவியுருவகமும் எனச் சொல்லப்பட்ட பதினைந்து பாகுபா டுடையதாகும்.

அவற்றிற்கு உருவகமென்னுஞ் சொல்லும், ஏக மென்பதனோடு அங்கமென்னுஞ் சொல்லுங் கூட்டியுரைக்க. இவை யெல்லாஞ் சொல்லின் முடியு மிலக்கணத்தன.

அவற்றுள், க-வது, தொகையுருவகம் என்பது, ஆகிய வென்னும் மாட்டேற்றுச்சொற் றொகுத்துக் கூறுவது.

நேரிசை வெண்பா

வ - று "அங்கை மலரும் மடித்தளிரும் கண்வண்டும்
கொங்கை முகிழுங் குழற்காரும்—தாங்கியதோர்
மாதர்க் கொடியுளதா னண்பா! வதற்கெழுந்த
காதற் குளதோ கரை"

(இ - ள்) அழகிய கையாகிய மலரினையும், அடியாகிய தளிரினையும், கண்ணாகிய வண்டினையும், கொங்கையாகிய அரும்பினையும், குழலாகிய மேகத்தினையு முடைத்தாய்ப் பிறக்குஞ் காதல் செய்ய வற்றாயிருப்பதொரு கொடி யுளது, (நான் நேருநற் கண்டது,) நண்பனே! அக்கொடிமே லெழுந்த காதலுக்கெல்லை யுலகத் துண்டோவெனில், இல்லையாயிருந்தது, (எ - று)

உ-வது, விரியுருவகம் என்பது அச்சொல் விரிந்து நிற்பது

(சூ - ரை) அச்சொல்-உருவக உருபு அவை-ஆகிய, ஆக என்பன

நேரிசை வெண்பா

வ - று "கொங்கை முகையாக மென்மருங்குல் கொம்பாக
அங்கை மலரா வடிதளிரா த—திங்கள்
அளிநின்ற மூர லணங்கா மெனக்கு
வெளிநின்ற வேனிற் றிரு"

(இ - ள்) கொங்கை அரும்பாக, நுண்ணிடை வஞ்சிக்கொம்பாக, அழகிய கையே மலராக, அடி தளிராக, நிலவுபோல வெள்ளிய வொளியினையுடைத்தாய், என்மேல் வைத்த தண்ணளி யுடைத்தாகிய நகையினையுடைத்தாய் (நேருநல்) தோன்றிய அணங்குபோன் றிருந்தாள், (இப் பொழுது) எனக்கு இளவேனிற் காலத்தைக்கொண்டு வெளிப்பட்ட திருவை யொப்பாள், (எ - று)

இவை யிரண்டும் எல்லாவற்றிற்கும் பொது விலக்கணம் இதனுடனொகையை முற்கூறியது, உவமை விரித்த சூத்திரம் நோக்கி "முந்து மொழிந்தது தலைதடு மாற்றம்" என்னுந் தந்திர வுத்தியான்

ரு-வது, தொகைவிரி யுருவகம் என்பது, அச்சொற்றொக்கும் விரிந்தும் நிற்பது.

நேரிசை வெண்பா

உ - று "வையந் தகழியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டுவன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று"

(இ - ள்) உலகமே தகழியாகவும், நெடிய கடலே நெய்யாகவும், வெம்மையையுடைய பகலவனே விளக்காகவும், சிவந்த நிறத்தையுடைத்தாகிய சக்கரத்தையுடையா னடிக்கே சேர்த்துவன் சொல்லினாற்றொடுத்த மாலையை, என்னுடைய துக்கமாகிய கடல் வறப்பதாக, (எ - று)

ச வது, இயைபுருவகம் என்பது, பலபொருளை உருவகஞ் செய்யுங்கால் தம்முள் இயைபுடையவாக வைத்து உருவகஞ் செய்வது

(ரு - ஏ) இயைபு - சம்பந்தம்

நேரிசை வெண்பா

வ - று "செவ்வாய்த் தளிரு நகைமுகிழுங் கண்மலரும்
மைவா ரளக மதுகரமும்—செவ்வி
உடைத்தாந் திருமுகமென் னுள்ளத்து வைத்தார்
துடைத்தாரே யன்றோ துயர்"

(இ - ள்) சிவந்த வாயாகிய தளிரினையும், நகையாகிய முல்லை அரும்பினையும், கண்ணாகிய மலரினையும், கரிய நீண்ட அளகமாகிய வண்டினையும், செவ்வியினையுமுடைய கண்டாரால் விரும்புந் தன்மையுடைத்தாகிய முகத்தை யென்னுள்ளத்திலே வைத்தார் இதனாலே என்னுடைய உள்ளத்திலுண்டாகிய துயரத்தை நீக்குவா ரன்றோ, சொல்லுவீராக, (எ - று)

இதனுள் - தளிரும், முகிழும், மலரும், மதுகரமும், தம்முளியைபுடைமையின், அப்பெயர்த்தாயிற்று

ரு-வது, இயைபிலுருவகம் என்பது, பல பொருளுந் தம்முளியையாமை வைத்து உருவகஞ் செய்வது

நேரிசை வெண்பா

வ - று "தேன்க் கலாக்கொன்றை பொன்னாகச் செஞ்சடையே
கூன்ற பவளக் கொடியாகத்—தான்
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்
புழையார் தடக்கைப் பொருப்பு"

(இ - ள) மதுவைக காலபபடட கொனறைமலா பொனனுகவும, சிவநத சடை வளாநது நனமையுடைத தாகிய பவளககொடியாகவும, மதம மழையாகவும, மருபபு மதியாகவும தோனறு கினறது, துளையையுடைததாகிய பெரிய கையையுடைய யானையாகிய மலை, (எ - று)

'தடககைபபொருபபு' எனறது விநாயகரை

௬-வது, **வியநிலையுருவகம்** எனபது, ஒனற னஙகம பலவறறி னுளளுஞ சிலவறறை உருவகஞ செயதும, சிலவறறை உருவகஞ செயயாதும உரைதது அஙகியை உருவகஞ செயது உரைபபது

(கு - ரை) அஙகி - அஙகததையுடையது (அவயவி)

நேரிசை வெணபா

வ - று “செவவாய நகையருமபச செஙகைத தளிரவிளஙக
மைவா ணெடுஙகண மதாததுலவச—செவவி
நறவலருஞ சோலைவாய நினறதே நணபா!
குறவா மடமகளாங கொமபு”

(இ - ள) சிவநதவாய எயிறறை யருமபச, செங கரஙகள தளிரை விளகக, வருததஞ செயயும வாளாகிய கணகள சிவநத அரியோ டுலாவப, புதிதாகிய தேனை யுடைததா யலருஞ சோலையினகணணே தோனறிறறு, நணபனே! குறவாககு மடபபததுடனேகூடிய மகளாந தனமை யுடைததாயிருபபதொரு வஞசிககொமபு, (எ-று)

எ-வது, **சிறப்புருவகம்** எனபது, ஒரு பொருளை யெடுதது, அதறகுச சிறநத அடைகளை உருவகஞ செயது அவறறுனே யுருவக மாககி யுரைபபது

நேரிசை வெணபா

வ - று “விரிகடலசூழ மேதினி நானமுகனமீ காஞச
சுரநதிபா யுசசி கொடுதத—அரிதிருததாள
கூமபாக வெபபொருளுங கொணட பெருநாவாய
ஆமபொலிவிற றுயினதா வினறு”

(இ - ள) பரநத கடலசூழநத உலகமானது, நான முகததோன மீகாமனுகவும, தேவகஙகை பாயாகவும அபபாயை யுசசியிலே யுடைததாகிய திருமால மேனேககி யெடுதத சீபாதம கூமபாகவும, பலவகைபபடட பொருள

களையு முடைத்தாய்ப் பெரிதாகிய அழகோடுகூடிய நாவா யானது, (எ - று)

இதனுள், நான்முகன் மீகாமனாகவும், சுரநதி பாயாக வும், அரி திருத்தாள் கூம்பாகவும் உருவகஞ்செய்யப் புவி நாவாயாயினமையின், அப்பெயர்த்தாயிற்று

இங்கே மேதினியின் விசேடணங்களாகிய நான்முகன் முதலியன உருவகிக்கப்பட்டமை காரணமாக அம் மேதினி நாவாயாக உருவகிக்கப்பட்டது

அ-வது, **விரூபகவுருவகம்** என்பது, ஒரு பொருட்குக் கூடாத தன்மை பலவுங்கூட்டி உருவகஞ் செய்வது

நேரிசை வெண்பா

வ - று " தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்து வைகாது
முண்மருங்கு தாண்மேன் முகிழாது—நண்ணி
இருபொழுதுஞ் செவ்வி யியல்பாய் மலரும்
அரிவை வதனம் புயம் "

(இ - ள்) தட்பத்தினையுடைய மதியின் றெழிற்குக் கெடாது, ஆழ்ந்த கயத்திற் றங்காது, முள்ளையுடைத்தாகிய தாளின்மீது மொட்டியாது, காலையு மாலையுஞ் சேர்ந்து செவ்வியையுடைத்தாய் மலர்ந்து நிற்கும், என் காதலி யுடைய முகமாகிய தாமரை (எ - று)

(கு - ரை) மொட்டியாது - முகிழாது

௯-வது, **சமாதானவுருவகம்** என்பது, ஒரு பொருளை நன்றாக உருவகஞ் செய்து, அதனையே தீங்கு தருவதாகக் கூறி, அத் தீங்கும் அதனானே வருகின்றதன் றென்பதற்குப் பிறிதோர் காரணங் கூறுவது

நேரிசை வெண்பா

வ - று

" கைகாந்தள் வாய்குமுதங் கண்ணெய்தல் காரிகையீர்!
மெய்வார் தளிர்கொங்கை மென்கோங்கம்—இவ்வனைத்தும்
வன்மைசேர் தாவி வருத்துவது மாதவமொன்
றின்மையே யன்றோ வெமக்கு "

(இ - ள்) அழகினையுடையீர்! உம்முடைய காந்தள் மலராகிய கையும், குமுதமாகிய வாயும், நெய்தல் மலராகிய

கண்ணும, நீணட தளிராகிய மெயயும, மெனமையுடைய கோஙகருமபாகிய கொஙகையு மெனறு சொலலபபடடன நுமமுடைய அவயவமாகிலும அவை யினைததுந தனமை திரிநது வனகணமையையச சோநது எமமுடைய உயிரை வருததஞ செயயும இது, முறகாலததில யாஞ செயத தீவினைப பயன இககாலதது எமககுப பயததலாலனறோ நுமமேற நவறுணடோ? (எ - று)

கொஙகைககு அடையாகிய மெனமையைத தீவகமாக கிக சாநதஞளளிடட உறுபபுக ளனைததினுங கொளக

க0-வது, உருவகவுருவகம் எனபது ஒனறனையுருவகஞ்செயது அதனைப பெயாததும பிறிதொனறாக உருவகஞ் செயவது

(சூ - ரை) அதனை - உருவகஞ் செயததனை

நேரிசை வெணபா

வ - று "கனனிதன கொஙகைக குவடாங கடாககளிறறைப
பொனனெடுந்தோட குனறே புனைகநதா—மனனவநின
ஆகத தடஞ்சே வகமாக யானனைபபல
சோகித தருமேற றுவணடு"

(இ - ள) தலைவனே! நீ காதலித்த கனனியுடைய முலையெனனும மலையாகிய மதககளிறறை, நின பொறகல னணிநத பெரிய தோளாகிய குனறமே கநதாகவும, மாா பாகிய பரநத இடமே கூடமாகவும, யான சோததுவன, நீ அழுகழிநது வருநதாதொழிக, (எ - று)

இதனுள, கொஙகையைக குவடாக உருவகஞ் செயது அதனையே மீணடும களிறாக உருவகஞ் செயதவாறு காணக

கக-வது, ஏகாங்கவுருவகம் எனபது, ஒரு பொருளினது அஙகம பலவறறுளளும ஓரஙகமே யுருவகஞ் செயது ஒழிநத அஙகஙகளை வாளாவே கூறுவது

நேரிசை வெணபா

வ - று "காதலனைத தாவெனா றுலவுங கருநெடுஙகண
எதிலனல யாதெனனு மினமொழிததேன—மாதா
மருணட மனமகிழச்சி வாணமுகதது வநத
இரணடினுககு மெனசெயகோ யான"

(இ - ள்) நெஞ்சமே! எமக்கொரு கணவனைத் தருவாயாக வென்பது போன்றிருந்தது, காதளவும் உலவுகின்ற கரிய நெடிய கண்கள் அயலொன்று படனிலை யென்பது போன்றிருந்தது, இனிய தேனாகிய மொழி மாதருடைய கண்டார்க்கு மயக்கத்தோடு கூடிய உள்ளக் களிப்பைக் கொடுக்கின்ற ஒளியையுடைய முகத்திலே தோற்றிய இவ்விரண்டினுக்கும் யான் என்ன செய்யக்கடவேன்? (எ-று)

௧௨-வது, அநேகாங்க வுருவகம் என்பது, ஒன்றனங்கம் பலவற்றையும் உருவகஞ்செய் துரைப்பது

நேரிசை வெண்பா

வ - று "கைத்தளிரால் கொங்கை முகிழ்தாங்கிக் கண்ணென்னு
மைத்தடஞ்சேல் மடந்தா மனங்கவரும்—வைத்தோர்
மின்னுளதான் மேக மிசையுளதான் மாற்றுவும்
என்னுளதா நண்பா வினி"

(இ - ள்) கையாகிய தளிரினாலே முலையாகிய அரும்பினைத் தாங்குகின்ற தன்மையையுடைத்தாகவும், கண்ணென்பட்ட கரிதாய்க் குளிர்ந்த சேல்களாலே ஆடவருள்ளங்களை யழிக்குந் தன்மையையுடைத்தாகவும், கறுத்த மேகத்தைச் சுமந்துகொண்டு நிற்பதாகவும், ஒரு மின் தோன்றிப் பூமிக்கண்ணே நின்றதே, அது நண்பனே! என் உள்ளத்ததுவேயாம்

௧௩-வது, முற்றுருவகம் என்பது, அவயவ அவயவிகளை யேற்ற இடத்தோடும், பிறவற்றோடும் முற்ற உருவகஞ் செய் துரைப்பது

நேரிசை வெண்பா

வ - று "விழியே களிவண்டு மென்னகையே தாது
மொழியே முருகுலாந் தேறல்—பொழிகின்ற
தேமருவு கோதைத் தெரிவை திருமுகமே
தாமரையென் னுள்ளத் தடத்து"

(இ - ள்) தேன் மருவிய கூந்தலையுடைய தெரிவை திருமுகமே தாமரை விழிகளே களிக்கப்படாநின்ற வண்டு மெல்லியவாகிய நகையே தாது, வார்த்தையே நறு நாற்றமுலாவுகின்ற மது, என்னுள்ளமாகிய தடத்து, (எ - று)

கச-வது, அவயவவுருவகம் என்பது, அவயவத்தை உருவகஞ் செய்து, அவயவியை வாளாவே கூறுவது

நேரிசை வெண்பா

வ று "புருவச் சிலைகுனித்துக் கண்ணம்பெ னுள்ளத்
திருவத் துரந்தா ரொருவர்—அருவி
பொருங்கற் சிலம்பிற் புனையலங்குற் றேர்மேல்
மருங்குற் கொடிநுடங்க வந்து"

(இ - ள்) அலங்கரிக்கப்பட்ட அலகுலாகிய தேரின் மேலேறி, மருங்குற்கொடி யசைய வந்து, அருவி யலைக்கப் பட்ட மலைச் சிலம்பிலே தோற்றித் தம்முடைய புருவமாகிய வில்லை வளைத்துக், கண்ணாகிய அம்பினாலே என்னுள்ளத்திலே உருவிப்போக ஒருவர் எய்தார், இதற்குச் செய்யக்கடவதென்? சொல்லுவாயாக, (எ - று)

கரு-வது, அவயவியுருவகம் என்பது, அவயவியை உருவகஞ் செய்து, அவயவங்களை வாளாவே கூறுவது

(கு - ரை) இதனை, உறுப்பியுருவக மென வழங்குதலும் உண்டு இங்கு உறுப்பியாகிய முகத்தை மாத்திரமே தாமரையாக உருவகஞ்செய்து புருவம், மொழி, விழி, முறுவல் என்னும் அதன் உறுப்புகளை உருவகஞ் செய்யாதொழிந்தமை காண்க அவயவி - அவயவத்தினை யுடையது

நேரிசை வெண்பா

வ - று "வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோரத்தைய
வேரரும்பச் சேந்து விழிமதர்ப்ப—மூரல்
அளிக்குந் தெரிவை வதனம் புயத்தால்
களிக்குந் தவமுடையேன் கண்"

(இ - ள்) நல்லாருடைய புருவமசைய, வாயின் வார்த்தையானது உருத்தெரியாது அழிந்து தளரக், குறு வியர்ப்பை யுடைத்தாக விழியானது சிவந்து மதர்ப்ப, முறுவலிப்பதொரு தாமரையாகிய முகத்தினாலே களிக்குந் தன்மையைப் பெற்றது, முற்காலத்தில் யான் செய்த நல் வினைப்பயத்தினாலே, எனது கண், (எ - று)

கஅ உவமை யேது வேற்றுமை விலக்கே
அவநுதி சிலேடையென் றவற்றொடும் வருமே

என்பது, அவ்வுருவக அலங்காரம் பிற அலங்காரங்களோடுங் கூடி வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) உவமையும், ஏதுவும், வேற்றுமையும், விலக்கும், அவநுதியும், சிலேடையும் என்னும் ஆறு அலங்காரங்களோடு கூடியும் வரும், அவ்வுருவக அலங்காரம், (எ - று.)

அவற்றுள், க-வது, உவமையுருவகம்

நேரிசை வெண்பா

வ - று "மதுமகிழ்ந்த மாதர் வதன மதியம்
உதய மதியமே யாகும்—மதிதளர்வேன்
வெம்மை தணிய மதராக மேமிகுக்கும்
செம்மை யொளியால் திகழ்ந்து"

(இ - ள்) மதுவுண்டு களித்த மடவாருடைய முக மதியம், உதயஞ்செய்த நிறைந்த மதியம் போன்றது, அறிவழியுந்தன்மையை யுடையேனுடைய ஆற்றலழியக் களிப்போடுகூடிய காதலைப் பெரிதும் புலப்படுத்தித் தோற்றுகின்ற சிவந்த நிறத்தாலே யழகு பெற்று (எ - று)

(கு - ரை) மதம் - களிப்பு ராகம் - காதல் திகழ்தல் - அழகு பெறுதல்

இதனுள், முக்கியப் பொருளையுங் குணப்பொருளையும் ஒப்புமை காட்டினமையான், உவமையுருவகமாயிற்று

(கு - ரை) முக்கியப்பொருள் - உவமேயம் குணப் பொருள் - உவமானம்

உ-வது, ஏதுவுருவகம்

(கு - ரை) காரணத்தோடு கூடிவரும் உருவகம்

நேரிசை வெண்பா

வ - று "மாற்றத்தாற் கிள்ளை நடையான் மடவன்னம்
தோற்றத்தாற் றண்ணென் சுடர்விளக்கம்—போற்றும்
இயலான் மயிலெம்மை யிந்நீர்மை யாக்கும்
மயலார் மதர்நெடுங்கண் மான்"

(இ - ள்) நண்பனே! எம்மை இப்படித் தாழ்வு பண்ணிய நெடிதாய்ச் சிவந்து காதலைக் கொடுக்கின்ற

கண்களையுடைமையான மானபோன்றுள், மொழியிறை கிளையாயிறுள், நடையிறல் மடவிய அன்னமாயிறுள், மேனியாற் குளிர்ந்த உருவத்தையுடைய விளக்கினிற மாயிறுள், யாவரும் பரவப்படுஞ் சாயலால் மயிலாயிறுள், (எ - று)

(கு - ரை) விளக்கம் - நிறம் இங்கே கிளை முதலிய உருவகம் மாற்றம் முதலிய ஏதுவோடுகூடி வந்தவாறு அறிக

ங-வது, வேற்றுமையுருவகம்

நேரிசை வெண்பா

உ - று "வையம் புரக்குமான் மன்னவநின் கைக்காரும்
பொய்யின்றி வானிற் பொழிகாரும்—கையாம்
இருகாரக்கு மில்லைப் பருவ மிடிக்கும்
ஒருகார் பருவ முடைத்து"

(இ - ள்) அரசனே! உன்னுடைய கையாகிய மேகமும், காலம் பிறழாது ஆகாயத்தின் கண்ணின்று பொழிகின்ற மேகமும், உலகத்தைப் புரக்குந்தன்மையி னொக்குமாயினும், கையென்கிற இரண்டு மேகங்களுக்கும் பருவமில்லை, இடியையுடைய ஒரு மேகத்திற்குப் பருவமுண்டு, (எ - று)

இதனுள், குணப்பொருளையும், முக்கியப் பொருளையும், 'வையம் புரக்கும்' என ஒப்புமை காட்டிக், 'கைக்காருக்குப் பருவமில்லை, ஏனைக் கார் பருவமுடைத்து' என வேற்றுமை செய்தமையின் அப்பெயர்த்தாயிற்று ஆல் . அசை

ச-வது, விலக்குருவகம்

(கு - ரை) விலக்கு - ஆக்ஷேபம், தடை

நேரிசை வெண்பா

வ - று "வல்லி வதன மதிக்கு மதித்தன்மை
இல்லை யுளதே லிரவன்றி—எல்லை
விளக்கு மொளிவளர்த்து வெம்மையா லெம்மைத்
துளக்கு மியல்புளதோ சொல்"

(இ - ள்) வல்லியாயிறுள் முகமாகிய மதியத்திற்கு, மதியினுடைய தன்மை யில்லைபோலும், உண்டாயின், பகற

பொழுது தன்னிடத்திலே யொளியை மிகுத்து நம்மை வருத்தி அறிவை யழிக்கும் இயல்புடைத்தாமோ? நண்பனே! சொல்லுவாயாக, (எ - று)

௯-வது, அவநுதியுருவகம்

(சூ - ரை) அவநுதி - உண்மையை மறுத்தல்

நேரிசை வெண்பா

உ - று "பொங்களக மல்ல புயலே யிருவிழையும்
கொங்கை யிணையல்ல கோங்கரும்பே—மங்கைநின்
மையரிக்க ணல்ல மதர்வண் டிவையிவையும்
கையல்ல காந்தண் மலர்"

(இ - ள்.) மங்கைப் பருவத்தே யுடையவளே! உன்னுடைய மிக்க கருமையையுடைய கூந்தலன்று, இது, மேகப்பரப்பே, இரண்டாகிய தனங்களல்ல, இவை, கோங்கரும்புகளே, மையணிந்த செவ்வரி பரந்த கண்களல்ல, இவை, செருக்கினையுடைய வண்டுகளே, கையல்ல, இவை, காந்தண்மலர்களே, (எ - று)

இதனுள், உண்மைப்பொருளை மறுத்து ஒப்புமைப் பொருளை யுடன்பட்டமையான், அப் பெயர்த்தாயிற்று

(சூ - ரை) உவமேயத்தை மறுத்து உவமானத்தால் உருவகித்து இங்ஙனம் உவமேயத்தைச் சிறப்பித்தல் இதன் இலக்கணம் இங்கே உண்மையாகிய அளகம் முதலியன மறுக்கப்பட்டவாறும், புயல் முதலியனவாக உருவகஞ் செய்யப்பட்டவாறும் அறிக

௰-வது, சிலேடையுருவகம்

நேரிசை வெண்பா

வ - று
"உண்ணெகிழ்ந்த செவ்வித்தாய்ப் பொற்றோ டொளிவளர்த்த
தண்ணளிசூழ் திண்பந் தாமலர்ந்து—கண்ணெகிழ்ந்து
காதல் கரையிறப்ப வாவி கடவாது
மாதர் வதனம் புயம்"

(இ - ள்) உள்ளே விரியாநின்ற பொலிவினை யுடைத்தாய் அழகிய இதழ்களினொளி மிக்க குளிர்ந்திருக்கின்ற

வணடுகளாற சூழபபடடுக கணடாரக கினிமைதோனற இதழ விரிநது மதுபபொசிநது கணடாரககு ஆசை மிகுபபப பொயகையிடதது நீஙகாது தோனறிய தாமரை எனறும உளளக கசிவான மலாநத புதுமையுடைததாயப, பொனனுனியனற தோடுகளினுளி தழைபபக குளிாநத விருபபததை மேவிக, கணடாாககு ஆசையளிககுந தோற றாவினை யுடைததாயக கணணினையுமுடைததாய, ஆசைப பாடடெலலை கடபப, உளளங கடவாது இவளுடைய வதன மாகிய தாமரை எனறும வநதவாறு காணக

இது தாமரைககும, முகததிறகுஞ சிலேடை

(கு - ரை) இதனுள, தாமரை பொழுககததையும முகவொழுககததையும ஒரு சொறறொடாபால சிலேடிததது, வதனமபுயம எனறு உருவகஞ செயதவாறு கணடு கொளக

புறநடை

௩௬ உருவக முவமை யெனவிரு திறததவும
நிரமப வுணாததும வரமபுதமக கினமையிற
கூறிய நெறியின வேறுபட வருபவை
தேறினா கோடல தெளளியோா கடனே

எனபது, மேறசொலலிய உருவகம உவமையெனனும இரணடுதிறத தலஙகாரஙகளுககும புறநடை யுணாததுதல நுதலிறறு

(இ - ள) உருவகமும உவமையுமெனனு மிரணடு திறத தலஙகாரஙகளும, ஒழிவினறி யுணாததும வரையறை யுடையவலலவாகலாற, சொலலபபடட நெறியின வேறு பட வருபவை யறிநது அவறறினபாற சாாததிககோட லறிவுடையோா கடன, (எ - று)

ஈணடு உருவகம முறகூறியது அதிகார மிடையறுமல எனக அவறறுட சில வுருவகம வருமாறு

க-வது, ஏதுவுருவகம்

குறள வெணபா

வ - று "விலலே ருழவா பகைகொளினுங கொளளறக
சொலலே ருழவா பகை"

(இ - ள்) ஒருவன் வில்லை ஏராக உடைய (வீரராகிய) உழவரோடு பகைகொண்டாலும், நீதிநூல்களை ஏராக உடைய (சூழ்ச்சியின் வல்ல புலவராகிய) உழவரோடு பகை கொள்ளாதிருக்கக் கடவன், (எ - று)

சொல் கருவியாகு பெயராய் நீதிநூல்களை யுணர்த்தி யது. வீரரோடு பகைகொண்டாற் கேடு உண்டாதல் உறுதி யன்று வரினும் அவனோடேயாம் சூழ்ச்சியின் வல்ல புலவரோடு பகைகொண்டால் தனக்கும் தன்னைச் சார்ந்த வர்க்குந் தப்பாது கேடு வருதலின் அவர் பகை ஆகா தென்றார்

போர்த்தொழிலில் வல்ல வீரர்களையும், சூழ்ச்சியின் வல்ல புலவர்களையும் 'உழவர்' என உருவகப்படுத்தினார் வீரர்களுடைய போர்த்தொழிலுக்கு வில்லும், புலவர்க ளுடைய சூழ்ந்தியற்றுதலாகிய தொழிலுக்கு நீதிநூலும் கருவியாகிய காரணமாக (ஏதுவாக)க் காட்டப்பட்டமை யின் இஃது ஏது உருவகமாம் என்பது (ஈண்டுக் குறித்த கருவி துணைக்கருவி )

உ-வது, இயைபுருவகம்

நேரிசை வெண்பா

வ - று ' ஏரி யிரண்டுஞ் சிறகா வெயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவா—நீர்வண்ணன்
அத்தியூர் வாயா வணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு ''

(இ - ள்) அழகிய தேரையுடைய சோழனது நகர மாகிய கச்சியினது தோற்றமானது, இரண்டு பக்கங்களிலு முள்ள இரண்டேரிகளும் இரண்டு சிறகுகளாகவும், நடுவி லமைந்த மதில் வயிறாகவும், வாசனையையுடைய சோலை கருநிறத்தினையுடைய தோகையாகவும், கடல்போலுங் கருநிறத்தினையுடையராகிய திருமாலினது அத்தியூர் வாயா கவும் (அமைந்திருத்தலின்) அழகிய மயிலின் தோற்றத் தையே போன்றிருக்கின்றது, (எ - று)

எயில் - மதில் பீலி - தோகை கடி - வாசனை
கா - சோலை பொலிவு - தோற்றம், அழகு எனினுமாம்

இதில் சிறகு, வயிறு, தோகை, வாய் ஆக உருவகப்படுத்தப் பட்ட பொருள்கள் யாவும் ஒன்றோடொன்று இயைபு உடையனவாகையால் இஃது இயைபுருவகமாம் எனக.

௩-வது, விலக்குருவகம்

நேரிசை வெண்பா

வ - று “மலையிற் பயிலா மடமஞ்ஞை வாரி
அலையிற் பிறவா வமுதம்—விலையிட்
டளவாத நித்திலம் மாராத் தேறல்
வளவாண் மதர்நெடுங்கண் மான்”

(இ - ள்) வளவிய வாள்போன்ற அழகிய நீண்ட கண்களையுடைய மான்போன்ற பெண், மலையிற் சஞ்சரியாத இளமையாகிய மயிலும், கடலினது அலையிலே பிறவாத அமுதமும், விலை இவ்வளவென்க் குறித்துச் சொல்ல முடியாத முத்தும், உண்ணாத தேனும் ஆவள், (எ - று)

மடமஞ்ஞை - இளமையாகிய மயில். வாரி - கடல். நித்திலம் - முத்து. தேறல் - தேன். மதர் - அழகு.

இதில் ஒரு பெண்ணை மயில் முதலியனவாக உருவகப் படுத்துமிடத்து விசேடணமாகச் சேர்த்த மலையிற் பயிலாமை, அலையிற் பிறவாமை, விலையிட்டளவாமை, ஆராமை முதலிய அடைமொழிகள், இங்ஙன மலையிற் பயிலுதல் முதலியன இல்லாத இவளுக்கு மலையிற் பயிலுதல் முதலிய உடைய மயில் முதலியன உவமையாகா என அவற்றை விலக்கலின், இது விலக்குருவகமாம் என்பது.

௪-வது, சிறப்புருவகம்

நேரிசை வெண்பா

வ - று “மழலைவாய் நவ்வி மதர்நெடுங்கண் மஞ்ஞை
குழலின் பொறைமெலிந்த கொம்பர்—சுழல்கலவம்
தாங்கிய வன்னந் தடங்கொங்கை யாரமுதம்
தேங்கொள் கமலத் திரு”

(இ - ள்) தேனைக் கொண்ட செந்தாமரை மலரிலே வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்ற பெண், மழலைச் சொற்களைப் பேசும் வாயையுடைய மானும், அழகிய

நீண்ட கண்களையுடைய மயிலும், கூந்தலின் பாரத்தைச் சுமந்திருத்தலால் மெலிவுற்ற கொம்பும், திரட்சியாகிய தோகையையுடைய அன்னமும், பெரிய கொங்கைகளையுடைய அமுதமும் ஆவள், (எ - று)

நவ்வி - மான் மதா - அழகு குழல் - கூந்தல் பொறை - பாரம் கலவம் - தோகை கமலத்திரு - செந்தாமரையில் வீற்றிருக்குந் திருமகள்

இங்கு ஒரு பெண்ணை நவ்வி முதலியனவாக உருவகப்படுத்திட்டதாகக் கூறிய நவ்வி முதலியவற்றை மற்றை நவ்வி முதலியவற்றிற் கில்லாத மழைவாய் முதலியவற்றைக் கொண்டு சிறப்பித்துக் கூறுதலின் இது சிறப்புருவகமாம் எனக்

௯-வது, அற்புதவுருவகம்

நேரிசை வெண்பா

வ - று "மன்றற் குழலா ருயிர்மேன் மதன்கடவும்
தென்றற் கரிதடுக்குந் திண்கணையம்—மன்றலரைக்
கங்குற் கடலிற் கரையேற்று நீள்புணையாம்
பொங்குநீர் நாடன் புயம்"

(இ - ள்) மேன்மேலும் பெருகிவரும் காவிரியாற்றையுடைய சோழநாட்டின் அரசனாகிய சோழனது தோள், வாசனையையுடைய கூந்தலையுடையவர்களாகிய பெண்களது உயிரின்மீது மன்மதன் செலுத்துகின்ற தென்றற் காற்றாகிய யானையைத் தடுக்கும் பாணமாம், புணர்ச்சிக் குரிய (இளந் தன்மையினையுடைய) அம் மாதர்களை இரவாகிய கடலினின்று கரை ஏற்றுதற்குரிய தெப்பமாம், (எ - று)

மன்றல் - வாசனை தென்றல் - தென்றற் காற்று கரி - யானை கணையம் - பாணம், யானை வாராமற் றடுக்கும் மரமுமாம் 'கணையாம்' என்றும் பாடம் மன்றலர் - புணர்ச்சிக்குரிய மாதர் புணை - தெப்பம் பொங்குநீர் - மிக்க நீரையுடைய காவிரி புயம் - தோள் இங்குச் சோழனது தோளைக் கணையமும், புணையுமாக உருவகப்

படுத்துமிடத்து வியப்புச் சுவை தோன்றக் கூறப்படுதலின் இஃது அற்புதபுருவகமாம் என்பது.

இவ்வாறு வருவனவற்றைப் புருவகத்தின்பாற் சார்த்தி யுணர்க.

உவமை வருமாறு

க-வது, தெரிதருதேற்ற வுவமை

குறள் வெண்பா

வ-று "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு"

(இ-ள்) கல்லாதாரிடத்திற் பொருந்திய செல்வம், கற்றாரிடத்திற் பொருந்திய வறுமையினும் துன்பஞ் செய்வதாம், (எ-று)

ஈண்டு 'நல்லார்' என்றது கற்றாரை. வறுமை - தரித்திரம். கல்லாமாட்டுச் செல்வம் அவரைக் கெடுக்கும், கற்றாமாட்டு வறுமை அவரைக் கெடுக்காது ஆதலின், கல்லாமாட்டுச் செல்வத்திற்குக் கற்றாமாட்டு வறுமை உவமை கூறத் தக்கதன்றென்பது பெறப்பட்டது.

இதில் கல்லாமாட்டுச் செல்வத்திற்குக் கற்றாமாட்டு வறுமை உவமை கூறத் தக்கதன்று என்பது தெளிந்து கூறப்படுதலின் இது தெரிதருதேற்ற உவமையாம் என்பது.

உ-வது, பலவயிற்போலியுவமை

நேரிசை வெண்பா

வ-று "அடிநோக்கி னாழ்கடல் வண்ண னவனன்
படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரான்—முடிநோக்கித்
தோஉளவு ளெகத் தெளிந்தேன்றன் சென்னிமேல்,
ஆரல்ங்க ளோன்றியது கண்டு"

(இ-ள்) (அவனது) அடியை நோக்கினால் ஆழமாகிய கடலினது நிறத்தினையுடைய திருமாலாகத் தோன்றுகின்றான், வடிவத்தை நோக்கினால் பசுமையாகிய கொன்றைப் பூமாலையை அணிந்த சிவனாகத் தோன்றுகின்றான், (இங்ஙனம் பலவாறாகத் தோன்றும் இவனை இன்னானென்த

தெளிதல் எவ்வாறெனின்) அவனது முடியை நோக்கி முடியின்மேல் ஆத்திப்பூமாலை இருத்தலைக் கண்டு தோச சேனையுடைய சோழனென்று தெளிந்தேன், (எ - று)

இதிற் சோழனாகிய ஒரு பொருட்குத் திருமாலும், சிவபிரானுமாகிய இரண்டுவகைகள் கூறப்பட்டமையின் இது ஐயவிற் பொருளுவமையாம் என்பது

௩-வது, பண்புவமை

## ஆசிரியப்பா

வ - று ‘ கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே ”

(இ - ள்) பரவிய வெண்மையாகிய நிலவே! கருமையாகிய அடியையுடைய வேங்கைமரத்தினது மலர்கள் பரவப்பெற்ற வலிய கல்லானது பெரிய புலியினது குட்டியைப்போலத் தோன்றுங் காட்டின் வழியாக இரவிலே (தனியே) வருபவராகிய (எம்) தலைவருடைய களவொழுக்கத்திற்கு நீ நலம்புரிவாய் அல்லை, (எ - று)

வீ - மலர் துறுகல் - வலிய கல் இரும் புலி - பெரிய புலி குருளை - குட்டி எல்லி - இரவு வருநர் - வருகின்றவராகிய தலைவர் களவிற்கு - களவொழுக்கத்திற்கு இதில் வேங்கை மரத்தினது மலர்கள் பரவப்பெற்ற கல், புலிக்குட்டிக்கு உவமையாகக் கூறப்பட்டது

வேங்கை மரத்தினது மலர் பரவப்பெற்ற கல்லின் வண்ணமும் வடிவமும், புலிக்குட்டியின் வண்ணத்திற்கும் வடிவத்திற்கும் ஒப்புமையாகக் கூறப்பட்டமையின் இது பண்புவமையாம் என்பது

(கு - ரை) வடிவு பண்பில் அடங்கும்

௪-வது, ஒப்புமையுவமை

## நேரிசை வெண்பா

வ - று “ முத்துக்கோத் தன்ன முறுவல் முறுவலே
ஒத்தரும்பு முல்லைக் கொடிமருங்குல்—மற்றதன்மேல்

மின்னனிக்கும் காரபோல விரைக்கூந்தன மெல்லியலாள
தண்ணளிக்கு முண்டோ தரம்"

(இ - ள்) முத்துக்களை வரிசையாகக் கோத்தாற் போன்ற பற்களையும் அப் பற்களையேபோன்று அரும்புகளை விடும் முல்லைக்கொடியைப்போன்ற இடையினையும், அக் கொடியின்மேல் மின்னைவீச மேகம்போன்ற நறுநாற்றத்தையுடைய கூந்தலையும் உடைய மென்மைத்தன்மையினளாகிய தலைவியினது குளிர்ந்த கருணைக்கும் எல்லையுண்டோ? (எ - று)

முறுவல் - பல். மருங்குல் - இடை. கார் - மேகம். விரை - மணம். மெல் இயலாள் - மென்மைத் தன்மையுடையாள்.

இதில் 'முத்துக்கோத்தன்ன' என்று முத்துக்களை முறுவலுக்கு உவமை கூறி, 'முறுவலே, ஒத்தரும்பு முல்லை' என அம்முறுவலை முல்லை அரும்புகளுக்கு உவமையாகக் கூறலின் இஃது ஒப்புமை உவமையாம் என்பது.

தி-வது, சந்தான வுவமை

ஆசிரியப்பா

வ - று "ரந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கு குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதியென
அளிச்சினை வேங்கை நாண்மலர் நாண்மலர்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கு சுணங்குபிதிர்ந்
தியாணர்க் கோங்கின் விரைமுகை முகையெனக்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்டோட்டுப் பெண்ணை வளர்த்த நுங்கின்
செறிநீர் தரும்மெ யிறறின"

எனனும இதனை மாலையுவமை யெனினு மமையும்

(இ - ள்) இழுக்கப்பட்டுப் பூமியிலே பொருந்தப் பெற்ற பெண் யானையினது பெரிய துதிக்கைபோலத் திரண்டுருண்டு ஒன்றோடொன்று நெருங்கிப் பொருந்திய தொடைகளையும் அந்தத் தொடைகளைப்போலப் பெரிய மலையிலே வரிசையாகப் பொருந்தின வாழைமரங்கள், அந்த

வாழைமரங்களின் பூவைப்போல அழகுற்றமைந்த கூந்தன் முடியையும் அக் கூந்தன் முடியைப்போலக் கரிதாய்க் குளிர்ந்த கிளைகளையுடைய வேங்கை மரத்தினது புதியமலர் (மலர்ந்து விளங்கின) அவ் வேங்கை மரத்தின் புதியமலர் என்று கருதிக் கரியபசையுடைய வண்டுகள் (மொய்த்துக் கொண்டு) ஆரவாரிக்குந் தேமலையும், அத் தேமல் பொறி யாசப் பரந்தாற்போலக் கோங்கமரத்தினது புதிய அழகிய புதுமலர்கள் (தோன்றும்) அந்த அருமையைப்போல (விளங்கும்) ஆபரணங்களைத் தன்னிடத்தே கொண்ட, கொங்கைகளையும், பெரிய மடல்களையுடைய பனைமரம் அந்தக் கொங்கைகளைப்போல வளர்த்த நுங்குபோல இனிமை பொருந்திய நீரைத்தரும் பறகளையும், (எ - று )

உடையார் என் இது மகளிர்க்கு அடைமொழியாம் இங்குக் கூறப்பட்ட உவமைகள் பலவும் இடையீடின்றி ஒன்றோடொன்று தொடர்புடையனவாகப் புணர்க்கப் பட்டமையின் இது சந்தான உவமையாம் என்பது இனி மாலையுவமையோடு இதற்கு வேற்றுமையுண்டென்பாரு முண்டு அங்ஙனங் கூறுவார் மாலையுவமை ஒன்றோ டொன்று தொடர்புடைய பல பொருள்களை ஒரு பொரு ளுக்கு உவமையாக வைக்கப்படுவதாம் எனவும், இஃது அங்ஙனம் ஒன்றோடொன்று தொடர்புடைய பல பொருள் களை வெவ்வேறு பொருள்களுக்கு உவமையாக வைக்கப் படுவதாம் எனவுங் கூறுவர்

**கூ-வது, விலக்குவமை**

**ஆசிரியப்பா**

வ - று "பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுறப் பதுவே"

(இ - ள) (புலமையின்) செப்பமாகிய நாவினை யுடைய புலவர்கள் 'பாரி பாரி' என்று சொல்லி (அவன் றன் புகழ்) பலவற்றையுந் துதித்து (அவன்) ஒருவனையே புகழ்வர், உலகத்தைப் பாதுகாத்தற்குப் பாரி ஒருவனே அல்லன், மழையும் உண்டு, (எ - று )

இவவாறு வருவனவறறை யுவமைபினபாற சாாததி புணாக உருவகமும உவமையும ஓரினமாககிப புணாத தமையால உருவகததிறகு ஓதிய இலககணம உவமைக காதலும உவமைககு ஓதிய இலககணம உருவகததிற காதலு முள அவை வருமா றறிநது கொளக

இதில பாரிககு மேகததை உவமை கூறுதல புல வாககுக கருததனறு எனனுங கருததைதத தொனிபபிததது உவமையை விலககுதலால இது விலககுவமையாம இதில உபமேயததை ஒருபுடை விலககி உபமானததை உடன நிறுததினமையால, விலககுவமையாயிறறு எனறலுமாம

பாரி - கடை எழு வளளலகளில ஒருவன, கொடை யிற சிறநதவன (கரு)

## ச தீவகவணி

ஓரிடதது வைககபபடட விளககானது பல விடஙக ளிற சென்று பொருளகளை விளககுதலபோல இதுவும ஓரிடதது நினறு பல விடஙகளிலுஞ சென்று பொருள களை விளககுதலாலே தீபகமெனபபடடது தீபகம - விளககு

சo குணஙதொழில சாதி பொருளகுறித் தொருசொல
ஒருவயி னினறும பலவயிற பொருடரிற
றீவகஞ செயயுண மூவிடத தியலும

எனபது, நிறுதத முறையானே தீவகமெனனும அலஙகாரம உணாததுதல நுதலிறறு

(இ - ள) குணததானும, தொழிலானும, சாதி யானும, பொருளானும குறிதது ஒருசொல ஓரிடதது நினறு, செயயுளிற பலவிடதது நினற சொறகளோடு பொருநதிப பொருள விளைபபது தீவகமெனனும அலங காரமாம அது முதனிலைததீவகம், இடைநிலைததீவகம், கடை நிலைததீவகம என மூனறாகி நடககும, (எ - று)

எனவே, இடத்தானையும், குணம், தொழில், சாதி, பொருள் என்பனவற்றோடு கூடி யுறழப் பன்னிரண்டா மெனக் கொள்க.

அவற்றுள்

க-வது முதனிலைக் குணத்தீவகம்

நேரிசை வெண்பா

வ - று "சேந்தன வேந்தன் றிருநெடுங்கண் டெவ்வேந்தர்
ஏந்து தடந்தோ ளிழிகுருதி—பாய்ந்து
திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பும்
மிசையனைத்தும் புட்குலமும் வீழ்ந்து" என வரும்.

இதனுள் புட்குலங்களும், அம்பும் வேந்தர் தோள்களும் திசைகளும் சிவந்தன வெனக்.

(இ - ள்) அரசனது அழகிய நீண்ட கண்கள் (கோபத்தினால்) சிவந்தன, (அவை சிவந்த அளவில்) பகை வேந்தர்களினுடைய உயர்ந்த பெரிய தோள்கள் (அம்புகள் பட்டு இரத்தம் குழம்பிச்) சிவந்தன, (அத் தோள்களினின்று) பெருகிவருகின்ற இரத்தம் பாய்தலால் திசைகள் சிவந்தன, (அந்த இரத்தத்திற் படிதலால்) வலிமையினை யுடைய வில்லின்று சொரியப்பட்ட பாணங்கள் சிவந்தன, அந்த இரத்தம் மேலே வீழ்தலால் பறவைக் கூட்டங்கள் யாவும் சிவந்தன, (எ - று)

இச்செய்யுளின் முதலில் உள்ள சேந்தன என்னும் பண்பு, கண், தோள், திசை முதலியவற்றோடுஞ் சென்று சேர்ந்து உபகாரப்பட்டமையால், இது முதனிலைக் குணத் தீவகமாம். சேந்தன என்பது வினைச்சொல்லாயினும் அதனாற் பெறும் பொருள் செந்நிறமாகிய பண்பாகலின், அது பண்பெனப்பட்டது. சேந்தன என்பது செம்மை என்னும் பண்புப் பெயரினடியாகப் பிறந்த வினையாதலை யும் நோக்குக.

உ-வது, முதனிலைத் தொழிற்றீவகம்.

நேரிசை வெண்பா

வ - று "சரியும புனைசஙகு தணடளிரபோன மேனி
வரியு தனதடஙகுழ் வமபும—திருமான
ஆர தழுவ தடதோ ளகளஙகன
கோட தொழுத கொடிககு" என வருமு

(இ - ள) திருமகள வீறறிருததறகுரிய மேனமை யினையுடைய முததுமாலையை அணிநத பெரிய தோளகளை யுடைய குறறமறற சோழனுடைய குதிரையைத தொழுத பூஙகொடியைப போனறவளாகிய பெணணுககு (அவள கையில) அணிநத வளையலகளும சரிநதன, குளிரசசியாகிய தளிரைபபோனற உடமபின அழகும சரிநதது, பெரிய தனஙகளில தரிதத கசசுஞ சரிநதது, (எ - று)

சோழன உலாபபோன காடசியைக கணடு அவ வளவிலே அவனபால தனககுணடாகிய பெருங காதலை ஆறறாளாகிய ஒரு பெண உடல மெலிநது, கை வளை கழனறு வீழ, உடமபின அழகு குறையக, கசசுத தளாசசி யுற நினறனள எனபது இதன கருதது இதில சரியும எனனும வினைசசொல சஙகு முதலியவறறோடு சென றியைநது உபகாரபபடடமையால, இது முதனிலைத தொழிற றீவகம ஆம

இதனுள வளையும, அழகும, கசசும சரியுமெனக

௩-வது, முதனிலைச் சாதித்தீவகம்

நேரிசை வெண்பா

வ - று "தெனற லனஙகன றுணையாஞ் சிலகொமபா
மனறற றலைமகனும வானபொருணமேற-சென றவாககுச
சாறறிவிடந தூதாகும தஙகும பெருமபுலவி
மாறற வருவிருநது மாம" என வரும்.

(இ - ள) தெனறற காறறுனது (காமததை வளர்தத லால) மனமதனுககுத துணையாகும சில பூஙகொமபுக ளுககுத (தான வநதவளவில அவறறைத தளிரபபிததலால) மணமபுரிநத நாயகனுககும சிறநத பொருளினிடதது விருபபமுறறு (தமமுடைய தலைவியாகளைப பிரிநது) சென ற தலைவாகளுககு (அத தலைவியாகளபாற காதலை

எழுப்புதலால் அத் தலைவியர்களால் தம்முடைய வருத்தங் களைச்) சொல்லும்படி அனுப்பப்பட்ட தூதாரும், (நாயகா பால் நாயகியாகரு உண்டான பெரிய ஊடலை நீக்குதலால்) அவ்வூடலை நீக்க வந்த புதுமகனுமாரும், (எ - று)

தென்றல் - தெற்கிலிருந்து வருங் காற்று, அது கால வேறுபாட்டால் பல்வாம் இங்குத் தென்றல் என்றது அங்ஙனம் பலவாகிய காற்றுகள் அனைத்தையும் உணர்த்தி முதலில் நின்று, 'துணையாம்' என்பது முதலியவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையால் இது முதனிலைச் சாத்தீவகம் ஆம்

இதனுள் - தென்றல் துணையாதலும், தூதாதலும், விருந்தாதலும் கண்டுகொள்க

௪-வது, முதனிலைப் பொருட்டீவகம்

நேரிசை வெண்பா

வ - று "முருகவேள் சூர்மா முதறடிந்தான் வள்ளி
புரிகுழன்மேன் மாலை புனைந்தான்—சரணளித்து
மேலாய வானோர் வியன்சேனை தாங்கினன்
வேலா னிடைகிழித்தான் வெற்பு" என வரும்

(இ - ள்.) முருகப்பிரான் சூரபன்மனாகிய மாமரத்தை வேரோடு சாய்த்தான், வள்ளியம்மையினது புரிவாகிய கூந்தலின்கண் மாலையைச் சூடினன் அடைக்கலமாகி மேன்மை பொருந்திய தேவர்களுடைய பெரிய சேனையைக் காத்தருளினன், வேலினாலே (கிரௌஞ்சம் என்னும்) மலையை இடையிலே பிளந்தான், (எ - று)

'சூர்மா முதல் தடிந்தான்' என்பதற்குச் 'சூரபன்மனாகிய (அவுணர்களின்) சிறந்த தலைவனைக் கொன்றான்' என்று பொருள் கூறுதலுமாம்

இதில் முதலில் நின்ற முருகவேள் என்ற பொருட் பெயர் தடிந்தான் என்பது முதலியவற்றோடு சென் றியைந்து உபகாரப்பட்டமையால் இது முதனிலைப் பொருட் டீவகம் ஆம்

௫-வது, இடைநிலைக் குணத்தீவகம்

நேரிசை வெண்பா

வ - று "எடுத்த நிரைகொண்டு வென்றலுமே வென்றி
வடித்திலங்கு வைவாளை வாங்கத் — துடித்தனவே
தண்ணார் மார்புந் தடந்தோளும் வேல்விழியும்
எண்ணாத மன்னர்க் கிடம்" என வரும்.

(இ - ள்) குறித்த பசுக்கூட்டங்களைக் கொண்டுவருக என்று (வேந்தன்) கூறிய அளவிலே, (மறவன்) வெற்றியைத் தருவதாகிய வடிக்கப்பட்டு விளங்கும் கூர்மையாகிய வாளைக் கையிலே ஏந்தினனாகப் பகையரசர்களுக்குக் குளிர்ச்சியாகிய முத்துமாலையை அணிந்த மார்பும், பெரிய தோள்களும் வேல்போன்ற கண்களும் இடப்புறத்துத் துடித்தன, (எ - று)

இதில் இடைநின்ற துடித்தன என்னும் பண்புணர்த்துஞ் சொல் மார்பு என்பது முதலியவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையின் இடைநிலைக் குணத்தீவகம் ஆம்.

இதனுள், துடித்தல் - பண்பு

(கு - ரை) தொழில் பண்பில் அடங்கும்.

௬-வது, இடைநிலைத் தொழிற்றீவகம்

நேரிசை வெண்பா

வ - று "எடுக்குஞ் சிலைநின் றெதிர்ந்தவருங் கேளும்
வடுக்கொண் டுரந்துணிய வாளி — தொடுக்கும்
கொடையுந் திருவருளுங் கோடாத செங்கோல்
நடையும் பெரும்புலவர் நா" என வரும்.

(இ - ள்) வேந்தன் கையிலே ஏந்திய வில்லிலே அம்புகள் பிறத்தலால் (உடனே அவனை) எதிர்த்தவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் தழும்புபட்டுத் (தம்முடைய மார்பு) துணிக்கப்பட்டனராக (அவ்வளவிலே) புலவர்களுடைய நாவுகள் (இவ்வேந்தனுடைய) ஈகையையும், மேன்மையாகிய அருளையும், முறைகெடாத செங்கோலினது நடையையும் (பாக்களிலே) தொடுத்துப் புகழ்வன ஆயின, (எ - று)

இதில் இடையிலே நின்ற நேர்ந்து என்னும் தொழில் ஆணாத்துஞ் சேரல், கோடை, அருள், செங்கோலின் நடை என்பவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையால், இஃது இடைநிலைத் தொழிற்றீவகம் ஆம்.

எடுக்குஞ் சிலை வாளி நின்று என இயைக்க. 'நின்று' என்றதை நிற்க என்னுஞ் செயவென் னெச்சமாகக் கொள்க.

இதனுள், தொடுத்தல் - தொழில்.

எ-வது, **இடைநிலைச் சாதித்தீவகம்**

நேரிசை வெண்பா

வ-று "காமருவு பொற்றொடியாங் காலிற் கழலாம்
பொருவில் புயவலய மாகும்—அரவரைமேல்
நாணு மரதகு நகைமணிசேர் தாழ்குழையாம்
பூணும் புனைமாலை யாம்"
என வரும்.

(இ-ள்) பாம்பானது சிவபிரானுக்குக் கரத்திற் பொருந்தும் அழகிய வளையாகும், காலிலே அணியும் வீரக்கண்டையாகும்! ஒப்பில்லாத தோள்வளையாகும், இடையில் அணியும் நாணுதம், ஒளியினையுடைய இரத்தினங்கள் பொருந்திய தொங்குகின்ற குண்டலம் என்னுங் காதணியாகும், மற்றும் பல ஆபரணங்களாகும், அழகிய மாலையும் ஆகும், (எ-று)

இதில் இடையினின்ற அரவு என்னும் பாம்புகளின் சாதிப்பெயர் 'தொடியாம்' என்பது முதலியவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையின் இஃது இடைநிலைச் சாதித்தீவகம் ஆம்.

அ-வது, **இடைநிலைப் பொருட்டீவகம்**

நேரிசை வெண்பா

வ-று "மானமருங் கண்ணாள் மணிவயிற்றில் வந்துதித்தான்
தானவரை யென்றுந் தலையழித்தான்—யானைமுகன்
ஓட்டினான் வெங்கலியை யுள்ளத் தினிதமர்ந்து
வீட்டினா னம்மேல் வினை"
என வரும்.

(இ-ள்) யானை முகத்தினையுடைய கடவுளாகிய விநாயகன், மான்போன்ற கண்களையுடைய பார்வதியினது

அழகிய வடிவுடன் வந்து பிறந்தவன், எப்பொழுதும் அசுரர்களுடைய தலைகளைத் துணித்தவன், வெவ்விய வறுமையைப் போக்கினவன் நம்முடைய மனத்தின்கண்ணே நன்கமர்ந்து நம்மேல் வரும் (தீய) வினைகளை நீக்கினவன், (எ - று)

இதில் இடைநின்ற **யானைமுகன்** என்பது உதித்தான் என்பது முதலியவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையின், இஃது **இடைநிலைப் பொருட்டீவகம்** ஆம்

கப-வது, **கடைநிலைத் தொழிற்றீவகம்**

**நேரிசை வெண்பா**

ஏ - று ‘துறவுள்ளார் சான்றோ ரிளிவரவுந் தூய
பிறவுள்ளார் ஊனுறவார் ஊணும்—பறைகறங்கக்
கொண்டா னிருப்பக் கொடுங்குழையா டெய்வமுமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று’’ என வரும்

(இ - ள்) ஞானத்தாற் சிறந்த பெரியோர்க்குத் துறவாகிய ஒழுக்கம் உள்ளது ஆக இழிந்ததாகிய (கூடா) ஒழுக்கமும், தூய்மையாகிய வேறு உணவுகள் பல உள்ளனவாகத் தசை கலந்த உணவும், ஒரு மாதுக்குப் பல வாத்தியங்கள் ஒலிக்க மணம்புரிந்துகொண்ட (அவளுடைய) கணவன் இருக்க வேறொரு தெய்வமும் உள்ளதாகக் கொண்டு வைத்தற்குரிய தன்மைய தன்று, (எ - று)

இளிவரவு - தாழ்வு அஃதிண்டு இழிவாகிய ஒழுக்கத்தை உணர்த்தியது ஊன் - தசை ஊண் - உணவு பறை - வாத்தியம் கறங்கல் - ஒலித்தல் கொடுங்குழையாள் - வளைவாகிய குழையை அணிந்த மாது ‘வைக்கற்பாற்று அன்று’ என்றதை இளிவரவு என்றது முதலியவற்றோடு தனித்தனி இயைத்து முடித்துக் கொள்க

இதில் கடைநின்ற **வைக்கற்பாற்றன்று** என்பது இளிவரவு முதலியவற்றோடு சென்றியைந்து உபகாரப்பட்டமையின் இது **கடைநிலைத் தொழிற்றீவகம்** ஆம்

கஉ-வது, **கடைநிலைப் பொருட்டீவகம்.**

நேரிசை வெணபா

வ - று " புறததன
றிறததன கொறசே ரியவே—அறததின
மகனை முறைசெயதான மாவஞசி யாடடி
முகனை முறைசெயத கண ' என வரும

(இ - ள) (பசுவின கனறினமீது தேரைச செலுததி அதைக கொனறவனுகிய தன) மைநதனை (அரசருககுரிய) தருமததினபடி கொனறவனுகிய மனுநீதிச சோழனது மேனமையாகிய வஞசி நாடடிலே வாழபவளாகிய ஒரு மாதினுடைய முகததை அலஙகரிதத கணகள, வெளிகளி லுளள மானகளினுடைய கணகளைப போனறனவும, நாட டினகண உளள அமபுகளைபபோனறனவும, நீரிலுளள தாமரை மலாகளைபபோனறனவும, மாவடுககளைப போன றனவும், கொலலாகளின சேரியிலே செயயபபடும வாள களைப போனறனவுமா யிருககினறன, (எ - று)

'நீரன' எனபதைக கருஙகுவளை எனறு கொளளு தலுமாம

இதில கடைநினற கண எனனும பொருடபெயா, புறததன எனபது முதலியவறறோடு சென றியைநது உப காரபபடடமையின இது கடைநிலைப பொருடதீவகம ஆம

இதனுள, கண - பொருள புறததன-மான ஊரன அமபு நீரன - தாமரை மாவினறிறததன - மாவடு கொறசேரிய - வாள மறறவைக குதாரணம வநதுழிக காணக

அஃதேல, குணமெனறு சொலலபபடடனவும தொழிலாயக காலம புணாநது நினறனவாலெனின அவ வாறே குணமும தொழிலும காலம புணாநதலலது தோனரு தொழிலெனபது பொருளது புடைபெயாசசி, குணமெனபது அப பொருடகுப பணபாயத தனககு வேறு பொருளினறிப பொருளை நீஙகாது நிறபது அது முனன ருணாததபபடடது (கச)

சக அதுவே,

மாலை விருதத மொருபொருள சிலேடையென
நாலவகை யானு நடைபெறு மெனப

எனபது, அத தீவகாலஙகாரம பிற அலஙகாரஙக ளோடுங கூடிவருமா றுணாததுதல நுதலிறறு

(இ - ள) அச சொலலபபடட தீவகம, மாலா தீவ கம, விருதத தீவகம, ஒரு பொருட டீவகம, சிலேடா தீவ கம என நானகலஙகாரஙகளோடு கூடியும வருமெனறு சொலலுவா புலவா, (எ - று)

அவறறுள,

க-வது, மாலா தீவகம்

நேரிசை வெணபா

வ - று "மனைககு விளகக மடவா மடவா
தமககுத தகைசால புதலவா—மனககினிய
காதற புதலவாககும கலவியே கலவிககும
ஓதிற புகழசா லுணாவு"

(இ - ள) இலலறததிறகு விளககம, மடபபததினை யுடைய பெணடிருணடாதல, அபபெணடிாககு விளககம, அழகு சானற புதலவரைப பெறுதல, அபபுதலவருககு விளககம, இனிமையான கலவி, அக கலவிககு விளககம, மறவாமை, (எ - று.)

இதனுள, விளகக மெனபதனை யெவவிடததுங கூடடுக

உ-வது, விருத்த தீவகம்

நேரிசை வெணபா

வ - று "வரிவணடு நாணு மது மலரமபாப
பொருவெஞ சிலைககுப பொலிவும—பிரிவின
விளாககு நிறமுடையாா தமமேன மெலிவும
வளாககு மலயா நிலம" என வரும.

(இ - ள) பொறிவணடு நாணாகவும, மதுமலரே கணை யாகவுங கொணடு, காமன தனியிருநதாரைப பொருகினற

விருப்பத்தையுடைய சிலைக்குப் பொலிவினையும், பிரிவு பசலையுற்றார் தம்பால் மெலிவினையும் வளர்க்கும் தென்றற் காற்று, (எ - று)

இதனுள், ஒரு பொருளே பொலிவும் மெலிவுமாகிய இரண்டு குணஞ் செய்தலின் விருத்தம்

(த - ரை) விருத்தம் - சொல்லும் பொருளும் மாறு படுதல்

௩-வது, ஒரு பொருட் டீவகம்

நேரிசை வெண்பா

வ - று "வியனுலகஞ் சூழ்திசைக ளெல்லாம் விழுங்கும்
அயலார் துணைந்த தகன்றார்—உயிர்பருகும்
விண்கவரும் வேரிப் பொழில்புதைக்கு மென்மயில்கள்
கண்கவரு மீதெழுந்த கார்" என வரும்.

(இ - ள்) அகண்ட உலகத்தைச் சூழ்ந்த திக்குக ளெல்லாவற்றையும் தன்னிடத் தடக்கும், துணையைப் பிரிந்து அயலவர் போலப் போயினார் உயிரை யுண்ணும், ஆகாயத்தை மறைக்கும், நறுநாற்றத்தையுடைய பொழிலை மூடும், மென்மையுடைய மயில்களின் கண்களை வவ்விக் கொள்ளும், உயரவெழுந்த மேகம், (எ - று)

இதிலே விழுங்கும், பருகும் புதைக்கும், கவரும் என வந்த பல சொற்கள் ஒரு பொருளையே குறித்து நிற்க, கார் என்னுஞ் சொல் விழுங்கும் என்பது முதலிய பல இடங் களிலுஞ் சென்றியைந்து உபகாரப்பட்டமையின் இஃது ஒரு பொருட்டீவகமாம்

௪-வது, சிலேடாதீவகம்

நேரிசை வெண்பா

வ - று "மானமருவி வாளரிகள் சோர்ந்து மருண்டுள்ளம்
தானமருக நீண்ட தகைமையவாம்—கான
வழியு மொருதனிநாம் வைத்தகலு மாதர்
விழியுந் தருமான மெலிவு" என வரும்

(இ - ள்) மான்கள் மருவி ஒளியையுடைய சிங்கங் கள் சோர்ந்து மயங்கிக் கண்டாருள்ளம் வெருவும்படி

நீண்ட தன்மையையுடைத்தாய காட்டு நெறியும், மயக்க மருவி ஒளியினையுடைய அரிகள் பரந்து கண்டா ருள்ள மானது மயங்கித் தடுமாறும்படி பெரிதாய ஞான தனி பிருத்திப போந்த கிழத்தியுடைய கண்ணும், நமக்கு வருத் தத்தைத் தாரின்றன, (எ - று)

இது வழிக்கும், விழிக்குஞ் சிலேடை மானமருவி - (வழி) மான்கள் பொருந்தி, (கண்) மயக்கம் மருவி, வாள் அரிகள் சேர்ந்து, - (வழி) ஒளியையுடைய சிங்கங்கள் சேர்ந்து, (கண்) ஒளியை உடைய செவ்வரிகள் சேர்ந்து, உள்ளம் மருண்டு மருக - (வழி) மனம் மயங்கி வருந்த, (கண்) மனம் மயங்கித் தடுமாற

நால்வகையானும் மனக்ற முற்றுமமையை எச்சவுமமையாக்கிப் பிறவகையால் வருவனவு முளவெனக் கொள்க அவை வருமாறு

**உவமா தீவகம்**

**நேரிசை வெண்பா**

வ - று "முன்னங் குடைபோன் முடிநா யகமணிபோல்
மன்னுந் திலகம்போல் வாளிரவி—பொன்னகலம்
தங்கு கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போல்
அங்க ணுலகளந்தாற் காம்' என வரும்.

(இ - ள்) அழகிய இடத்தினையுடைய உலகங்களை அளந்த திருமாலுக்கு (அங்ஙனம் உள்களந்தபோது) ஒளியை உடைய சூரியன் முன்னே குடைபோன்றிருந்து, பின்பு கிரீடத்தின் நடுவிலுள்ள நாயகரத்தினம் போலாய, (அதன் பிறகு) நெற்றியிலே அணிந்த திலகம்போலாய, (அதன்பின்னர்) அழகிய மார்பிலே பொருந்திய கவுத்துவ மணிபோலாய, (அதன் பிறகு) உந்தியாகிய குளத்திலே தோன்றிய செந்தாமரை மலர்போல ஆயிற்று, (எ - று)

திலகம் - பொட்டு, உந்தி - கொப்பூழ்

**உருவக தீவகம்**

நேரிசை வெண்பா

வ - று "கானற் கயலாம் வயலிற் கமலமாம்
ஏனற் கருவிளையா மின்புறவில்—மானாம்
கடத்துமேல் வேடர் கடுஞ்சரமா நீங்கிக்
கடத்துமேன் மெல்லியலாள் கண்" எனவரும்

(இ - ள்) (நெஞ்சமே!) இம் மெல்லிய தன்மையை உடையாளைப் பிரிந்து செல்வோமாயின் இவளது கண் நெய்தல் நிலத்திலே கயல் மீனாய்த் தோன்றியும், முல்லை நிலத்திலே கருவிளை மலராய்த் தோன்றியும், குறிஞ்சி நிலத்திலே மானாய்த் தோன்றியும், பாலைநிலத்திலே வேடுவர்து (கையிலுள்ள) கொடிய பாணமாய்த் தோன்றியும் நமது போக்கை விலக்கும், (ஆதலால்) இவளைப் பிரிந்து செல்லுதல் நமக்கு அரிதாகும், (எ - று)

கானல் - நெய்தல், வயல் - மருதம், ஏனல் - முல்லை, புறவு - குறிஞ்சி, கடம் - பாலை, சரம் - பாணம், மெல் இயலாள் - மென்மையாகிய தன்மையை உடைய தலைவி

இதில் கண் என்கின்ற ஒரு சொல் பல இடத்துஞ் சென்றியைந்து உபகாரப்பட்டமையின் இது தீவக அணியாம் இதனோடு கண்ணைக் கயன் முதலியனவாகக் கூறிய உருவகமும் பொருந்துதலால் இஃது உருவக தீவகம் ஆயிற்று (கரு)

௫ பின்வருநிலை யணி

௪௨. முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரு மென்னிற் பின்வரு நிலையே.

(இ - ள்) ஒரு செய்யுளுள், முன்னர் வந்த சொல்லாவது பொருளாவது பின்னர்ப் பலவிடத்தும் வருமாயின், அது பின்வரு நிலையென்னும் அலங்காரமாம், (எ - று)

அவற்றுள், க-வது, சொற்பின் வருநிலை

நேரிசை வெண்பா

வ - று "மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்
மால்வரைத்தோ ளாதரித்த மாலையார்—மாலிருள்சூழ்
மாலையின் மால்கடலார்ப்ப மதனெருடுக்கு
மாலையின் வாளி மலர்" என வரும்

(இ - ள்) மதத்தால் மயங்கிய யானையின் இடர் தீரத் தளித்த அரியுடைய தொடையல் சூழப்பட்ட பெரிய மலையையொத்த தோள்களை விரும்பிய இயல்புடையார் மேல், மயங்கிருள் சூழ்ந்த அந்திப்பொழுதில் கருங்கடல் ஆர்ப்பக் காமன் இடையறாது மலராகிய கணைகளைத் தொடுக்கும், (எ - று)

இதனுள், முன்வந்த சொல்லே பின்னும் பலவிடத்து வந்தமையின் சொற் பின்வருநிலை

(கு - ரை) அரி - திருமால்

உ-வது, பொருட்பின் வருநிலை

நேரிசைவெண்பா

வ - று "அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நோமுகை முல்லை—மகிழ்ந்திதழ்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை" என வரும்

(இ - ள்) தோன்றி மரங்கள் மலர்ந்தன, காசாஞ் செடிகள் மலர்ந்தன, அழகிய அரும்புகளை உடைய முல்லை கள் மலர்ந்தன, கொன்றை மரங்கள் குளிர்ச்சியுற்று இதழ் கள் மலர்ந்தன, கருவிளைகள் மலர்ந்தன, காந்தள் குலைகளை எடுத்தன, (எ - று)

இதனுள் அவிழ்தலும், அலர்தலும், நெகிழ்தலும், விள்ளலும், விரிதலும், மலர்தல் என்னுமொரு பொருணமே னின்றனவாதலின் அப் பெயர்த்தாயிற்று

'வருவது' என்றது, 'வருமென்னின்' என்றதனை, முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர்ப் பலவிடத் தும் வருவது, சொற்பொருட் பின்வருநிலை யெனக் கொள்க

நேரிசைவெண்பா

வ - று "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்" என வரும்

(இ - ள்.) நாடோறும் பொழுது கழிதலைத் தமது ஆயுளினையே தங்குதலாக வைத்து அப் பொழுதுகழிவை உணரும் இயல்பில்லாதவர்கள், நாடோறும் பொழுது கழிவு வராநிற்கக் கண்கூடாகப் பார்த்திருந்தும் அப் பொழுதுகழிவை உணர்ந்து துன்புறுமல் நாடோறும் அப் பொழுதுகழிவை முட்டின்றிக் கழியாநிற்கும் என்று மகிழ்வார், (எ - று)

இதில் வைகல் என்னும் முன்வந்த சொல் பின்னும் பலவிடத்தும் வந்து ஒரு பொருளே தந்தமையின், இது சொற்பொருள் பின்வரு நிலையாம் என்பது

இன்னும் அவ்விலேசானே பிறவலங்காரங்களோடு கூடி வருவனவுங் கொள்க

நேரிசைவெண்பா

வ - று "செங்கமல நாட்டஞ் செழுந்தா மரைவதனம்
பங்கயஞ் செவ்வாய் பதுமம்போல—செங்கரங்கள்
அம்போ ருகந்தா ளரவிந்த மாரணா
தம்போ ருகந்தா டனம்" என வரும்

(இ - ள்) மன்மதனது அழகிய போரை (காமப் போரை) விரும்பினவளது கண்கள் செவ்விய தாமரையைப் போல்வனவாம், முகஞ் செழிய தாமரையைப் போல்வதாம், செவ்வாய் தாமரையைப் போல்வதாம், சிவந்த கைகள் தாமரையைப் போல்வனவாம், பாதங்கள் தாமரையைப் போல்வனவாம், தனங்கள் தாமரையைப் போல்வனவாம், (எ - று)

இதில் கமலம், தாமரை, பங்கயம், பதுமம், அம்போருகம், அரவிந்தம் என்னும் சொற்கள் தாமரை என்னும் ஒரு பொருளுணர்த்தி நின்றமையின், இது பொருட்பின் வருநிலையாம், அவை கண்கள் முதலியவற்றிற்கு உவமையாய் வந்தமையின் இஃது உவமைபொருட் பின்வருநிலையாம் என்பது

கமல முதலியன ஒருபொருட் பன்மொழிகள் பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க (கக)

க　முன்னவிலக்கணி

சா. முன்னத்தின் மறுப்பினது முன்ன விலக்கே
மூவகைக் காலமு மேவிய தாகும்

என்பது, நிறுத்தமுறையானே முன்னவிலக்கு என்னும் அலங்கார முணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) ஒரு பொருளைக் குறிப்பினான் விலக்கின் அது முன்னவிலக்கென்னும் அலங்காரமாம் அஃது இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் மூவகைப்பட்ட காலங்களோடும் கூடியதாம்

'மறுப்பது' என்னாது 'மறுப்பின்' என்றதனால், கூற்றினான் மறுப்பினும் அவ் அலங்காரமாம் குறிப்பினான் மறுப்பது பொருட்பொலிவுஞ் செய்யுட் சிறப்பு நோக்கி யெடுத்தோதினார், ஏனையது அன்னது அன்மையின் இலேசா னுடன்பட்டா ரென்பது

இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்பனவற்றைக் கூற்றொடுங் குறிப்பொடுங் கூட்ட அறுவகையாம்

அவற்றுள்,

க-வது, இறந்தவினை விலக்கு

நேரிசை வெண்பா

வ-று "பாலன் றனதுருவா யேழுலகுண் டாலிலையின்
மேலன்று கண்டுயின்றாய் மெய்யென்பா—ஆலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்"　　என வரும்

(இ - ள்) சோலை சூழ்ந்த குன்றமெடுத்த மாயவனே நீ! உலகம் ஏழையு முண்டு பால னுருவத்தைக் கொண்டு ஆலிலையிலே யுறங்கினாய் யென்பது உலகத்துள்ளோர் மெய்யென்று சொல்லுவர் நீ உலகத்தை உண்டுறங்கிய ஆலானது, அன்று, கடலுள்ளே நின்றதோ? மண்ணிலே நின்றதோ? ஆகாயத்தே நின்றதோ? சொல்லுவாயாக, (எ - று)

உலகமுழுவதும் உண்ணப்பட்ட காலத்து ஆலிலை போன்று தனியாக இருந்ததென்பது பொருந்தாது என அது நுட்பத்தால் விலக்கப்பட்டது.

உ-வது, எதிர்வினை விலக்கு

நேரிசை வெண்பா

வ-று "முல்லை கொடிநடுங்க மொய்காந்தள் கைகுலைப்ப
எல்லை யினவண் டெழுந்திரங்க—மெல்லியன்மேற்
றீவாய் நெடுவாடை வந்தாற் செயலறியேன்
போவா யொழிவாய் பொருட்கு" என வரும்.

(இ-ள்) தலைவனே! முல்லைக்கொடியானது நடுங்க, நெருங்கிய காந்தள் மலரானது விரிய, ஒளியினையுடைய வண்டின் கூட்டங்க ளெழுந்தொலிக்க, தீயையுடைய நெடிய வாடையானது மெல்லிய நடையையுடைய இவள் மேல் வந்தால் பின் விளையுஞ் செய்தி யறியமாட்டேன்! ஆதலின், பொருளீட்டுதற்குப் போவா யொழிவாய், (எ-று)

ந-வது, நிகழ்வினை விலக்கு

நேரிசை வெண்பா

வ-று "மாதா நுழைமருங்கு னோவ மணிக்குழைசேர்
காதின் மிசைநீலங் கைபுனைவீர்!—மீதுலவு
நீணீல வாட்க ணெடுங்கடையே செய்யாவோ
நாணீலஞ் செய்ய நலம்" என வரும்.

(இ-ள்) காதலைச் செய்யும் நுண்ணிடை வருந்த, மணிக்குழையையுடைய உமது காதின்மீதே மிகையாக நீலப்பூவைச் சாத்துகின்றவரே! அக் காதின்மீதே யுலாவுகின்ற நீண்ட நீலமாகிய நிறத்தையுடைய கண்களி னெடிய கடையே செய்யாவோ, நீவிர் நன்றாகச் சூடிய நீலப்பூச் செய்யும், நலத்தை, (எ-று)

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. (கஎ)

சச. அதுவே,

பொருள்குணங் காரணங் காரியம் புணரும்.

என்பது, அவ் வலங்காரத்துச் சில வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள) அவ் விலக்கு, பொருள் விலக்கும், குண விலக்கும், காரண விலக்கும், காரிய விலக்கும் என நான்கு வகையானும் வரும், (எ - று)

அவற்றுள்,

க-வது **பொருள் விலக்கு**

நேரிசை வெண்பா

வ - று 'கண்ணு மனமுங் கவர்ந்தவ ளாடிடமென்
றண்ண லருளு மடையாளம்—தண்ணிழலின்
சுற்றெல்லை கொண்டுலவு சோதித் திரளல்லால்
மற்றில்லை காணும் வடிவு' என வரும்.

(இ - ள) நம்முடைய தலைவன் தன்னுடைய கண்ணையும் மனத்தையும் கவர்ந்துகொண்ட மடவாள் விளையாடு மிடமென்று நமக்கு அருளிச் செய்த சோலையினக ணுண்டாகிய குளிர்ந்த நிழலைச் சேர்ந்த சூழலிடத்தைக் கைக்கொண்டு உலாவித் திரிவதொரு சோதியுருவ மல்லது, அச் சோதியுருவின் அவயவங்களைக் காண்டற் கரிதாயிருந்தது இஃது ஒருருவத் தன்மை இருந்தபடி, (எ - று)

உ-வது, **குண விலக்கு**

நேரிசை வெண்பா

வ - று "மாதா துவரிதழ்வாய் வந்தென் னுயிர்கவரும்
சீத முறுவ லறிவழிக்கும்—மீதுலவி
நீண்ட மதர்விழியென் னெஞ்சங் கிழித்துலவும்
யாண்டையதோ மென்மை யிவர்க்கு" என வரும்

(இ - ள) இவருடைய அழகிய பவளம்போன்ற வாயானது, என்னுடைய உயிரை வந்து கவராநின்றது குளிர்ந்த நகையானது, அறிவை யழிக்காநின்றது, காதின் மீது உலாவி மதர்த்து நீண்ட விழியானது, என்னுடைய நெஞ்சத்தைக் கிழித்து உலவாநின்றது, ஆதலால், இவர்க்கு மென்மை எங்குள்ளதோ சொல்லுவாயாக, (எ - று)

ங-வது, **காரண விலக்கு**

நேரிசை வெண்பா

வ - று 'மதரரிக் கண்சிவப்ப வார்புருவங் கோட
அதரந் துடிப்ப வண்சோர—நுதல்வியர்ப்ப
நின்பால் நிகழ்வன கண்டஞ்சா தென்னெஞ்சம்
என்பால் தவறின்மை யால்' என வரும்

(இ - ள்) மடவாய்! செவ்வரி பரந்து மதர்த்த கண் சிவப்ப, நீண்ட புருவம் வளைய, அதரந் துடிக்க, அழகு சோர்ந்த நெற்றியானது வியர்ப்ப, உன்னிடத்தில் நிகழ்வன வற்றைக் கண்டு என்னுடைய நெஞ்சம் பயப்படமாட்டாது, என்னிடத்தில் குற்றமில்லாமையால், (எ - று)

௪-வது, **காரிய விலக்கு**

நேரிசை வெண்பா

வ - று "மன்னவர் சேயர் மயிலகவி யாடலும்
பொன்னலருங் கொன்றையும் பூந்தளவின்-மென்மலரும்
இன்னுயிரா மின்முகிலு மெய்யென்று கொள்வதேல்
என்னுயிரோ வின்னுமுளது" என வரும்,

(இ - ள்) நம் காதலர் (வினை கருதிச்) சேய்த்தாகிய நாட்டுளராக, மயிலினங்கள் கூவி யாடுதலும், கொன்றைகள் பொன்போல மலர்தலும், அழகிய முல்லையின் மிருதுவாகிய மலரும், மின்னலைக் கொடுக்கின்ற நெடிய மேகமுமாகிய இவை மெய்யென்று கொள்வோமாயின், என்னுயிரோ இன்னும் உடலொடு பொருந்தி நின்றது, (எ - று)

இதனுள், காரியம் - உயிரில்லாதாதல் (௧௮)

**௪௫. வன்சொல் வாழ்த்துத் தலைமை யிகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவச முபாயம்
கையற லுடன்படல் வெகுளி யிரங்கல்
ஐய மென்றாங் கறிந்தனர் கொளலே**

என்பதும், அவ் விலக்கென்னும் அலங்காரத்தை விரித்துணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) வன்சொல் விலக்கும், வாழ்த்து விலக்கும், தலைமை விலக்கும், இகழ்ச்சி விலக்கும், துணைசெயல் விலக

கும், முயற்சி விலக்கும், பரவச விலக்கும், உபாயவிலக்கும், கையறல் விலக்கும், உடம்படல் விலக்கும், வெகுளி விலக்கும், இரங்கல் விலக்கும், ஐய விலக்கும் என்று சொல்லிய பதின்மூன்று பாகுபாட்டையுடைய தென்று அறிந்து கோட்லை யுடைத்து அவ்விலக்கலங்காரம், (எ - று)

அவற்றுள்,

க-வது, **வன்சொல் விலக்கு**

என்பது வன்சொற் சொல்லி விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று "மெய்யே பொருண்மேற் பிரிதியேல் வேறொரு
தையலை நாடத் தகுநினக்கு—நெய்யிலைவேல்
வள்ளல் பிரிவுற்றம் பார்த்தெங்கள் வாழ்நாளைக்
கொள்ள உழலுமாம் கூற்று என வரும்

(இ - ள்) ஒருதலையாய பொருண்மே லாசையாற் பிரிதியேல், இப்பொழுதே யுனக்கொரு மனையாளைத் தேடத் தகுவதாயிருந்தது, நெய்யையுடைத்தாகிய வேலை யுடைய வள்ளலே! நீ பிரிந்த அவகாசத்தைப் பார்த்து, அப்பொழுதே யெங்கள் வாழ்நாளைக் கொள்வதாக நினைத்துத் திரியாநின்றது கூற்றம், (எ - று)

உ-வது, **வாழ்த்து விலக்கு** என்பது, வாழ்த்தி வைத்து விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று "செல்லு நெறியனைத்து ஞ்சேம நெறியாக
மல்க நிதியம் வளஞ்சிறக்க—வெல்லும்
அடற்றேர் விடலை யகன்றுறைவ தாங்கோ
இடத்தே பிறக்க வியாம்" என வரும்

(இ - ள்) வென்றியினையும் வலியினையுமுடைய தேரினையுடைய வீரனே! நீ எம்மைப் பிரிந்துபோகக் கருதிப் போகும் வழியனைத்தும் உனக்குக் காவலாகிப் பரிகாரஞ் செய்வதாக! நினக்குப் பொருள் வருவாயும் பெருகுவதாக! செல்வம் பெருகுக! நீ இப்படிப் பிரிந்து நிலையாக நிற்பதெவ்விடம்? அவ்விடத்தை யெங்கட்குச்

சொல்லவேண்டிய நாட்கள் அவ்விடத்தே அறிந்து பிறப் போமாக, (எ - று)

இறக்குங்காலத்து உண்டாய நினைவு இறந்த பின்னர் வந்து ஊட்டுமென்பதனை அறிக

(கு - ரை) இங்கே ஆக, மக்க, சிறக்க என்று வாழ்த்தி, 'விட்டிலை யகன்றனைவர் தாங்கோர் இடத்தே பிறக்க' என்பதனால் மரணம் சம்பவிக்கும் என்பது க கூறிச் செல்லுதலை விலக்கியவாறுணர்க

௩-வது, **தலைமை விலக்கு** என்பது தன்றாற்றலைமை தோன்றக் கூறி விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று 'பொய்ம்மை நெறிநீர் பொருளு மிகப்பயக்கும்
எம்முயிர்க்கு மேது மிடரிலை—வெம்மைதீர்ந்
தேக வினிய நெறியனைய வென்றாலும்
போக லொழிவாய் பொருட்கு" என வரும்

(இ - ள்) பொய்யாகிய வழியினைத் தப்புவிக்கின்ற பொருளும் பெரிது உண்டாகும் எங்களுயிர்க்கும் ஓரிடருண்டாகமாட்டாது அவ்வழி நடப்ப வருத்தமின்றி இன்பமுண்டாக்கும் அவ்வழி தானுஞ் சிறுகித் தோன்றுமென்று சொன்னேமேயாயினும் பொருள் கருதிப் போகின்ற போக்கை நீ யொழிவாயாக, (எ - று)

(கு - ரை) இங்கே "எம்முயிர்க்கு மேது மிடரிலை" என்பதனாலே சுவாதீன நிலைமை தோன்றுமாறு அறிக

௪-வது, **இகழ்ச்சிவிலக்கு** என்பது, விலக்குதற் கேதுவை யிகழ்ந்து விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று "ஆசை பெரிதுடையே மாருயிர்மே லப்பொருண்மேல்
ஆசை சிறிது மடைவிலமால்—தேசு
வழுவா நெறியின் வருபொருண்மே லண்ணல்
எழுவா யொழிவா யினி" என வரும்

(இ - ள்) தலைமை கெடாதவண்ணம் நல்வழிக் **கண்ணே** யொழுகுகின்ற பொருள்கருதிப் பிரிகின்ற

பெரியோனே! யாம் எங்கள் அரிதாகிய உயிரின்மேல் மிக ஆசையுடையேம்; நீ நினைத்துப் பிரிகின்ற பொருண்மே லாசையுண்டாதற்குக் காரணஞ் சிறிதுமிலேன, ஆதலால், நீ பொருண்மே லேகுவாய் அன்றி யதனைத் தவிராவாய், எங்கள் தன்மை இது, (எ - று)

(ந - ரை) உயிர்மேலன்றிப் பொருள்மேல் எமக்கு விருப்பமில்லை என்பதனால், செல்லுகைக்குக் காரணமான பொருளை இகழ்ந்து கூறிச் செலவுதலை விலக்கியவாறு அறிக

ரு-வது, துணைசெயல் விலக்கு என்பது, துணைசெய்வாரைப் போலக் கூறி விலக்குவது

நேரிசை வெண்பா

வ று "வினைபொருண்மே லண்ணல் விரும்பினையே லீண்டெம்
கிளையழுகை கேட்பதற்கு முன்னே—விளைதேன
புடையூறு பூந்தார் புனைகழலாய் போகிற
கிடையூறு வாராம லேகு" என வரும்

(இ - ள) மிகுதியாகிய தேனூறுகின்ற பூமாலையினை யும், அலங்கரிக்கப்பட்ட கழலினையுமுடைய தலைவனே! நன்மை பயக்கும் பொருண்மேலே போதல் விரும்பினை யாயின், எங்கள் சுற்றத்தார் அழுவது கேட்பதற்கு முன்னே யிப்பொழுதே உன்னுடைய போகிறதற்கு விலக்கு வாரா வண்ணம் போவாய், (எ - று)

சு-வது, முயற்சி விலக்கு என்பது, முயற்சி தோன்றக் கூறி விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று
"மலலணிந்த தோளாய் இதெனகொலோ வான்பொருண்மேற்
செலக விரைந்தெனை ருளந்தெளிந்து—சொலலுதற்கே
என்று முயலவலியா னேகனீ யென்றிடையே
தோன்றுகின்ற தென்வாயிற் சொல்" என வரும்

(இ - ள) வளப்பத்தினையுடைய தோளினை யுடை யாய்! நீ நன்மை பயக்கும் பொருளின் றிறத்தே கடுகிப் போவாயாக என்று என்னுள்ளமானது கலக்கமறச்

சொல்லுவதாக நினைத்துத் தொழிற்பட்டு நின்றது; அச் சொல்லுள்ளே பொருட்சேறப் போகாதொழிவாயாக என்று சொல்லுவதாகத் தோன்றுகின்றது; இஃது என்னுடைமோ? சொல்லுவாயாக, (எ - று)

எ-வது, **பரவச விலக்கு** என்பது, தன் வசமல்லாமை தோன்றக் கூறி விலக்குவது.

நேரிசை வெண்பா

உ - ம் ‘ செல்கை திருவுளமேல் யானறியேன் றேங்கமழ்தார்
மல்லகலந் தங்கு மதர்விழியின் — மெல்லிமைகள்
நோக்கு விலக்குமே னோவா ரிவள்காதல்
போக்கி யகல்வாய் பொருட்கு ” என வரும்.

(இ - ள்) இவ்விப் பிரிவே காரியமாகத் திருவுள்ளத் தடைத்துப் பொருட்குப் பிரிவாயானால், அதன் மேல்நிற்கும் காரியமொன்று மறியப்பட்டதாகலான், நறு நாற்றத்தைப் புடைத்தாகிய தாரினையும் வளப்பத்தினையு முடைத்தாகிய நின்னுடைய மார்பின்கண்ணே பிரியாது தங்கப்பட்ட விழியினிடத்து உண்டாகிய மெல்லியதாகிய இமையானதுவே எம்முடைய தலைவன் மார்பினைப் பார்க்கின்ற பார்வையினை விலக்காநின்றன என்றதற்கு வருந்துந் தன்மையையுடைய இவள், நின்மேல் வைத்த ஆசையினைப் போக்கிப் போவாயாக, (எ - று)

அ-வது, **உபாயவிலக்கு** என்பது, விலக்குவதனை ஒருபாயங் காரணமாக விலக்குவது.

நேரிசை வெண்பா

உ - ம் “ இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே இளவேனில்
மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தால் — அன்னோர்
தமக்கெம்மைத் தோன்றாத் தகைமையதோர் விஞ்சை
எமக்கின் றருள்புரிந்தே யேகு என வரும்.

(இ - ள்) எங்களுடைய இனிய உயிரைக் காக்குந் தன்மையை யுடையையாகிய நீ பிரியக் கருதினையாயின், எங்களிடத்து இளவேனிற் காலத்துத் தலைவனாகிய காமனும், கூற்றுவனும் வந்து சேர்ந்தால் அவர் கண்ணுக்கு

நாகள் சோறு தேயிருப்பதொரு விருசையை எங்க ளுக்குத் தந்து போவாயாக, (எ - று)

௯-வது, கையறல் விலக்கு என்பது, தத்தமக்கு வேண்டிய பொருண்மேல் முயலு மொழுக்கமின்மை தோன்றக் கூறுவது

(ஏ - ரை) கையறல்-செய்யாதொழிந்த வினைகளுக்கு வருந்துதல்

நேரிசை வெண்பா

வ - று ' வாய்த்த பொருள்விளைத்த தொன்றில்லை மாதவமே
ஆர்த்த அறிவில்லை யம்பலத்துக்—கூத்துடையான
சீலஞ் சிறிதேயுஞ் சிந்தியேன் சென்றொழிந்தேன்
காலம் வறிதே கழிந்து '' என வரும்

(இ - ள) நற்பொருளை விளைத்தற்குக் காரணமாகிய யாதொரு முயற்சியுஞ் செய்யவில்லை, பெரிய தவத்தைத் தேடிக்கொள்ளத்தக்க அறிவுமில்லை, சிதாகாசத்தில் ஆனந்த தாண்டவஞ் செய்கின்ற நடேசனுடைய மானமியுத் தைச் சிறிதேனும் நினைக்கவில்லை, ஆதலால், என் வாணாளை வீணாக்கிவிட்டேன், (எ - று)

௧0-வது, உடன்படல் விலக்கு என்பது, உடன்பட்டாற்போல விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று ' அப்போ தடுப்ப தறியே னருள்செய்த
இப்போ திவளு மிசைகின்றாள்—தப்பில
பொருளோ புகழோ தரப்போவீர் மாலை
இருளோ நிலவோ வெழும் '' என வரும்

(இ - ள) குற்றமற்ற பொருளென்ன புகழென்ன இவற்றை யுண்டாக்குதற்குப் பிரிந்துபோவீர், நீர் பிரிந்த அப்பொழுதே இவளுக்கு அடுப்பதொன்றும் என்னு லறி யப்படாது, நீர் அருளிச் செய்த பிரிவுக்கு இப்போது இவ ளும் உடன்படாநின்றாள், இது கிடக்க, மாலைக்காலம் வந்த பொழுதே அதனோடு இருளோ மதியமோ வருதல் செய் யும், இதனை நீர் அறிவீர், (எ - று,)

௧௧-வது வெகுளி விலக்கு என்பது, வெகுளிதோன்றக் கூறி விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று "வண்ணங் கருக வளைசோர வாய்புலர
எண்ணந் தராமே மெலிந்தின்று — கண்ணின்றிப்
போதல் புரிந்து பொருட்காதல் செய்வீரால்
யாதும் பயமிலேம் யாம்" என வரும்

(இ - ள்) இவளுடைய நிறங் கருகி வேறுபடவும், கையில் வளையானது சிந்தவும், வாயானது நீரற்று உலரவும், நன்மை பயப்பதாக நாங்களெண்ணிய எண்ண மெல்லாம் பழுதாகவும் எங்களைத் தீரக் கண்ணோட்டமின்றிப் பிரிதல் விரும்பி எங்களை வெறுத்துப் பொருளை ஆசைப்படுவீரானால் இனி எங்களுக்கு ஒரு பயனுமில்லை, (எ - று)

(உ - ரை) இங்கே தலைவன் பிரிபின் வண்ணங் கருகுதல் முதலிய நிகழ, எதிர் நின்று "யாதும் பயமிலேம் யாம்" என்றதனால் வெகுளி தோன்றக் கூறிச் செலவை விலக்கியவாறு அறிக

கஉ-வது, இரங்கல் விலக்கு என்பது, இரங்கல் தோன்றக் கூறி விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று "ஊசல் றொழிலிழக்கு மொப்பு மயிலிழக்கும்
வாசஞ் சுனையிழக்கும் வள்ளலே — தேசு
பொழிலிழக்கு நாளையெம் பூங்குழலி நீங்க
எழிலிழக்கு மற்றோ விவண்" என வரும்

(இ - ள்) எம்முடைய பூவினா லலங்கரிக்கப்பட்ட குழலினையுடைய இவள் உயிரிழப்பதேயன்றி நாளை ஆடுகின்ற ஊசல்களும் விளையாடற் றொழிலை யிழக்கும், மயிலும் உவமையை யிழக்கும், சுனைகளும் நறுநாற்றத்தை யிழக்கும், பொழிலும் ஒளியை யிழக்கும், இவ்விடமும் அழகை யிழக்கும், தலைவனே! இனி யடுத்தவாறு செய், (எ - று)

கங-வது, ஐய விலக்கு என்பது, ஐயுறுதலை விலக்குவது

நேரிசை வெண்பா

வ - று
"மின்னே பொழிலின் விளையாடு மிவ்வுருவம்
பொன்னே வெனுஞ்சுணங்கிற் பூங்கொடியோ—என்னே
திசையுலவுங் கண்ணுந் திரண்முலையுந் தோளும்
மிசையிருளுந் தாங்குமோ மின்" என வரும்

(இ - ள்) இப்பொழிலின்கண்ணே விளையாடுகின்ற இவ்வுருவம், மின்னினது உருவமோ அன்றியே, பொன்னே வென்று ஐயுறு நிறத்தையுடைய சுணங்கை யுடைத்தா யிருப்பதொரு உருவத்தை யுடைத்தாகிய கொடியோ? யாதோ வென்று ஐயுறுகின்ற நெஞ்சமே! திக்கனைத்தும் பரந்து உலாவித் திரிகின்ற கண்ணினையும், திரண்ட முலையினையும், இரண்டு தோளினையும் தன்மீதே யிருளினையுந் தாங்கி யிருப்பதொரு மின்னும் உண்டோ? சொல்லுவா யாக, (எ - று)

(கு - ரை) இங்கே மின்னே கொடியோ என்னும் ஐயம், கண் முதலியவைகளை மின் தாங்குமோ என்பதனால் விலக்கப்பட்டது (கக)

இதுவுமது

சசு வேற்றுப்பொருள் சிலேடை யேதுவென் றின்னவை
மேற்கூ றியற்கையின் விளங்கித் தோன்றும்

என்பது இவ்வலங்காரம் பிறவலங்காரங்களோடு கூடி வருமா றுணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) வேற்றுப்பொருள்வைப்பும், சிலேடையும், ஏதுவும் என்று சொல்லப்பட்டவைகளோடு இவ் விலக்கென்னும் அலங்காரம் கூடி மேற்சொல்லப்பட்ட அலங்காரங்கள் போலவரும், (எ - று)

அவற்றுள்,

க-வது, வேற்றுப் பொருள்வைப்பு விலக்கு

நேரிசை வெண்பா

வ - று
"தண்கவிகை யாலுலகந் தாங்கு மநபாயன்
வெண்கவிகைக் குள்ளடங்கா வேந்தில்லை—எங்கும்
மதியத் துடனிரவி வந்துலவும் வானிற்
பொதியப் படாத பொருள்" என வரும்

(இ-ள்) உள்ளந் தளராது கொடுக்குங் கொடையையுடைய அநபாய சோழனுடைய வெண்கொற்றக் குடைக்கீழ் அடங்காத வேந்தர் எங்கு மில்லை மதியும், இரவியுந் தவழுகின்ற ஆகாயத்தில் அடங்காத பொருளும் எங்கும் இல்லை, (எ-று)

உ-வது, சிலேடை விலக்கு

நேரிசை வெண்பா

வ-று 'அம்போ ருகமுஞ்செற் றமுத மயமாகி
உம்பர் முறவ வொளிவளர்க்க—இம்பர்
முகைமதுவார் கோதை முகமுண் டுலகின்
மிகைமதியும் வேண்டுமோ வேறு" என வரும்.

(இ-ள்) தாமரையினது அழகை யழித்து, அமிர்தத் தன்மைத்தாய்ப் புதுமையோடு கூடி விரியாநின்ற ஒளியை யுடைத்தாதற்கு, முல்லை முகைகளையுடைய கோதையை யுடையாளுடைய முகமல்லது, தாமரையைக் கருகுவித்து அமிர்த கலைகளா லியன்ற வடிவுடைத்தாய்ச் செவ்வி தாராநின்ற வொளி நிலாவிரி மதி உலகத்திற்கு மிகை, (எ-று)

இது, முகத்திற்கும் மதிக்குஞ் சிலேடை

௩-வது, ஏது விலக்கு

நேரிசை வெண்பா

வ-று "பூதலத்து ளெல்லாப் பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே கவர்தலால்—நீதி
அடுத்துயர்ந்த சீர்த்தி யநபாய யார்க்கும்
கொடுத்தியெனக் கொள்கின் றிலேம்" என வரும்

(இ-ள்) பூமண்டலத்துள்ளே வறிஞராய் ஆசைப்பட்டாரியாவரும், தாம் ஆசைப்பட்ட பொருள்களைத் தடையின்றித் தாமே யெடுத்துக்கொள்ளுகின்றா ராதலால், நீ யுலகத்து வறியோர்க்குக் கொடுக்கின்றாயாக நினைக்கின்றிலோம், நீதியைச் செய்தலாலே உயர்ந்த கீர்த்தியையுடைய அநபாயனே! (எ-று) (௨௦)

எ வேற்றுப்பொருள் வைப்பணி

சஎ முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை யுலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப் பொருள் வைப்பே.

(இ - ள்) முன் ஒரு பொருட்டுத் தொடங்கிய பின்னர் அது முடித்தற்கு வலியுடைய பிறிதொரு பொருளை உலகறி பெற்றியான் வைத்து மொழிவது வேற்றுப் பொருள் வைப்பெனனும் அலங்காரமாம், (எ - று)

இதன் அகலம் உரையிற் கொள்க (உக)

சஅ முழுவதுஞ் சேறல் ஒருவழிச் சேறல்
முரணிற் றோன்றல் சிலேடையின் முடித்தல்
கூடா வியற்கை கூடு மியற்கை
இருமை யியற்கை விபரீதப் படுத்தலென்
றின்னவை யெட்டு மதனதியல்பே.

என்பது அவ்வலங்காரத்தை விரித்துணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) முழுவதுஞ் சேறலும், ஒருவழிச் சேறலும், முரணிற் றோற்றலும், சிலேடையின் முடித்தலும், கூடாவியற்கையும், கூடுமியற்கையும், இருமையியற்கையும், விபரீதப்படுத்தலும் என எண் வகையான வரும் அவ்வலங்காரம், (எ - று)

அவற்றுள்,

க-வது முழுவதுஞ் சேறல் என்பது, ஒருதிற முரைத்தால் அத்திற மெல்லாவற்றின்மேலும் முற்றச் செல்ல வுரைப்பது

நேரிசை வெண்பா

வ - று "புறந்தர திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்
சிறந்த வொளிவளர்க்குந் தேரோன் — மறைந்தான்
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்றார் யார்" என வரும்

(இ - ள்) இருள் புறங்காட்டி ஓடும்படி அழகிய சக்கரத்தைச் செலுத்திச் சிறந்த ஒளியை வார்க்குந் தேரை உடையவனாகிய சூரியன் மறைந்தான், புறத்தே கடலாற் சூழப்பட்ட இவ்வுலகில் இறவாமல் வாழ்பவர் யார்? (எ - று)

சேறல் - செல்லுதல்

உ-வது, ஒருவழிச் சேறல் என்பது ஒரு திறமுடைத்தால் அத்திறமெல்லாவற்றின் மேலும் முற்றச் செல்லாது, சிலவற்றின் மேலே சென்றொழிவது

(ரு - ரை) ஒருவழி - சிலவிடம்

நேரிசை வெண்பா

வ - று "எண்ணும் பயன்றூக்கா தியார்க்கும் வரையாது
மண்ணுலகில் வாம னருள்வளர்க்கும்—மின்னுறுந்தேன்
பூத்தளிக்குந் தாராய் புகழாளர்க் கெவ்வுயிரும்
காத்தளிக்கை யன்றோ கடன்" என வரும்

(இ - ள்) திருமால் (பிறரால்) கருதப்படும் பயனொன்றையும் (தன் பொருட்டாக) நினையாமல், யாவர்க்கும் வரையறை இல்லாமல் கருணையை வளர்ப்பன், குளிர்ந்த நல்ல தேனை மலர்ந்து கொடுக்கின்ற (மலர்) மாலையை உடையவனே! புகழையுடையவர்களுக்குக் கடமையாவது எல்லா உயிர்களையுங் காத்தளிப்ப தல்லவா? (எ - று)

வாமன் என்பது அருகன், சிவன் ஆகிய இவர்கட்கும் பெயராய் வழங்கும்

கூ-வது, முரணித் தோன்றல் என்பது, தம்முள் மாறுபட்டிருக்கும் இயல்புடைத்தாய பொருள் வைப்பது

நேரிசை வெண்பா

வ - று "வெய்ய குரற்றோன்றி வெஞ்சினவே றுட்கொளினும்
பெய்யு முகிறன்னைப் பேணுவரால்—வையத்
திருள்பொழியுங் குற்றம் பலவரினும் யார்க்கும்
பொருள்பொழிவார் மேற்றே புகழ்" என வரும்

(இ - ள்) கொடிய இடியோசையைத் தோற்றுவித்து (அதற்குக் காரணமான) மிக்க உக்கிரமான இடியை உட

கொணடிருநதாலும, மழை பொழியு மேகததை யாவரும விருமபுவா யாவாககும புகழதல, இருளினது தனமை மிகக பல குறறஙகள உளவாயினும பொருளைச சொரிவாா மேலதே யாம, (எ - று)

இதில ஈகைககும கடுஙகுரல முதலியவறறிறகும மாறுபாடு இருததலைக காணக

௫-வது, சிலேடையின் முடித்தல் எனபது, முனனா வைதத பொருளையும, பினனா வைதத பொருளையும, ஒரு சொறறொடா பாற சொலலுவது

நேரிசை வெணபா

வ - று " எறறே கொடிமுலலை தனனை வளாதசெடுதத
முறறிழையாள வாட முறுவலிககும—முறறு
முடியாப பாவை முழஙகுலகத தெனறும
கொடியாாககு முணடோ குணம " என வரும

(இ - ள) முலலைக கொடியானது தனனை வளாத தெடுதத (தொழிவ) முதிாநத ஆபரணஙகளை அணிநத தலைவி மனம வாடுமபடி செயயாநினறது, எனறும அழி யாத கடல முழஙகிககொணடிருககும இவவுலகததிற கொடியவாகளுககுங குணமுணடோ ? (எ - று)

இதில கொடியாா எனறது முலலைக கொடிகளையும, கொடியவாகளையும உணாததியது இதனுள கொடுமை யுடையாாககும கொடிககுஞ சிலேடை வநதவாறு காணக

௬ வது, கூடா வியற்கை எனபது, கூடாததனைக கூடுவ தாககிக கூறுவது

நேரிசை வெணபா

வ - று " ஆா வடமு மதிசீத சநதனமும
ஈா நிலவு மெரிவிரியும—பாரில
துதிவகையான மேமபட்ட துபபுரவுந தததம
விதிவகையான வேறு படும " என வரும

(இ - ள) (குளிாநத) முததுமாலையும, மிகக குளிாசசி யாகிய சநதனமும, குளிாநத நிலவும (காதல நோயை யுடையாாககு) அழலின தனமையை விரிககினறன, இட பூமியினகண துதிததறகுரிய வகையினுன மேமபட்ட

அனுபவப்பொருள்களும், தமது தமது விதியினது வகை யினால் மாறுபடுவனவாம், (எ - று)

இதனுள் குளிர்ச்சியாகிய முத்துமாலை முதலியவற்றில் அழலின் தன்மையாகிய கூடாததனைக் கூடுவதாக நியாயங்காட்டி நாட்டினமை யுணர்க

கூ-வது கூடுமியற்கை என்பது கூடுவதனைக் கூடுவதாகக் கூறுவது

நேரிசை வெண்பா

வ - று 'பொய்ப்புரையா வண்பார் புனைதோ ணெறிநோக்கிக்
கைவளைசோர்ந் தாவி கரைந்துருகார்—மெய்வெதும்பப்
பூத்தகையுஞ் செங்காந்தள் பொங்கலிநீர் ஞாலத்துத்
தீத்தகையார்க் கீதே செயல்' என வரும்

(இ - ள்) எக்காலத்தும் பொய்பேசாத காதலரது தேர்வரும் வழியைப் பார்த்துக்கொண்டு கையினின்று வளையல் சழன்று விழ, உயிர் நைந்து வருந்துகின்ற பெண்களினுடைய உடல் வெதும்பும்படி செங்காந்தட் பூக்கள் மலர்ந்து வருத்தாநின்றன; மிக்க ஒலியினையுடைய பூமியில் தீக்குணம் உடையவர்களுக்கு இதுதான் செயல், (எ - று)

தீத்தகையார் - தீக்குணமுடையார்! தீப்போலும் நிறத்தினை உடைய காந்தட் பூக்கள்.

எ-வது, இருமை யியற்கை என்பது, கூடாததனையும் கூடுவதனையும் ஒருங்கு கூறுவது

நேரிசை வெண்பா

வ - று "கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக் குரைகடலும்
கூவித் தமியோரைக் கொல்லுமால்—பாவாய்!
பெரியோரும் பேணாது செய்வாரே போலும்
சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு" என வரும்

(இ - ள்) பாவையைப் போன்ற பெண்ணே! இடையர்கள் வாயின் புல்லாங்குழலே யல்லாமல் ஒலிக்கின்ற கடலும் கத்தித் தலைவர்களைப் பிரிந்திருக்கின்ற மாதர்களைக் கொல்லுகின்றது, சிறியோர் பிறர்க்குச் செய

புந் தீமையைப் பெருந்தன்மையினையுடையாரும் விசாரியா மற் செய்வார்போற் றோன்றுகிறது, (எ - று)

பாவை - பதுமை இதில் சிறியோர் பிறர்க்கு விசாரியாமல் தீங்கு செய்தலாகிய கூடுமியற்கையும், பெரியோர் பிறர்க்கு விசாரியாமல் தீங்கு செய்தலாகிய கூடாமையும் ஒருங்கு வந்தன

அ-வது, விபரீதம் என்பது, விபரீதப்படச் சொல்லுவது

நேரிசை வெண்பா

வ - று " தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக்
கொலைபுரிந்தான் குற்றங் கடிந்தான்—உலகிற்
றனிமுதன்மை பூண்டியோர்ந்தோர் வேண்டுவரேற் றப்பாம்
வினையும் விபரீத மாம்" என வரும்

(இ - ள) எல்லா உயிர்களையும் படைத்த பிரமன் தலையை இழந்தான், தந்தையைக் கொன்ற சண்டேசன் குற்றம் நீக்கினான், உலகத்தில் ஒப்பற்ற மேன்மையைக் கொண்டியார்ந்துள்ளோர் நினைத்தால் நல்வினை தீவினைகளின் பயனும் மாறுபடும், (எ - று)

இதனுள், நல்வினைப் பயன் தீதாகவும், தீவினைப் பயன் நன்மையாகவும் வந்து விபரீதமானது காண்க (உஉ)

அ வேற்றுமையணி

சக கூற்றினுங் குறிப்பினு மொப்புடை யிருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே

என்பது, நிறுத்தமுறையானே வேற்றுமை யென்னு மலங்கார முணர்த்துதல் நுதலிற்று

(இ - ள) கூற்றினானுதல், குறிப்பினானுதல், ஒப்புடைய இரு பொருளை ஒரு பொருளாக வைத்து இவற்றைத் தமமுள் வேற்றுமைப்படச் சொல்லுவது வேற்றுமை யென்னு மலங்காரமாம

'வேற்றுமை என்னுது 'அதுவே' என்ற மிகையால், அவை பொருபொருளான வேற்றுமை செய்தலும் இரு

நேரிசை வெண்பா

உ-ம் "அருவியங் குன்ற மரகதன் வெய்யப்ப
வெருவிய வெற்பரையன் பாவை—பெருமான
அகலமாக மார்த் தழுவினா டான்முன்
தணியாத வூட றணந்து" என வரும்

(இ-ள்) முன்பு தீராத ஊடலையுடையளா யிருக்கின்ற மலையரையன் பயந்த பாவையாகிய உமையானவள், அருவியினையுடைத்தாய, அழகு பொருந்தி யிருக்கப்பட்ட கைலைமலையை இராவணன் அலைப்ப வெருவி, முக்கட் கடவுளினது அழகிய மார்பகத்தை ஊடல் தணிந்து தானே தழுவினாள், (எ-று) (சஅ)

உஉ　உதாத்த அணி

எச　வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமு
　　உயர்ச்சிபுனைந் துரைப்ப துதாத்த மாகும்

(இ-ள்) வியக்கத்தக்க செல்வத்து உயர்ச்சியையும் மேம்பட்ட உள்ளத்து உயர்ச்சியையும் மிகுத்துச் சொல்லுவது உதாத்தமெனனும் அலங்காரமாம், (எ-று)

(கு-ரை) உதாத்தம்-பிறிதொன்றற்கில்லாத மகத்துவம் இஃது வீறுகோளணி என மொழிபெயர்ப்பர்

க-வது, செல்வமிகுதி

நேரிசை வெண்பா

உ-ம். "கன்றும் வயவேந்தர் செல்வம் பலகவர்ந்தும்
என்றும் வறிஞ ரினங்கவர்ந்தும்—ஒன்றும்
அறிவரிதாய் நிற்கு மளவினதா லம்ம
செறிகதிர்வேற் சென்னி திரு" என வரும்

(இ-ள்) கோபிக்கின்ற வெற்றியையுடைய அரசர்களின் செல்வங்கள் பலவற்றையும் நாள்தோறும் கவர்ந்து கொண்டு வருதலாலும், தரித்திரர் கூட்டத்தால் தாம் வேண்டியபடி எடுத்துக்கொள்ளப்படுவதாலும், நிறைந்த ஒளியையுடைய வேலாயுதத்தைத் தாங்கிய சோழனுடைய செல்வமானது சிறிதேனும் அளவறியப்படாததாய் நிற்கும், (எ-று)

இங்கே சோழனுடைய செல்வத்தின் மகத்துவஞ் சொல்லப்பட்டவாறறிக. கன்றல் - கோபித்தல். வயம் - வெற்றி. வறிஞர் - தரித்திரர். அட்ட - விசயப்பிட்டைச் சொல். ஆல் அசை. சென்னி சோழன்.

உ-வது உள்ளமிகுதி

நேரிசை வெண்பா

வ-று "மண்ணகன்று தன்கிளைவிட் டீங்கி வனம்புகுந்து
பண்ணுந் தவத்தினைசேர் பார்த்தனுரன்—எண்ணிறந்த
விண்டோர் சோனகுலமும் வெய்யோர் குல்தொலைத்தான்
கோதண்ட மேதுணையாக் கொண்டு" என வரும்

(இ - ள்) மண்ணுடைமையைக் கைவிட்டு, தன் சுற்றத்தாரை விட்டு நீங்கி காட்டிற்புகுந்து, செய்யப்பட்ட தவத்தினாலே வருத்தமுற்றிளைத்த அருச்சுனனானவன், எண்ணின் அளவற்ற ஆகாயத்திலுள்ள தேவாகத்தினுள்ள இந்திரன் நடுக்கங்கொள்ள வருகின்ற கொடுமையாளராகிய அசுரர் குலங்கெட, தனது வில்லே துணையாகக்கொண்டு அவர்களை யழித்தான், (எ - று)

இங்கே அருச்சுனனது கருத்தின் பெருமை கூறியவாறறிக. கிளை - சுற்றம். பார்த்தன் - அருச்சுனன். மீது - மேல். ஆகாயம். அண்டர் - தேவர். கோதண்டம் - வில். வெய்யோர் - காலகேயநிவாத கவசர்கள். இவற்றுள் முன்னையதில் செல்வமிகுதியும் பின்னையதில் உள்ளமிகுதியும் வந்தவாறு காண்க. உள்ள மிகுதி - ஊக்கம். (சஅ)

உங. அவநுதி யணி

எங. சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை
மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்

(இ-ள்) சிறப்பினாலும், பொருளினாலும், குணத்தினாலுமான உண்மையை மறுத்துப் பிறிதொன்றாக உரைப்பது, அவநுதியெனனும் அலங்காரமாம், (எ - று)

(கு - ரை) அவநுதி - மறுத்துரைத்தல்

அவற்றுள், க-வது சிறப் பவநுதி

நேரிசை வெண்பா

வ - று "நறைகமழ்தார் வேட்டார் நலனணியு நாணும்
நிறையு நிலைதளரா நீர்மை—யறநெறிசூழ்
செங்கோல னல்லன் கொடுங்கோலன் றெவ்வடுபோர்
வெங்கோப மால்யானை வேந்து" என வரும்

(இ - ள்) நறுநாற்றத்தையுடைய மாலையை ஆசைப் பட்ட மடவாருடைய அழகும், அணியும், நாணும், நிறையும் நிலைதளராதபடி தாங்கும் அறநெறியினையுடைத்தாகிய செங்கோலை யுடையவனல்லன் கொடுங்கோன்மை யுடையவன், போர்க்களத்துப் பகைவரை அட்ட வெவ்விய கோபத்தையுடைய பெரிய யானையையுடைய வேந்தன், (எ - று)

(கு - ரை) இங்கே அரசனைச் சிறப்பித்தற்கண் 'செங் கோலன்' என்ற சிறப்புண்மையை மறுத்து, 'கொடுங் கோலன்' எனப் பிறிதொரு தன்மையை யேற்றிக் கூறி யமை காண்க.

உ-வது, பொருளவநுதி

நேரிசை வெண்பா

வ - று 'நிலனும் விசும்பு நிமிர்கானீர் தீயாம்
அலர்கதிரும் வானமதியு மன்றி—மலர்கொன்றை
ஒண்ணறுந் தார னொருவனியமானனுமாய்
எண்ணிறந்த வெப்பொருளு மாம்' என வரும்

(இ - ள்) விரிந்த கொன்றைப்பூவினாற் செய்த நறு நாற்றத்தையுடைய ஒள்ளிய மாலையை அணிந்தவனும் ஏகனுமாகிய பரமசிவன், நிலமும், ஆகாயமும், உயர்ந்த காற்றும், நீரும், தீயும், பரந்த கதிரையுடைய இரவியும், வெள்ளிய மதியுமாகிய ஏழாதலுமன்றி ஆன்மாவுமாய் எண்ணிறந்த எல்லாப் பொருளுமாவான், (எ - று)

(கு - ரை) இங்கே கொன்றை யொண்ணறுந்தாரான் என்னும் பொருளின்கண் ஒருவனுந்தன்மை மறுத்து நிலன் முதலிய பலவாந்தன்மை சொல்லப்பட்டவா றறிக.

ந-வது, குணவவநுதி

நேரிசை வெணபா

வ - று

'மனுடப்மேல வாழ மறைவோர்க்கு மாரப
பனிததொடையற பாததிபாகோ னெஙகோன-தனிககவிகை
தணமை யிழறறனறு தறறொழுத பேதையாககு
வெமமை யிழறறுய நெஞசம" என வரும

(இ - ள) மாநதா பூவுலகின இனிது உயிாவாழ வேதாகம நெறியை வளாககும தணணிய ஆததிமாலையை யுடைய அரசாககுக கோமானுகிய எம இறைவனுன சோழ ராசனது தனிககுடையானது தணணிய நிழலையுடைய தனறு அவனைக கணட மடவாாககு மிகக வெயயதனமை யைப பணணுகினறகும, (எ - று)

இஙகே சோழனுடைய குடையின தனமையிலே வெமமையேறறிச சொலலபபடடவா றறிக 'அவநுதி' என்னுது 'ஆகும' எனறதனுல இவ வலஙகாரம பிற அலங காரஙகளோடு கூடியும வரும

(கு - ரை) பிற அலஙகாரம சிலேடை யலஙகாரம

நேரிசை வெணபா

உ - று 'நறவேநது கோதை நலஙகவாநது நலகா
மறவேநதன வஞசியா னலலன—துறையின
விலஙகாமை நினறு வியனறமிழநா டைநதின
குலஙகாவல கொணடொழுகுங கோ" என வரும

(இ - ள) மதுவைத தாஙகிய மாலையை யணிநத மாதின அழகைக கவாநது மீணடும அதனை அவளுககுக கொடுககாத கொடுமையுளள மனனன, பிறரை வஞசி யாதவ னலலன (வஞசிப பதியையுடைய சோழனலலன) குலாசாரததில வழுவாமல நினறு பெரிய ஐநது தமிழ நாடடையும காவலகொணடு நடககினற பாணடியன, (எ - று)

இதில 'வஞசியா னலலன' என உணமையை மறுதது மறறொரு தனமையை யேறறிக கூறுதலால அவநுதி யணிககு இடமாயிருபபதோடு சிலேடை வகையால பிறி தொரு பொருளும படுதல காணக இது, தன்னிடங

காதல் மிகுந்து அழகிழந்த தலைவியைக் கூடி அவட்கு அவ்வழகை மீண்டும் உண்டாக்காத தலைவனைக் குறித்துக் கொடியவனென்று கூறியதாக அமைந்தது. இவ்வணி வெற்றொழிப்பு, காரணவொழிப்பு, வேறுபாட்டொழிப்பு, மயக்கவொழிப்பு, வல்லோரொழிப்பு, வஞ்சவொழிப்பு எனப் பலவாறு விகற்பமாகக் கூறவும் படும். நறவு - தேன். ஏந்துதல் - தாங்குதல். நறவேந்து கோதை அன்மொழித் தொகைக் காரணப்பெயர். துறை - குலதருமநெறி. விலங்காமை - பிசகாமை. வஞ்சி - கருவூர். சோழன் நகரம். இது வினைபற்றிய சிலேடை பவநுதி. இதனுள், 'வஞ்சியானல்லன்' என்பதற்குக் 'கருவூரையுடைய சோழனல்லன்,' என்றும், 'பிறரை வஞ்சியா தொழிவா னல்லன்' என்றும், சிலேடையாகப் பொருள் கொள்க. (௫௦)

## உச. சிலேடை யணி

௭௬. ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றித்
தெரிதர வருவது சிலேடை யாகும்.

(இ-ள்.) ஒருவகையாய் நின்ற தொடர் சொல் பல பொருள்களது தன்மை தெரிய வருவது, சிலேடை யென்னும் அலங்காரமாம். (எ-று.) (௫௧)

௭௭. அதுவே,
செம்மொழி பிரிமொழி யென்றிரு திறப்படும்

என்பது, அச்சிலேடையை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அச்சிலேடை செம்மொழிச் சிலேடையும், பிரிமொழிச் சிலேடையும் என இருவகைப்படும். (எ-று.)

அவற்றுள், க-வது, **செம்மொழிச் சிலேடை** என்பது, ஒரு வகையாய் நின்று பல பொருள் படுவது.

நேரிசை வெண்பா

வ-று "செங்கரங்க ளானிரவு நீக்குந் திறம்புரிந்து
பங்கய மாதா நலம்பயிலப்—பொங்குதயத்
தோராழி வெய்யோ னுயர்ந்த நெறியொழுகும்
நீராழி நீணிலத்து மேல்" என வரும்.

(இ - ள்) சிவந்த கரங்களான இருள் கடியுந் திறமை மிகுந்த தாமரை காதலிக்கும் வனப்புடைத்தாக மேன்மை கிய தோற்றத்தையுடைய ஒருகாலூர்திப் பகலோன் வானெறி யொழுகுங் கடல் சூழ்ந்த புவிமீது எனவும், சிவந்த கைகளான உலகினுள்ளோர் மிடிதீர்க்குந் தொழில் மிகுந்த திருமடந்தை செல்வம் பெருக மேம்பட்டா னின்ற பொருள் வருவா யுடையானுமாய்த் தனிச் சக்கரத்தை யுடையானுமாய உலகினுள்ளாரால் விரும்பப்படும் விசேட நெறியே யொழுகுவான், கடல் சூழ்ந்த உலகத்து எனவும் வந்தவாறு காண்க

இஃது ஆதித்தனுக்குஞ் சோழனுக்குஞ் சிலேடை

உ-வது, பிரிமொழிச் சிலேடை என்பது, ஒருவகையா னின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்துப் பல பொருளாகக் கொள்வது

நேரிசை வெண்பா

வ - று "தள்ளா விடத்தோ தடந்தா மரையுடைய
எள்ளா வரிமா னிடாமிகுப்ப—உள்வாழ்தேம்
சிந்துந் தகைமைத்தே யெங்கோன் றிருவுள்ளம்
நந்துந் தொழில்புரிந்தார் நாடு" என வரும்

(இ - ள்) அழகு கெடாத நிலங்களி னுண்டாய பகட்டோ பெரிய தாமரையைப் பொருந்தவும், இகழப் படாத நெற்கூட்டை உழவர் திரட்டவும், அத் தாமரை மலரி னுண்டாகிய தேன் பொழியும் பெருமையை யுடைத்து, எங்கோமானாகிய சோழனுடைய திருவுள்ளம் சிறக்கும் வகை ஒழுகினோர் நாடு எனவும், அசையாத விடத்தே ரெனனும் மரமுடைத்தாயப் பெரிய மலைச்சிகரங் களைத் தாவும் மரைகளை யுடைத்தாய இகழப்படாத சிங்கப் போத்துகள் துன்பமுறுத்தவும்பட்டு நல்லோர் உள்ளங் களில் வாழ்பட நாடுகளெல்லாம் அழிவுபடுந் தன்மையை யுடைத்தாம், எம் கோமானாகிய சோழன் திருவுள்ளம் வேறுபடுந் தொழில் பயின்றோர் வாழும் நாடு எனவும் வந்த வாறு காண்க

  

இது சோழனுடைய மனம் களிக்கும்படி நடந்தோருடைய நாட்டிற்கும், அவன் மனம் வெறுக்கும்படி நடந்தோருடைய நாட்டிற்கும் சிலேடை.

(கு - ரை.) பகடு ஏர் - உழும் எருது. சூடு - அரிக்குவியல். மரை - மான். இதில் தள்ளார் இட்டது ஏர் எனவும், தள்ளார் விட்டதோர் எனவும் கொள்க. விட்டதோ - ஒரு மரம். (ருக)

எஅ ஒருவினை பலவினை முரணவினை நியமம்
நியம விலக்கு விரோத மவிரோதம்
எனவெழு வகையினு மியலு மெனக

என்பதும், அச்சிலேடை யலங்காரத்தை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அச்சிலேடை, ஒருவினைச் சிலேடையும், பலவினைச் சிலேடையும், முரணவினைச் சிலேடையும், நியமச் சிலேடையும், நியமவிலக்குச் சிலேடையும், விரோதச் சிலேடையும், அவிரோதச் சிலேடையும் என்னும் ஏழு கூறுபாட்டான் நடக்குமென்று சொல்லுவர் (நூலோர்). (எ - று)

அவற்றுள், க-வது, ஒருவினைச் சிலேடை என்பது, ஒரு வினையான் வருவது.

நேரிசை வெண்பா

வ - று "அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம்
வம்புற்ற வோடை மலர்ந்திலங்க—உம்பர்
நவம்புரியும் வானதியு நாண்மதியு நண்ணத்
தவம்புரிவார்க் கின்பம் தரும்" என வரும்.

(இ - ள்) அழகிய பொலிவுடைய பருத்த முகத்தின் கண்ணே திண்ணிய கோட்டை யுடைத்தாய் அழகு பெற்றிருந்த யானையானது, கச்சோடு கட்டிய பட்டம் விரிந்து விளங்க, முடிமீது ஒளிமிகுப் பெரிதாகிய கங்கையும் இளம்பிறையும் பொருந்த வந்து, தவஞ் செய்வோர்க்கு வேண்டிய இந்திர பதங்கள் முதலாகிய இன்பங் கொடுக்கும் எனவும், அழகிய பொன்னோடு கூடிய மூங்கில் மிடைந்த

பக்கமுடைத்தாய்த் திணிந்திய சிகரங்களையுமுடைத்தாய், அழகு பெற்ற மலை வாசனை கமழும் ஓடை பூத்து விளங்கத் தனத்து ஒளிமிக்குப் பெரிதாகிய கங்கையும் பிறையும் மருவும்படி உயர்ந்து தவஞ் செய்வோர்க்கு அவர் வேண்டிய பொருள்களெல்லாங் கொடுக்கும் எனவும் வந்தவாறு காண்க

விநாயகர்மேற் செல்லுங்கால்—பொன்-பொலிவு பணை-பருத்தல் முகம் - வதனம் கோடு - மருப்பு நாகம்-யானை வம்பு - கச்சு உறுதல் - கட்டுதல் ஓடை - பட்டம் மலர்தல் - பரத்தல் உம்பர் - முடி இன்பம் - இந்திரபதம் முதலாய போகம்

மலைமேற் செல்லுங்கால்—பொன் - கனகம் பணை - மூங்கில் முகம் - பக்கம் கோடு - சிகரம் நாகம் - மலை வம்பு - மணம் உறுதல் - உண்டாதல் ஓடை - வாவி, ஒரு மரமுமாம் மலர்தல் - பூத்தல் உம்பர்-மேல் இன்பம்-தவத்தொழில் புரிவார்க்கு அவர் வேண்டிய உணவுகளுந் தண்ணீருமாகிய பலவகைப்பட்ட பண்டங்கள்

இது விநாயகருக்கும் மலைக்குஞ் சிலேடை

(கு - ரை) இஃது இன்பந்தரும் என்னும் ஒரு வினையான் முடிந்தது

உ-வது, பலவினைச் சிலேடை என்பது, பலவினையால் வருவது

நேரிசை வெண்பா

வ - று தவிரா மதுவுண் களிதளிரப்ப
செவிமருவிச் செந்நிறமை தாங்கிக—குயிலிசையும்
மின்னுயிரா நுண்ணிடையார் மென்னோக்கு மேவலர்
இன்னுயிரை வாங்கின்றன" என வரும்

(இ - ள்) இடைவிடாமல் நறவுண்ண வந்த களிப்பு உண்டாக நீண்டு செவியுட் புகுந்து நிறைந்து கோடாத நீர்மையவாகியிருக்கப்பட்ட குயிற்குரல் பிரிந்தோருயிர்களை வருத்தஞ் செய்யா நின்றன எனவும், விடுதற்கரிதாகிய களிப்புண்ட மயக்கத்தாலே தழைத்து நீண்டு செவியள

வுஞ் சென்று சிவந்த குளிர்ச்சியினை யுடையவாகிய மின்னை போத்த மருங்குலினையுடையார் மெல்லியவாகிய கண்கள் தம்மைப் புணர்ந்த தலைவனுடைய இனிய உயிரை நலியா நின்றன வென்வுங் கொள்க, (எ - று)

குயிற்குரன்மேற் செல்லுங்கால்—மது - தேன் செவி மருவி - செவியுட் புக்கு செந்நீர்மை - கோடாத் தன்மை மேவார் - பிரிந்தார் இன் சாரியை

கண்ணிவமேற் செல்லுங்கால—மது-கள் செவி மருவி-செவியளவுஞ் சென்று செந்நீர்மை - சிவந்த குளிர்ச்சி மேவார் - புணர்ந்த தலைவர் இன்னுயிர் - இனிய உயிர்

இது குயிற்குரலுக்கும், மடவார் கண்ணுக்குஞ் சிலேடை

இது, நீண்டு, மருவி என்பன முதலிய பல வினை பற்றி வந்தன.

கஉ-வது, முரண்வினைச் சிலேடை என்பது, மாறுபட்ட வினையால் வருவது

(கு - ரை) முரண் - மாறுபாடு

நேரிசை வெண்பா

வ - று "மாலை மருவி மதிதிரிய மாமணஞ்செய்
காலைத் துணைமேவ லார்கடிய—வேலைமிசை
மிக்கார் கலியடங்கா தார்க்கும் வியன்பொழில்கள்
புக்கார் கலியடங்கும் புள்" என வரும்

(இ - ள்) மயக்கத்தை மருவிக் கருத்து வேறுபட மிகவும் மணங்கமழுங் காலத்துத் தந்துணைவரைப் பொருந் தார்தார் அஞ்சக் கரைமீது மிக்குக் கடல் பொங்கி யார்க்கும், அகன்ற பொழில்கள் புக்கு ஒலியடங்கும் பறவைகள் எனவும், அந்திப்பொழுது மருவித் திங்கள் உலாவ மிக்கிருந்த கூட்டம் புரியுங்காலத்துத் தந் துணைவரைப் பொருந்தினா விளங்கவெனவுங் கொள்க, பின்பு ஒரு தன்மையெனக் கொள்க, (எ - று)

பிரிந்தார்மேற் செல்லுங்கால்—மாலை - மயக்கம்; மதி - கருத்து; திரிதல் - வேறுபடுதல்; மணம் - வாசம்; துணைமேவலார் - தம் துணைவரைப் பிரிந்தார்; கடிய - அஞ்ச.

புணர்ந்தார்மேற் செல்லுங்கால்—மாலை - அந்திப்பொழுது; மதி - திங்கள்; திரிதல் - உலாவல்; மணம் - கூட்டம்; துணைமேவலார் - துணைவரைப் புணர்ந்தார்; கடிய - விளங்க.

இது பிரிந்தார்க்கும் புணர்ந்தார்க்குஞ் சிலேடை.

(கு - ரை) இங்கு அடங்காது ஆக்கும் ஆக்கி அடங்கும் என வந்த வினைகள் ஒன்றற்கொன்று முரணுமாறு காண்க.

௪-வது, நியமச் சிலேடை என்பது, சிலேடித்தவற்றை நியமஞ் செய்வது.

(கு - ரை) பல பொருளுக்கு இயையுமாறு சிலேடித்ததனைத் தேற்றேகாரம் புணர்த்தி ஒன்றற்கு நியமமாக்குவது நியமச் சிலேடையாகும். (நியமம் - நிச்சயம்)

நேரிசை வெண்பா

வ - று "வெண்ணீர்மை தாங்குவன முத்தே வெறியவாய்க்
கண்ணீர்மை சோர்வ கடிபொழிலே—பண்ணீர்மை
மென்கோல யாழே யிரங்குவன வேல்வேந்தே!
நின்கோ லுலாவு நிலத்து" எனவரும்.

(இ - ள்) வெற்றியையுடைய வேல்வேந்தனே! நின் செங்கோல் உலாவும் உலகத்து வெண்மை நிறத்தை யுடைத்தாயிருப்பன முத்தே யெனவும், விரைநாற்றத்தை யுடைத்தாய மதுச்சோர நிற்பன பெரிய பொழிலே யெனவும், குளிர்ந்த ஓசையை யுடைத்தாய அழகோடு கூடி மெலிதாயப் பிறர்க்கு மனக்குழைவு கொடுப்பன யாழே யெனவுங் கிடந்தமையால், என்னப்பட்ட இவையொழிய அறிவின்மை தாங்குவதும், மிடியை யுடைமையாற் கண்ணீர் சொரிவதும், பிறர் மனந் தளர்வதும் இல்லையெனக் கிடந்தவாறு கண்டுகொள்க. (எ - று)

௫-வது, நியமவிலக்குச் சிலேடை என்பது, சிலேடித்த பொருளை நியமஞ்செய்து அந் நியமத்தை விலக்குதல்.

நேரிசை வெண்பா

வ-று 'சிறைபடுவ புட்குலமே தீம்புனலு மன்ன
இறைவநீ காத்தளிக்கு மெல்லை—முறையில்
கொடியன குன்றத்தின மாளிகையே யன்றிக்
கடியவிழ்பூங் காவுமுள'' என வரும்

(இ-ள்) தலைவனே! நீ காத்தளிக்கும் நிலவரைப் பிற சிறையுடைத்தா யிருப்பன புட்சாதியே, 'தீம்புனலும் அன்ன' என்றதனால் தித்தித்த புனல்களுஞ் சிறையுடைய, கொடியை யுடையன குன்றம்போன்ற மாளிகைகளே அன்றிக் 'கடியவிழ்பூங் காவுமுள' என்றவதனால் நாற்றம் பரந்த பூவையுடைத்தாகிய சோலைகளும் கொடியை யுடையன, (எ-று)

இதனால் சிறைபடுதலுங் கொடுமையும் இவன் காக்கின்ற நிலத்தின்கண் இல்லையெனக் கிடந்தவாறு கண்டுகொள்க

சு-வது, விரோதச் சிலேடை என்பது, முன்னர்ச் சிலேடித்த வற்றைப் பின்னர் விரோதிப்பச் சிலேடிப்பது

நேரிசை வெண்பா

வ-று 'விச்சா தரனேனு மந்தரத்து மேவானால்
அச்சுத னேனுமம் மாயனல்ன—நிச்ச
நிறைவான் கலையா னகளங்க னீதி
இறையா னநகனெங் கோ' என வரும்

(இ-ள்) விஞ்சையர் ஆகாயத்திலே மேவுவார், சோழன் கேட்டினக்கட் செல்லான், திருமால் மாயமுடையா னாதலால் மாயனெனப்படுவான், இவன் அம்மாயமிலனாத லால் மாயனெனப்படான், நாடோறும் நிறைந்த வெண்மை செய்யுங் கலைகளை யுடையனாகிய சந்திரன் களங்க முடைய வன், நாடோறுங் கலைநூல்களாற் பெருக்கமுடையனேனும் சோழன் அகளங்கனெனப்பட்டான், முக்கட்கடவுள் பொருப்புடையனாதலால் நகனெனப்பட்டான், சோழனாகிய எங்கோன் தீவினையின்மையால் அநகனெனப்பட்டான் (எ-று)

**விச்சாதரன்** என்பது - விஞ்சையராகிய தேவசாதிக்கும், வித்தையையுடைய சோழனுக்கும் பெயர். **அந்தரம்** என்பது - ஆகாயத்திற்கும், கேட்டிற்கும் பெயர். **அச்சுதன்** என்பது திருமாலுக்கும், கேடிலானுக்கும் பெயர். **நிறைவான கலையான்** என்பது - கலையையுடைய சந்திரனுக்கும், கல்வியால் நிறைந்த சோழனுக்கும் பெயர். **களங்கம்** என்பது - மாசுக்கும், கேட்டிற்கும் பெயர். **நீதி பிறையான்** என்பது - முக்கட் கடவுளுக்கும், நீதிநெறி யரசனான சோழனுக்கும் பெயர். **அநகன்** என்பது - மலையில்லாதோனுக்கும், பாவமில்லாதோனுக்கும் பெயர். இதனை நகன் அநகன் எனப் பிரித்துக்கொள்க.

எ-வது, **அவிரோதச் சிலேடை** என்பது, முன்னர்ச் சிலேடித்த பொருளைப் பின்னர் விரோதியாமற் சிலேடிப்பது.

நேரிசை வெண்பா

உ - று "சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கும்
மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கு—மீதாம்
அனக மதி தோற்றிக் குமுத மளிக்கும்
தனத னிருநிதிக்கோ னூன்' என வரும்

(இ - ள்) ஒளியினை யுடைத்தாகிய ஆதித்தன் தன் கதிர்களாலே இருளை நீக்குவான்; புகழையுடையனாய இரவி குலத்தில் தோன்றிய இரவி என்னும் பெயரினையுடையனாகிய சோழன் கைகளாலே பிறருடைய வறுமையைத் தீர்ப்பான்; உமாதேவியை இடப்பாகத்திலுடையான் காமனை மாறுகக்கி அழிப்பான், இவன் மிகுந்த திடப்பமுடையனாதலால் மன்னவர் வலியினை மாறுகொண்டு கெடுப்பான், ஆகாயத்தில் தோன்றிய குற்றமற்ற மதி உதயஞ்செய்து குமுதங்களை அலர்த்தும்; இவன் மேலாய குற்றமற்ற அறிவு தோன்றிப் பூதலத்துக்கு ஏற்ற மகிழ்ச்சியைக் கொடுப்பான், குபேரன் தனதனென்னும் பெயரை யுடையனாய் இருநிதிக்குத் தலைவனாவான், இவனும் பிறருக்குப் பொருளையளித்து மிக்க பொருளுக்கு முதல்வனென்னப் படுவான் (எ - று)

து - பூத்தலும் முத்தம் - மகிழ்ச்சி 'இயலும்' என்றொழியாது 'என்ப' என்ற மிகையான் இவ்வாறன்றிப் பிற வேறுபாட்டான் வருவனவுங் கொள்க. அவை வந்த வழிக்காண்க (௫௨)

## ௨௫ விசேட வணி

௭௬ குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்

(இ - ள்) குணமும், தொழிலும், சாதியும், பொருளும், உறுப்பும் முதலாயின குறைபடுதல் காரணமாக, ஒரு பொருட்கு மேம்பாடு தோன்ற உரைப்பது விசேடமென்னும் அலங்காரமாம், (எ - று)

அவற்றுள்,

**௧-வது, குணக்குறை விசேடம்**

நேரிசை வெண்பா

வ - று "கோட்டந் திருப்புருவங் கொள்ளா வவர்செங்கோல்
கோட்டம் புரிந்த கொடைச்சென்னி—நாட்டம்
சிவந்தன வில்லை திருந்தார் கலிங்கம்
சிவந்தன செந்தீத் தெற" என வரும்

(இ - ள்) கொடை பொருந்திய சோழனுடைய அழகிய புருவங்கள் கோட்டத்தை (வளைதலை) கொள்ளவில்லை, அவனுடைய அந்தப் பகைவர்களின் செங்கோல் கோட்டத்தை (கெடுதலை) அடைந்தன, அந்தச் சோழனுடைய கண்கள் சிவக்கவில்லை, பகைவர்களுடைய கலிங்க தேசங்கள் சிவந்த தீ எரித்தலாற் சிவப்புற்றன, (எ - று)

சோழன், நன்றாகச் சினங் கொள்ளாததற்கு முன்பே அவனுடைய பகைவர் நிலைகுலைந்தன ரென்பது இதன் கருத்து. புருவங்கள் நெறிப்புற்று வளைதலும், கண்கள் சிவத்தலும் கோபத்திற் குறிகுறிகளாம். கலிங்கம் எழு வகைப்படு மாதலின், 'சிவந்தன' என்பப் பன்மையாகக்

கூறினா குணத்திற குறைகூறிக காரியத்தில உயாவு தோனறக கூறினமையின, இது, குணக்குறை விசேடமாம கோட்டம - வளைவு திருநதாா - பகைவா

உ-வது, தொழிற்குறை விசேடம்

நேரிசை வெணபா

வ-று "எங்கா முகிலபொழியா நாளும புனறேங்கும
பூங்கா விரிநாடன போாமதமா—நீங்கா
வளைபட்ட தாளணிகண மாறெதிா்நத தெவவா
தளைபட்ட தாட்டா மரை" என வரும

(இ-ள) முழங்குதலைச செய்து மேகம மழையைச சொரியாத நாளிலும நீா பெருகிப பாயகினற அழகிய காவிரி சோநத நாட்டனுடைய போரில, மதம பொருநதிய யானைகளின தாளகளெலலாம கழலாதபடி வளைததிடப பெறற விரககழலகளைப பூணடன, இவை இவவாறு செயயவே, அனறே பகையாகிய மனனவா பாதஙகளாகிய தாமரைகளெலலாம தளையாகிய விலஙகைப பூணடன, (எ-று)

சோழனுடைய யானைகள, போரணி பூணட மாததிரததிலே, பகைவா தோலவியுறறு விலஙகிடபபட்டன ரெனபது இதன கருதது போரணி பூணடு போயப பகைவருடன எதிாததுப போாசெயதலாகிய தொழில களில போரணி அணிதல மாததிரமே கூறிக குறைவுபாடு விளககிக காரியத்தில உயாவு தோனறச சொனனமை யால இது தொழிறகுறை விசேடமாயிறறு 'ஏஙகா முகிலபொழியா நாளும புனலதேஙகும' எனறதிலும இவ வலஙகாரம அமைநதிருததல காணக ஏஙகா - செயயா வெனனும வாயபாட்டு விளையெசசம

ஏஙகுதல - இடிதது முழஙகல மாறு - பகை தளை - விலஙகு

ங-வது, சாதிக்குறை விசேடம்

நேரிசை வெண்பா

உ-று "மேய நிரைபுரந்து வெண்ணெய் தொடுவுண்ட
ஆயனார் மாறேற் றமர்புரிந்தார்—தூய
பெருந்தருவும் பின்னுங் கொடுத்துடைந்தார் விண்மேற்
புரந்தரனும் வானோரும் போல்" என வரும்

(இ - ள்) பசுக்கூட்டங்களை மேய், அவற்றைக் காத்து, வெண்ணெயைத் தோண்டி யெடுத்துண்ட இடைய ராகிய கண்ணபிரான் பகையாக நின்று எதிர்த்துப் போர் புரிந்தார், அங்ஙனம் செய்யவே, விண்ணுலகிலுள்ள இந் திரனும், தேவர்களும், பரிசுத்தம் பொருந்திய பெருமை பெற்ற பாரிசாதத் தருவையும், தமது முதுகையுங் கொடுத்துத் தோல்வியடைந்தார்கள், (எ - று)

இதில், 'ஆயனார்' என்று சாதியில் இழிவுகூறி உயர்ந்த தேவர்களை வெல்லுதலாகிய காரியத்தில் உயர்வு விளங்கக் கூறினமையால் சாதிக்குறை விசேடம் அமைதல் காண்க 'மேய நிரை புரந்து' என்பதற்கு, 'பொருந்திய பசுக்கூட் டங்களைக் காத்து' என்ப் பொருள் கூறினும் அமையும் 'வெண்ணெய் தொடுவுண்ட வாயனார்' என்பதற்கு, 'வெண் ணெயைத் தோண்டியுண்ட வாயை யுடையவர்' எனவும் ஒரு பொருள் கூறலாம் இது சாதிக்குறைபாடு காட்டா மையின் அத்துணைச் சிறப்பன்று

நிரை - பசுக்கூட்டம் புரத்தல் - காத்தல் தொடுதல் - தோண்டுதல் மாறு - பகை அமர் - போர் தரு - பாரி சாத தரு பின்கொடுத்தல் - புறங்காட்டல் போல் - உரையசை யிடைச்சொல், இஃதொப்பில் போலி யென வும்படும்

ச-வது, பொருட்குறை விசேடம்

நேரிசை வெண்பா

உ-று "தொல்லை மறைதோ துணைவன்பா லண்டுவரை
எல்லை யிருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலாள்
ஓங்குலகில் வாழு முயிரனைத்து மூட்டுமால
ஏங்கொலிநீர்க் காஞ்சி யிடை" என வரும்.

(இ - ள்) மிக்க ஒலியைச் செய்யும் நீர்வளத்தை யுடைய காஞ்சிப்பதியினிடத்தே, மெல்லிய தன்மையை யுடையவளாகிய ஒரு மாது (அம்பிகை) பழைமையான வேதங்களோதத் தோந்த தன் நாயகனிடத்தே ஓராண்டளவும் இருநாழி நெல்லைப் பெற்று அதனாலேயே முப்பத்திரண் டறங்களையும் வளர்த்து, உயர்ந்த உலகத்தில் வாழ்கின்ற உயிர்களை யெல்லாம், உண்பூட்டிப் பாதுகாத்து வருவா ளாயினள், (எ - று)

இதில், 'இருநாழி நெற்கொண்டு' என்று பொருட் குறை காட்டி, 'அதனைக் கொண்டு உயிரனைத்தும் ஊட்டும்' எனக் காரியத்தில் உயர்வு தோன்றக் கூறினமையால் பொருட்குறை விசேடம் அமைந்திருத்தல் காண்க. துணைவன் - நாயகன். பால் - இடம். மெல்லியலாள் - உமாதேவி. ஆல் அசை. இடை - இடம்.

ii-வது, உறுப்புக்குறை விசேடம்

நேரிசை வெண்பா

வ - று "யானை யிரதம் பரியா ளிவையில்லை
தானு மனங்கன் றனுக்கரும்பு—தேனார்
மலரைந்தி னாலவென் றடிப்படுத்தான் மாரன்
உலகங்கண் மூன்று மொருங்கு" என வரும்

(இ - ள்) மன்மதனுக்கு யானை, தேர், குதிரை, காலாள் ஆகிய நால்வகைச் சேனைகளும் இல்லை, அவன் தானும் தேகமில்லாதவன், அவனுடைய வில்லோ வலிமையற்ற கரும்பு, (அப்படி யிருந்தும்) அந்த மாரன், தேன் பொருந்திய ஐந்து மலர்களினாலேயே, மூவுலகங் களையும் ஒருங்கே வென்று தனக்குக் கீழ்ப்படுத்தினன், (எ - று)

இதில், கருவிகளிற் குறை கூறிக் காரியத்தில் உயர்வு தோன்றச் சொன்னமையால் உறுப்புக்குறை விசேடம் பொருந்தியிருத்தல் காண்க. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க. (ருங)

உ௫ ஒப்புமைக்கூட்ட வணி

அ0 கருதிய குணத்தின் மிகுபொரு ளுடனவைத்
தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்

(இ - ள்) ஒரு பொருளைச் சொல்லுமிடத்துத் தான் கருதிய குணமுதலாயினவற்றின் மிக்க பொருளைக் கூட வைத்துச் சொல்லுவது ஒப்புமைக்கூட்ட மென்னும் அலங்காரமாம், (எ - று)

ஒப்புமைக்கூட்டம் - சமதன்மை யுடையவைகளை ஒருங்கு கூட்டுதல் இதனை வடநூலார் துல்யயோகிதை என்பர் (௫௪)

அக புகழினும் பழிப்பினும் புலப்படு மதுவே

என்பது அவ்வலங்காரத்தை விரித்து உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) அவ் வொப்புமைக்கூட்ட மென்னும் அலங்காரம், ஒன்றனைப் புகழ்தற்கண்ணும், பழித்தற்கண் ணுந் தோன்றும், (எ - று)

அவற்றுள், க-வது, புக ழொப்புமைக்கூட்டம்

நேரிசை வெண்பா

உ - ம "பூண்டாங்கு கொங்கை பொரவே குழைபொருப்பும்
தூண்டாத தெய்வச் சுடர்விளக்கும்—நாண்டாங்கு
வண்மைசால் சான்றவருங் காஞ்சி வளம்பதியின்
உண்மையா லுண்டிவ் வுலகு" என வரும

(இ - ள்) ஆபரணங்களை யணிந்த (உமாதேவியின்) தனங்கள் அழுந்துதலால், திருமேனி நெகிழ்வுற்ற மலையும் (ஏகாம்பரநாதரும்), தூண்டப்படாத தெய்வத்தன்மை பொருந்திய பிரகாசமுள்ள விளக்கும் (நந்தா விளக்கும்) பிறா வெட்கத்தைக் கொள்ளும்படியான ஈகைக்குணம் மிகுந்த பெரியோர்களும், காஞ்சி யென்னும் வளம்பொருந் திய நகரத்திலே இருக்கின்றமையால், இந்நிலவுலகமானது நிலைபெற்றிருக்கின்றது, (எ - று)

இதில், குழைபொருப்பும், தூண்டா விளக்குமாகிய உயர்ந்த பொருள்களோடு பெரியோரைச் சேர்த்து உயர்த்துக் கூறினமையால், புகழொப்புமைக்கூட்டம் அமைந்திருத்தல் காண்க. பொர - அழுந்த பொருப்பு - மலை வண்மை - ஈகை சால - மிகுதி சான்றவர் - மேலோர்

உ-வது, பழிப் பொப்புமைக்கூட்டம்

நேரிசை வெண்பா

வ - று "கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந்து தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்" என வரும்

(இ - ள்.) கொள்ளும் பொருளைக் கைப்பற்ற விரும்பித் தன்கீழ்க் குடிகளை வருத்துகின்ற அரசனும், உள்ள உண்மையைச் சொல்லாது வழக்கில் வெல்லும்பொருட்டு மாறுபாடான வார்த்தை கூறும் மனிதரும், ஒருவனுடைய வீட்டில் அவனுக்கு மனைவியாயிருந்து அவனது எல்லை கடந்து நடப்பவளும் ஆகிய இம் மூவர்களும் சீக்கிரமாக மழையை அருக்கப்பண்ணும் கிரகமாவார்கள் (இவர்கள் இருப்பின் மழை பெய்யாதென்றபடி)

இதில், மூவரிடத்தும் சேர்க்கப்பட்ட இழிதன்மைகளால் பழிப் பொப்புமைக்கூட்டம் அமைதல் காண்க. வெஃகல் - விரும்பல் பொருள் - உண்மை சலம்-மாறுபாடு அருக்கல் - அருக்கப்பண்ணல் இல்லிருந்து தெல்லை கடத்தல் - ஒருவன் வீட்டில் மனைவியாக அமைந்திருந்து இல்லற வரம்பைக் கடந்தொழுகுதல் அருக்கப்பண்ணல் - இல்லாமற்போகச் செய்தல் (௫௫)

### உஎ விரோத வணி

அஉ. மாறுபடு சொற்பொருண் மாறுபாட் டியற்கை
விளைவுதர வுரைப்பது விரோத மாகும்

என்பது, நிறுத்தமுறையானே விரோத மென்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) மாறுபட்ட சொல்லானும் பொருளானும் மாறுபாடுத்தன்மை விளைவு தோன்ற உரைப்பது விரோதமென்னும் அலங்காரமாம், (எ - று)

## சொல் விரோதம்

### நேரிசை வெண்பா

வ - று "காலையு மாலையுங் கைகூப்பிக் காற்றொழுதான்
மேலை வினையெல்லாங் கீழவாம்—கோலக்
கருமானற் றோல்வெண்ணீற் றுச்செம்மேனிப் பைந்தார்ப்
பெருமானைச் சிற்றம் பலத்து" என வரும்

(இ - ள்) அழகு பொருந்திய கரிய யானைத் தோலையும், வெண்மையான திருநீற்றையும், சிவந்த திருமேனியையும், பசிய கொன்றை மாலையையு முடைய சிவபெருமானைச் சிதம்பரச் சேத்திரத்தில், காலையிலும், மாலையிலும் கைகளைக் கூப்பித் திருவடிகளைத் தொழுதால், அதிகரித்த ஊழ்வினைகளெல்லாம், கீழ்ப்பட்டனவாம் (அதாவது குறைந்து நீங்கிவிடும்), (எ - று)

இதில் காலை, மாலை, கைகூப்புதல், கால் தொழுதல், மேல், கீழ், கருமை, வெண்மை, செம்மை, பசுமை எனப் பல ஒன்றோடொன்று மாறுபட்டு விரோதவணி அமைந்திருத்தல் காண்க 'மேலை வினையெல்லாம் கீழவாம்' என்பதற்கு, 'முற்பிறப்பிலே செய்த வினைகளெல்லாம் அழியும்' என்பு பொருள் கோடலுமொன்று கருமான என்பது யானையை யுணர்த்தியது, ன - சாரியை

## பொருள் விரோதம்

### நேரிசை வெண்பா

வ - று "சோலை பயிலுங் குயின்மழலை சோர்ந்தடங்க
ஆலு மயிலினங்க ளார்த்தெழுந்த—ஞாலம்
குளிர்ந்த முகில்கற்றக் கோபஞ் சிவந்த
விளர்ந்த துணைபிரிந்தார் மெய்" என வரும்

(இ - ள்) சோலைகளிற் றங்கிய குயில்களின் மழலைச் சொற்கள் சோர்வுற்றடங்க, ஆடுகின்ற மயிற்கூட்டங்கள்

ஆர்வார்த் தெழுந்தன பூமி குளிர்ச்சி யடைதற்குக் காரணமான மேகங்கள் கறுத்தன, இந்திரகோபப் பூச்சிகள் சிவந்தன துணைவரைப் பிரிந்தவருடைய தேகங்கள் வெளுத்தன, (எ - று)

இது, கார்ப்பருவ வருணனை இதில் முன்னிரண்டடிகளினும் குயில் மழலை சோர்ந்தடங்கலும், மயில்களின் ஆர்த்தெழுதலும் ஒன்றுடனொன்று மாறுபட்டும், பின்னிரண்டடிகளினும் கறுப்பும் சிவப்பும், வெளுப்பு மாகிய சொற்கள் ஒன்றோடொன்று மாறுபட்டும், விரோத வணி அமைந்திருத்தல் காண்க மழலை - உச்சரிப்புச் சரிவர நிரம்பா மென்சொல் கோபம் - இந்திரகோப மென்னும் ஒருவகைப் பட்டுப்பூச்சி, இது கார்காலத்தில் தோன்றுவது

இனி, இவ்வலங்காரம் பிறவலங்காரங்களோடு கூடியும் வரும

நேரிசை வெண்பா

வ - று " இன்மா னிகல வெளிய வெனினும்
வனமேவு புண்டரிகம் வாட்டும்—வனமா
கரியுருவங் கொண்டு மரிசிதறக் காயும்
விரிமலர்மென் கூந்தல் விழி " என வரும

(இ - ள்) அலர்ந்த மலர்களையுடைய மெல்லிய கூந்தல் பொருந்திய இவருடைய விழிகளாகிய இன்மான்கள், பகைத்தற்கு எளியன வெனினும், காட்டிற் பொருந்தியிருக்கின்ற புலிகளை வருத்துதற்கு வல்லமையுடையன வாயின (நிகர்த்தற்கு வெண்மையை யுடையன வெனினும் நீரிற் பொருந்திய கமலமலரை அழகழிக்கும்) காட்டி யானையின் வடிவைக்கொண்டும் சிங்கம் பயந்து நீங்கியோடக் கோபிக்கும் (அழகு பொருந்திய கறுத்த வடிவம் பெற்றும் செவ்வரிகள் பரக்க வெம்மையைச் செய்யும்,) (எ - று)

இது சிலேடை பூரணம் எனப்படும் இச் சிலேடைகள்

மானினமோ சேக்குமாதல், 'பகைத்தற்கு எளியன வெனினும், காட்டிற் பொருந்திய புலிகளை வருத்துதற்கு வல்லமையுடையன வாயின சாட்டியானையின் வடிவைக் கொண்டும் சிங்கம் பயந்து நீங்கியோடக் கோபிக்கும்' எனவும்,

நனாநளினமேக் கோக்குமாதல், 'நிகாத்தற்கு வெண்மையையுடையன வெனினும் நீரிற் பொருந்திய கமலமலரை அழகழிக்கும், அழகு பொருந்திய கருத்த வடிவம் பெற்றும் செவ்வரிகள் பரக்க வெம்மையைச் செய்யும்' எனவும் மாறுபட்டுச் சிலேடை விரோதமாயினமை காண்க.

இகலுதல் - பகைத்தல், ஒத்தல். வெளிய - எளிய எனவும், வெளிய எனவும் ஆகும். எளிய - எளிமையான. வெளிய - வெண்மையான. வனம் - காடு, நீர். புண்டரீகம் - புலி, தாமரை. வனம் - காடு, அழகு. கரி - யானை, கருமை. அரி - சிங்கம், செவ்வரி. சிதறல் - அழித்தல், பரத்தல். சாய்தல் - கோபித்தல், வருத்தல். செவ்வரி - சிவந்த இரேகை. (௫௯)

## ௨௮ மாறுபடு புகழ்நிலையணி

௮௫ கருதிய பொருடொகுத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை.

என்பது, நிறுத்தமுறையானே மாறுபடு புகழ்நிலையென்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) கவி, தான் கருதிய பொருளை மறைத்து அதனைப் பழித்தற்கு வேறொன்றனைப் புகழ்வது மாறுபடு புகழ்நிலையென்னும் அலங்காரமாம். (எ - று)

### நேரிசை வெண்பா

உ - று "இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல
தரு நிழலும் தண்ணீரும் புல்லும்—ஒருவர்
படைத்தனவுங் கொள்ளாவிப் புள்ளிமான் பார்மேற்
றுடைத்தனவே யன்றோ தூயர்" என வரும்

(இ - ள்) இந்தப் புள்ளிமான்கள் யாசித்தலை அறிய மாட்டா, எவரிடத்தும் தம் குறைகளைச் சொல்லிப் பின் செல்லமாட்டா ஒருவர் நட்டியனவாகிய நல்ல மரத்தின் நிழலையும், குளிர்ந்த நீரையும், புல்லையும் கொள்ளா, அவற்றைத் தாமே பெறும், ஆதலின், இவை இந்தப் பூமியின் மேல் துன்பத்தை ஒழித்தனவன்றோ, (எ - று)

இது தனவந்தர்களை யடைந்து யாசித்து அவர் பின் சென்று குறைவுற்று வருந்தும் ஒரு யாசகனை இழித்துக் கூறியதாக அமைந்தது இதில் மானைப் புகழ்தலால் யாசகனது நிந்தை தோன்றி மாறுபடு புகழ்நிலையணி அமைந்திருத்தல் காண்க

நேரிசை வெண்பா

வ - று "போதுந் தளிரும் புனைந்து மணம்புணர்ந்து
சூதப் பணைதழுவித் தோன்றுமால்—மாதே
பலமா தவங்கள் பயின்றதோ பண்டிக்
குலமா தவியின் கொடி" என வரும்

(இ - ள்) இந்த நற்குல மாதவிக் கொடியானது, மலர்களினாலும் தளிர்களினாலும் அலங்கரிக்கப்பட்டு, மணக்கோலத்தையும் அடைந்து மணம் புரிந்து, தம்முடைய நாயகரைத் தழுவிக்கொண்டு நின்ற நற்குல மாதரைப்போலத் தானும், மலர்களினாலும், தளிர்களினாலும் அலங்கரிக்கப்பட்டு நறுமணத்தை யடைந்து மாமரக் கிளைகளைச் சேர்ந்து தோன்றுகிறது, ஆதலின், மாதே! முற்காலத்தில் பல சிறந்த தவங்களைச் செய்ததோ, (எ - று)

இது, களவிற் கூடிவந்த தலைவியைப் பழித்தற்கு மாதவியைப் புகழ்ந்ததாக அமைந்தது இதில், மாதவியைப் புகழ்தலால், தலைவியின் நிந்தை விளங்கி மாறுபடு புகழ்நிலையணி அமைதல் காண்க சூதம் - மாமரம் பணை - கிளை மாதவி - வசந்த மல்லிகைக்கொடி

இவ்விரண்டும் யாசகனையும் களவிற் கூடிவந்த தலைவியையும் பழித்ததாம் (௬௭)

## உக. புகழாபபுகழசசி யணி

அச பழிபபது போலும பானமையின மேனமை
புலபபட மொழிவது புகழாப புகழசசி.

(இ - ள) பழிததல போலும பாகுபாட்டான, ஒன றறகு மேமபாடு தோனற உரைபபது புகழாபபுகழசசி யெனனும அலஙகாரமாம (எ - று)

### நேரிசை வெணபா

உ-று "போரவேலின வெனறதூஉம பலபுகழாற போாததூஉம
தாரமேவு திணபுயததாற றாஙகுவதூஉம—நீாநாடன
தேரடிககூா வெமபடையாற காபபதூஉஞ செஙகணமால
ஓரடிககீழ வைதத வுலகு" என வரும

(இ - ள) நீாவளம பொருநதிய நாட்டையுடைய சோழன போா செயயததகக வேலாயுதததினுல சயிதத தும, பலவகைபபட்ட புகழினுலே மூடியதும, மாலையை யணிநத வலிமைபெறற தோளினுல தாஙகுவதும, தோக காலின பெயரையுடைய கூாமையும கொடுமையுமுளள ஆயுதததால (அஃதாவது சகராயுதததால) காபபதும, சிவநத கணகளையுடைய திருமால ஒரு பாதததினடியில அடககி வைதத இவவுலகமேயாம, (எ - று)

இதில 'திருமால ஒருவித சிரமமுமினறி ஓரடியினகீழ வைதத உலகைச சோழன பலவிதமாகச சிரமபபடடுப பாதுகாககினறனன' எனப பழிததாறபோலக கூறியதால, பூமி முழுவதையும சோழன சகரவாததியாய ஒருஙகே ஆடசிபுரிகினறனன' எனற புகழசசி தோனறுதல மூலம புகழாப புகழசசியணி அமைநதிருததல காணக தோக கால-சககரம, அதன பெயரையுடைய ஆயுதம-சகராயுதம. திணபுயததால தாஙகுவது-தோள வலலமையால ஆளவது- சககரததாற காபபது ஆகஞா சககரததினுலே பரிபா லிபபது.

நேரிசை வெண்பா

உ-று 'நினைவரிய பல்புகழார் நின்குலத்துத் தொல்லோர்
அனைவரையும் புல்லினா ளன்றே—மனுநூல்
டங்காத நெறியொழுகும் பூழியர்கோ னிந்நாள்
மன்னுந் தடமலர்மேன் மாது' என வரும்

(இ-ள்) மனுதரும சாத்திரத்திற் பொருந்திய நன்னெறிப்படி நடக்கின்ற சோழனே! நீ இந்நாளில் உரிமையாகச் சேர்ந்தவளாகிய பெரிய தாமரைமலரில் தங்கும் திருமகள், நினைத்தற்கும் அரிய பலவகைக் கீர்த்தியை யுடையவராகிய உன் குலத்துப் பழமையானவரெல்லோரையும் உரிமையாகக்கொண்டு கூடினவளன்றோ? (எ-று)

இதில், 'உன்னால் உரிமையாகச் சேர்ப்பட்டவள் பலர்க்கும் உரிமையானவள்' என்று பழித்தாற்போலக் கூறியவாற்றான், 'நீ பரம்பரையாக உனக்குரிய இராசிய லட்சுமியைச் சேர்ந்தனை' என்று புகழ்ச்சி தோன்றுதல் மூலம் புகழாப்புகழ்ச்சியணி அமைதல் உணர்க. தொல்லோர் - பழமையானவர் புல்லல் - சேர்தல் பூழியன் - சோழன் தடம் - விசாலம்

அஃதேல், மேல் இலேசத்தின்பாற் படுத்துக் கூறிய பழிப்பதுபோலப் புகழ் புலப்படுத்தலோடு இப் புகழாப் புகழ்ச்சிக்கு வேற்றுமையும், புகழ்வதுபோலப் பழித்திறம் புனைதலோடு மேற்கூறிய மாறுபடு புகழ்நிலைக்கு வேற்றுமையும் யாதோவெனின்,

பழிப்பதுபோலப் புகழ் புலப்படுத்தல்-ஒன்றனையே பழித்தாற்போலப் புகழ்வது

புகழாப் புகழ்ச்சி-ஒன்றனைப் பழிக்க, வேறொன்றற்குப் புகழாய்த் தோன்றுவது

மாறுபடு புகழ்நிலை-ஒன்றனைப் புகழ, ஒன்றற்குப் பழிப்பாய்த் தோன்றுவது

புகழ்வதுபோலப் பழித்திறம் புனைதல்-ஒன்றனையே புகழ்ந்தாற்போலப் பழிப்பது

அல்லதூஉம் அவை யிரண்டும் ஒருசார் ஆசிரியர் இலேசத்தின்பாற் படுத்துக் கூறினரென்பது தறிவித்தற்கு ஆண்டுக் கூறப்பட்டது ஈண்டு ஒருசார் ஆசிரியர் வேறு படுத்து வேறலங்காரமென்று வேண்டுவரென்பது அறிவித்தற்கு ஈண்டும் கூறப்பட்டதெனக் (௩௮)

௫௦ நிதர்சன வணி

அ௫ ஒருவகை நிகழ்வதற் கொத்தபயன் பிறிதிற்குப்
புகழ்மை தீமை யென்றிவை புலப்பட
நிகழ்வ தாயி னிதரிசன மதுவே

(இ - ள்) ஒருவகையான நிகழ்வு தொன்றற்குப் பொருந்தியதொரு பயனைப் பிறிதொன்றற்கு நன்மை புலப்பட நிகழ்வதாதல், தீமை புலப்பட நிகழ்வதாதல், செய்வதெனச் சொல்லுவது நிதரிசனமென்னும் அலங்காரமாம். (எ - று)

௧ - வது, புகழ்மை

நேரிசை வெண்பா

உ - று ' பிறர்செல்வங் கண்டாற் பெரியோர் மகிழ்வும்
சிறியோர் பொருத் தின்மையும்—அறிவுறீஇச்
செங்கமல மெய்ம்மலர்ந்த தேங்குமுத மெய்யயர்ந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது '' என வரும்.

(இ - ள்) பிறர் செல்வத்தைக் கண்டால் பெரியோர் மகிழ்ச்சியடைவதையும், சிறியோர் பொருத் தன்மையும் அறிவுறுத்தி, அதிகரித்த பிரகாசத்தை யுடையவனாகிய சூரியன் உதயஞ்செய்து பிரகாச மிகுங் காலத்தில் செந்தாமரை மலர்கள் உடல் நெகிழ்ந்து மலர்ந்தன, தேன் பொருந்திய அல்லிமலர்கள் உடல்வாடிக் குவிந்தன. (எ - று)

இது நற்பொருட்காட்சி

பொங்கொளியோன் - சூரியன் வீறு - பிரகாசம்;
பெருமை

உ - வது, தீமை

### நேரிசை வெண்பா

வ - று "பெரியோ ருழையும் பிழைசிறி துண்டாயின்
இருநிலத்துள் யாரு மறிதல்—தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவாக்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு"
என வரும்

(இ - ள்) நீர் நிறைந்த கடல்சூழ்ந்த இவ்வுலகத்தில் தெளிவான அமுதத்தைத் தன் கிரணங்களிலே யாவர்க்கும் பொழிகின்ற சந்திரனிடத்தே பொருந்திய களங்கமானது, பெரியோர்களிடத்திலும் சிறிது குற்றமுண்டானால், அது பெரிய இப்பூமியில் யாவராலும் அறியப்படு மென்பதை விளக்கிக் காட்டும், (எ - று)

இது தீப்பொருட்காட்சி சந்திரனிடத்தே மறு விளங்குதல் பெரியோரிடத்தே குற்றம் விளங்குதலை உணர்த்துவது போலுமெனக் இருநிலம் - பெரியபூமி தேக்குதல் - மிகுதல் வாக்குதல் - பொழிதல் மறு - களங்கம் (ருக)

### ௩க புணர்நிலையணி

அசு வினைபண் பெனவிவை யிருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை யாகும்

(இ - ள்.) வினையானும் பண்பானும் இரண்டு பொருளுக்கொன்றே பொருந்தச் சொல்லுவது புணர்நிலை யென்னும் அலங்காரமாம், (எ - று)

அவற்றுள், க-வது, **வினைப்புணர்நிலை**

### நேரிசை வெண்பா

வ - று "வேண்டுருவங் கொண்டு கருகி வெளிபரந்து
நீண்ட முகிலுடனே நீர்பொழிந்த—ஆண்டகையோர்
மேவல் விரும்பும் பெருந்தகையான் மெல்லாவி
காவல் புரிந்திருந்தோர் கண்"
என வரும்

(இ - ள்) தான் வேண்டிய உருவத்தைக்கொண்டு கறுத்த நிறத்தை யுடையதாய் ஆகாயத்திலே பரந்து

பெரியதாயிருககபபடட மழைமுகிலுடனே நீர பொழியா நினறன, பிறரிசசிககுந தனமையை யுடைததாகிய உரு வததை யுடைததாய அலஙகரித தெழுதபபடட மையோடு கூடிய வெணமையா னிணடிருககபபடட கணகள, (எ-று)

ஆணமைத தனமையையுடைய தலைவரைச சோதலை விருமபியிருககபபடட காதலாலே தமமுடைய மெலலிய உயிர போகாதபடி காககுந தொழில மிககிருககினற மட வாருடைய கணணெனக கூடடுக

உ-ஃது பணபுப புணர்நிலை

நேரிசை வெணபா

௯-று "பூஙகாவிற புளளொடுஙகும புனமாலைப போழுதுடனே
நீஙகாத வெமமையவாய நீணடனவால—தாஙகாதல
வைககுந துணைவா வருமவழி பாரததாவி
உயககுந தமியா ருயிர" என வரும

(இ-ள) காதலிககபபடட துணைவா வருஙகாலம பாரததிருநத மடவாருடைய உயிரானது, பூமபொழிற கணணே புடகளெலலாம ஒடுஙகபபடட மாலைபபொழு துடனே, நீஙகாத துயரஞசெயது தானுங கழியாதே நினறது, (எ-று)

'ஒனறே மொழிவது' எனறொழியாது 'புணரமொழி வது' எனற மிகையான, மூனறும வேறறுமை அதனோ டியைநத வொருவினையெனப பொருள படவரினே இவ வலஙகாரமாவது எனக கொளக (௯௦)

௩௨ பரிவருததனை யணி

அ௭ பொருளபரி மாறுதல பரிவ நுத தனையே.

(இ-ள) பொருளகள ஒனறறகு ஒனறு கொடுதது ஒனறு கொணடனவாகச சொலலுவது பரிவருததனை யெனனும அலஙகாரமாம, (எ-று)

நேரிசை வெண்பா

உ - று "காமனை வென்றோன் சடைமதியுங் கங்கையும்
தாம் நிலவொன்று தாங்கொடுத்து—நாமப்
பருவா ளரவின் பணமணிகடோறும்
உருவா யிரம்பெற் றன'' என வரும்

(இ - ள்) காமனை வென்ற முக்கட் கடவுளுடைய சடைமீது உண்டாகிய மதியும், கங்கையும், வருத்தஞ் செய்யுந் தன்மை யுடைத்தாய்ப் பெரியதாயிருக்கப்பட்ட ஒளியையுடைத்தாய அங்கேயிருந்த அரவின் படங்களி லுண்டாகிய மணிகடோறும் தத்தம் உருவத்தைக் கொடுத்து, ஆயிரமாயிரம் உருவத்தைப் பெற்றன, (எ - று)

௬௩ வாழ்த்தணி

அஅ இன்னார்க் கின்ன தியைக வென்றுதா
முன்னியது கிளத்தல் வாழ்த்தெனமொழிப

(இ - ள்) இன்னதன்மையை யுடையார்க்கு இன்னது நிகழ்க என்று கவிகள் தாம் கருதியதனை விதிப்பது வாழ்த்தென்னும் அலங்காரமென்று சொல்லுவர் புலவர், (எ - று)

நேரிசை வெண்பா

உ - று "மூவாத தமிழ்பயந்த முன்னோன் முனிவாழி
ஆவாழி வாழி யருமறையோர்—காவிரிநா
டண்ணா லனபாயன் வாழி யவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை"

(இ - ள்) அழியாத தமிழினைத் தோற்றுவித்த பழமையான நூல்களை உணர்ந்த அகத்தியமுனி வாழ்க; பசுக்களெல்லாம் வாழ்க, அரிய வேதங்களைக் கற்றுணர்ந்த வேதியர் வாழ்க காவிரிநதி பாய்கின்ற சோழநாட்டுக்கு இறைவனாகிய அனபாய னென்னும் சோழன் வாழ்க அவன் ராசாட்சிக் குட்பட்ட உலகத்தில் மழைவாழ்க, (எ - று)

மூவா - கெடாத பயத்தல் - தருதல் அண்ணல் - தலைவன், பெருமையிற் சிறந்தவன் (கூஉ)

௯௪ சங்கீரண வணி

அகூ மொழியப் பட்ட வணியல் தம்முட்
டழுவ வுரைப்பது சங்கீ ரணமே

(இ - ள்) மேற் சொல்லப்பட்ட அலங்காரங்கள் பலவுந் தம்முட் பொருந்த உரைப்பது சங்கீரண மென்னும் அலங்காரமாம், (எ - று)

நேரிசை வெண்பா

உ - று 'தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமரு-
புண்டரிக நின்வதனம் போன்றதால்—உண்டோ
பயின்றா ருளம்பருகும் பான்மொழியாய்' பார்மேல்
முயன்றுன் முடியாப் பொருள்" என வரும்

(இ - ள்) குளிர்ந்த துறைநீரிலே தவம்புரிந்த இதனாலே வண்டு மருவப்பட்ட தாமரை நின் முகமண்டலத்தைப் பொருவப் பெறுதலால், அணைந்தா ருள்ளத்தை வவ்வும் பால்போன்ற மொழியினை யுடையாய்! உலகத்தில் முயற்சியான் முடியாத பொருள் யாதுமில்லை, (எ - று)

'உண்டோ' என்பதற்கு 'இல்லை' என்ப் பொருள் கொள்க

இதனுள், 'தண்டுறை நீர்நின்ற தவம்' என்பது தற்குறிப்பேற்றம் 'தவத்தால்' என்பது காரகவேது 'அளிமருவு' என்பது சிலேடை 'புண்டரிக நின்வதனம் போலும்' என்பது உவமை 'உண்டோ முயன்றுல் முடியாப்பொருள்' என்பது வேற்றுப்பொருள் வைப்பு 'உளம் பருகும் பான்மொழியாய்' என்பது சுவை இப்பாட்டிற்கு இவ்வண்ணமே பல அலங்காரங்களும் காண்க

இஃது, உறுப்பினைத்துங் கூட்டிய கலவை போல்வதோர் தன்மைத்தாய், ஒன்றற்கு மிகுதி தோன்றுமல் உரைப்பதாமெனக் கொள்க அல்லதூஉம், சந்தனத்தோடு கருப்பூரம் விரவினும், மானமதத்தோடு கருப்பூரம் விரவினும் சந்தனமும், மானமதமும் என்பதல்லது கலவை

பெயர்பெற்றா! அவ்வாறே இரண்டு அலங்காரம் கூடின இவ்வலங்கார மெனப்படாது பல அலங்காரங்களும், இரண்டிறந்தனவே கூடின, இவ்வலங்காரமாவது இரண்டிறந்த பல எனப்பேர் கண்டு ஆசிரியர் கருத்தெனக் கொள்க (கூ௫)

**உவமையுருவகங்கட்குப் புறனடை**

௩0 ஒப்புமை யில்லது மையமு முவமையிற்
செப்பிய திறமு முவமை யுருவகமும்
உருவகத் தடக்கலும் புணர்ந்தனர் கொளலே

(இ - ள்) ஒப்புமையில்லதெனப்படுவது-பொதுநீங்குவமை அது

'தானே யுவமை தனக்கு'' என வரும்.

இச் செய்யுளை இப் புத்தகத்தின் ௫௧-ஆம் பக்கத்திற் காண்க

ஐயமெனப்படுவது - ஐயவுவமை, அது

'தாதளவி வண்டு'' என வரும்.

இச் செய்யுளை இப் புத்தகத்தின் ௪௯-ஆம் பக்கத்திற் காண்க

இதனுள், தாமரைகொல் முகங்கொல் என்பது ஐயம்

இவை யிரண்டும், முன்னர் உவமையினத்திற்கும் பொதுவாக ஓதிய சூத்திரத்துள் 'பண்பு தொழில் பயன்' என்பன காரணமாய ஒன்றாகியும் பலவாகியும் வரும் பொருளோடு பொருள் இயைபுவைத்து ஒப்புமை புலப்பட உரைப்பதே உவமை என்பதே கொண்டு, 'பொதுவாகிய குணம் முதலாகியன காரணமாகப் பொருளோடு பொருள் இயைபுவைத்து ஒப்பித்தன இல்லை' என்று குற்றங் கூறப்படாது

என்னையெனின், 'தானே யுவமை தனக்கு' என்ற வழியும், ஒக்கும் பொருளையெடுத்தே அவற்றினுஞ் சிறந்தது இஃது என்று உரைத்த துணையே, அவற்றோடு

ஒபபுமை வேணடியதிலைுயின முனனாக கூறுன, அதனுல பொருளோடு பொருள இயையவைதது அவறறின ஒபபுமை கருதியே உரைததாுமெனக கொளக

ஐயவுவமையும, ‘ தாமரைகொல முகஙகொல ’ என்ற வழித தாமரைககும முகததிறகும பொதுவாகியதொரு தனமை கருதியே யுரைததது அவவாறனறேல, தாமரை யோடு முகததிடை ஐயநதோனற உரையா னெனபது

இனி, உவம வுருவகம்

வ - று “வதனமதிய முதய மதியமே யொககும” என வரும.

இச செயயுளை இப புததகததின ௭௦-ஆம பககததிற காணக

எனறவழி, முன குணபபொருளை முககியப பொரு ளோடு உருவகஞ செயது ‘ வதனமதியம ’ எனறுன பினனா முககியபபொருளோடு உவமிதது ‘ உதய மதியமே யொககும ’ எனறுன எனபது

எனவே, முனனா உருவகஞ செயத அதனைப பின னரும உவமிபபது புனருததமாம பிறவெனின, ஆகாது

(கு - ரை) புனருததம - கூறியது கூறல என்னும குறறம

அஃது ஒா சொலலுதல வகைமையான, முனனா இயலபாகிய விளககமும, கிளாசசியும நோககி முககியப பொருளோடு குணபபொருளை ஒறறுமை கொளுததி உருவகஞ செயது, பினனரும, செயறகையால உளமாகிய மதாபபுஞ செமமையும நோககி ‘ மதி நுகாநதாா முகம உதயமதியம போலும ’ என்று உவமிததமையின வேற றுமை யுடைததாதலால உருவகததுளளே அடககப பட்டது உவமைபபாற படுபபினும இஃது ஒககும

‘ ஐயமும ஒபபுமையிலலதும ’ எனுது, முறை பிறழக கூறியவதனுன, இவவோததின ஒழிபுளளன தழீஇக கொளக வெனபது

(கு - ரை) ஒதது - இயல

அவை இடத்திற்கேற்ற உவமையும், காலத்திற்கேற்ற உவமையும், பொருளிற்கேற்ற உவமையும், பண்பிற்கேற்ற உவமையும், சாதிக்கேற்ற உவமையும், மரபிற்கேற்ற உவமையும், பிறவாறும் பொருத்தமுடையன சிறப்புடையன வெனக் கொள்க.

அவற்றுள், க-வது இடத்துக் கேற்றது

வ-று "பரற்பகை யுழந்த நேரொடு சிவணி
மரற்பழுத் தன்ன மறுநீர் மொக்குள்" என வரும்.

(இ-ள்) சுக்கான் கற்களாகிய பகையாலே, வருந்தின நேரோடே பொருந்தி, மரற்பழுத்தாற் போன்ற துளும்பு நீரையுடைய கொப்புளம், (எ-று)

இச் செய்யுளடிகள், பொருநராற்றுப்படையிற் கடுஞ் சுரத்தைப் பற்றிக் கூறுமிடத்தே யுள்ளன. அப் பாலை நிலத்தில் நடத்தலால் காலினுண்டாகும் கொப்புளத்துக்கு அவ்விடத்தே யுண்டாகும் மரலென்னும் கற்றாழைப் பழத்தை உவமை கூறியதால் இஃது இடத்திற்கேற்ற உவமையாம்.

பரல் - பருக்கைக் கல்; இது பாலைநிலத்தில், கால்களை யழுத்தி வேதனை செய்யத்தக்க கூர்ப்பாகங்களை உடையன வாய்ச் சிறு மணிகளைப் போன்று கிடக்கும் ஒருவகைச் சுக்கான் கல். மரல் - பாலைவனத்தில் உண்டாகும் ஒரு வகைக் கற்றாழை. சிவணல் - பொருந்துதல். கடுஞ்சுரம் - கொடுமையான பாலைநிலம்.

உ-வது, காலத்துக் கேற்றது

வ-று 'நிழற்கோபமலக" என வரும்.

இச்செய்யுளை இப்புத்தகம் ௫௧-ஆம் பக்கத்திற் காண்க.

இச் செய்யுள் கார்கால வண்ணனை. இதில் அக்காலத்திற்கு உரிய இந்திரகோபம், காயாமலர், தோகை விரித்தாடும் மயில் என்பவற்றை எடுத்து, அக்காலத்திற் பெரும்பாலும் தழலில் தோன்றிய புகையை யூட்டும் கூந்தலை யுடைய மகளிரோடு உவமித்துக் கூறியமை காண்க.

ங-வது, பொருளுக் கேற்றது

உ-று "கடலு மலையும் போலக் கரியோய்" என வரும்

(இ - ள்) கடலும் மலையும்போலக் கரிய நிற முடையவனே! அல்லது அவைபோல் உயர்ந்த தோற்ற முடையவனே! (எ - று)

இஃது, உவமேயத்தின் நிலைமைக்கேற்ற உவமையாதல் காண்க

ச-வது, பண்பிற் கேற்றது

உ-று "புலிநா வன்ன புலவித ழந்த தாமரை" என வரும்

(இ - ள்) புலியின் நாவை நிகர்த்த செறிந்த இதழ் களையுடைய தாமரை, (எ - று)

இதிலுள்ள உவமை செந்நிற மிகுதிக்கும், மெல்லிய தன்மைக்கும் ஏற்றதாதல் காண்க

ரு-வது, சாதிக் கேற்றது

ஆசிரியப்பா

உ-று "சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றித ழலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை" என வரும்

(இ - ள்) சேற்றில் வளருந் தாமரை மலர்ந்த ஒளிய நிறத்தை யுடைய நூறிதழ்கள் பொருந்திய மலரின் வரிசையைக் கண்டாற்போன்ற ஏற்றத் தாழ்வற்ற பரிசுத்தமாகிய குடியிடத்திற் பிறந்து தங்கி யிருந்த அரசர்களை எண்ணுங் காலத்தில், (எ - று)

இதில் வரும் உவமை சாதியின் கௌரவத்திற்கு ஏற்றதாதல் காண்க

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்" எனவும் வரும்

(இ - ள்) மிருகங்களைக் காட்டினும் மனிதர் எவ்வளவு சிறப்புடையவரோ அவ்வளவு இழிவுடையராவர், சிறப்புற்ற நூல்களைக் கற்றவரினும் கல்லாதவர், (எ - று)

இதில் கல்லாத மனித சாதிக்கு விவேகமற்ற மிருக சாதியை உவமை கூறியமை காண்க

௧-௨ து மரபிற்கு ஏற்றது

வ - று ' கவிரபோலுஞ் செவ்வாய்'' எனவும்,

"பவளம்போலுஞ் செவ்வாய் எனவும் வரும்

இவை செம்பருத்தியும் கரவீரமும் உரையாமையின், பிற அலங்காரங்கட்கும் இவ்வாறே ஏற்புடைமை அறிந்து படுவன சிறப்புடைய வெனக் கொள்க

கவிர் - முருக்கிதழ் கரவீரம் - செவ்வலரி

செம்பருத்தியையும் செவ்வலரியையும் வாய்க்கு உவமை கூறுதல் மரபன்றெனபதும், முருக்கிதழையும் பவழத்தையுங் கூறுதல் மரபெனபதும் இவற்றா லுணரப் படும்

அலதூஉம், பண்பு தொழில் பயன் என்னுமிவற் றின்மேல் நிகழும் சொலலின்றி அவற்றிற்கு முதலாகிய பொருள் கூறவே, அவ்வாற்ற பண்பு முதலாயின பெறப் படும் உவமையும் உள

அவை வருமாறு —

நேரிசை வெண்பா

வ - று "மயில்போன் மடப்பிடிபோன் மான்போன் மழலைக்
குயில்போ லொளிர்மென் கொடிபோற—பயிலும்
கொலைவா ரணத்துங்கன் கோழிக்கோன் கொல்லி
மலைவாணர் காதன் மகள்" என வரும்

(இ - ள்) பகைவரைக் கொல்லுகின்ற யானையைக் கொண்டு சிறந்தவனும், கோழி யென்னும் படை வீட டிற்குத் தலைவனுமான அரசனது கொல்லிமலையில் வாழும் வேடுவர்களுடைய விருப்பமுற்ற பெண், மயில் போலவும், இளமைப் பருவமுள்ள பெண்யானைபோலவும், மானைப்

போலவும, மழலைக குயிலபோலவும், விளஙகுகினற மெலிய கொடிபோலவும பயிலுவாள எனபதாம

இதனுள, மயிலபோலும இயலினை யுடையாள எனவும, பிடிநடைபோலும நடையினை யுடையாள எனவும, மானேககுபபோலும நோககினையுடையாள எனவும குயின மொழிபோலும மொழியினையுடையாள எனவும கொளளக கிடநதமை யறிநது கொளக எனனை ?

சூததிரம

"சுடடிக கூறா வுவமை யாயிற

பொருளெதிர புணாதது பொருநதுவ கொளலே '

எனபவாகலின

இயல - சாயல பிடி - பெடடையானை மழலை-நிரமபா மென சொல பயிலல - பொருநதியிருததல

தொலகாபபியச சூததிரப பொருளாவது உவமானத திறகும உவமேயததிறகும பொதுவான ஒபபுததனமையை விரிததுக கூறாவிடடது, அவவிரணடையும ஒபபிடடு நோககி, அவவிடததுககுப பொருநதிய தனமையைக கொளள வேணடுமெனபதாம 'பவளமபோற செநதுவா வாய எனபது இரணடுககும பொதுவான செமமைக குணததையே சொலலி உவமை கூறினமையின, சுடடிக கூறிய உவமையாம 'பவளவாய' எனறவிடததுச சுடடிக கூறா உவமையாம இதில, பவளததையும வாயையும ஒபபிடடு நோககிச செமமைக குணம பறறி உவமை கூறிய தென றுணர வேணடும இஙஙனமினறேல வலிமையுளள பவளததிறகும மெலலிய வாயிதழுககும உளள ஒபபுமை யிலலையா மெனக (கூச)

நடு பாவிகவணி

கூக பாவிக மெனபது காபபியப பணபே

எனபது நிறுதத முறையானே பாவிக மெனனும அலஙகாரம உணாததுதல நுதலிறறு

(இ - ள்) பாவிக மெனறு சொலலபபடுவது பொருட டொடா நிலைச செயயுட டிறததுக கவியாற கருதிச செய யபபடுவதொரு குணம், (எ - று)

அஃது, அத தொடாநிலைச செயயுள முழுவதும நோககிக கொளளபபடுவதலலது, தனிதது ஒரு பாடடால நோககிககொளளப புலபபடாதது

ஆசிரியபபா

உ - ற "பிறனில விழைவோா கிளையொடுங கெடுப
பொறையிற சிறநத கவச மிலலை
வாயமையிற கடியதோா வாளி யிலலை"

எனபதுபோலக கிடபபது

'பிறனில விழைவோா கிளையொடுங கெடுப' எனபதறகுப பொருள், 'பிறன மனைவியை விருமபுவோா சுறறத தொடுங கெடுவா எனபதாம இஃது இராமாயணததா லுணரபபடும

'பொறையிற சிறநத கவச மிலலை' எனபதறகுப பொருள, 'பொறுமையைப பாாககிலும சிறபபுறற பாது காப பிலலை' எனபதாம, இது பாரததால உணரபபடும

'வாயமையிற கடியதோா வாளி யிலலை' எனபதறகுப பொருள, 'சததியததைக காடடிலும துனபததைச சிதைக கததகக கடியதோா அமபிலலை' எனபதாம, இஃது அரிச சநதிர சரிததிரததா லுணரபபடும

அஃதேல, முன அதிகாரச சூததிரததுப பிற அலங காரஙகளுடன வைதத இதனை ஈணடுப புறனடையின பினனுக வைததது எனனை யெனின, பிற அலஙகாரஙகள ஒரு பாடடானே யுணரப புலபபடும, இஃது அனன தனறு, ஆகலான, ஆசிரியன வாழததெனனும அலங காரததின பினனரே விரவியல வைததது முனனரளவே விரவுவன வெனப தறிவிததறகு இஃதனன தனறெனபது

**பொருளணியியல் முற்றிற்று**

# ௩. சொல்லணியியல்

௯௨ எழுத்தின் கூட்ட மிடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வேறு பொருடரின் மடக்கெனும்
[பெயர்த்தே.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், சொல்லானும் அணிகளது இயல்புணர்த்தினமையிற் சொல்லணியியலென்னும் பெயர்த்து. அஃதேற் குற்றமுங் குணமும் ஈண்டே யன்றே கூறியது இதனைச் சொல்லணியியலென்றதென்னையெனின், அவையுங் கூறினாரேனும் அவை சிறுபான்மைய வாகலானும், இத்துணைச் சிறப்புடையன அன்மையானும், சொல்லானும் அணிகளது தலைமையும், பன்மையும் நோக்கி அப் பெயர்த்தாயிற் றென்பது என்னை,

"ஒருபெயர்ப் பொதுச்சொல் லுள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்த றலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்"

என்பவாகலின்

இவ்வோத்தினுள் இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், பொதுவகையான் மடக்கென்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) எழுத்துக்களது தொகுதி, பிறவெழுத்தானும் சொல்லானும், இடையிடாதும் இடையிட்டும் வந்து பெயர்த்தும் வேறு பொருளை விளைப்பது மடக்கென்னும் அலங்காரமாம், (எ - று)

எழுத்துக்களது தொகுதி எனவே, இரண்டு முதலனைத்தெழுத்தானும் வருமெனக் கொள்க 'பிறிதின்றியும்' என்பது எதிரது தழீஇய எச்சவும்மை 'பெயர்த்தும்' என்பது இறந்தது தழீஇய எச்சவும்மை மடக்கு-யமகம் அஃதாவது வந்த சொல்லே வருதல் (க)

கங. அதுதான,

ஓரடி முதலா நான்கடி காறும
சேரு மெனப தெளிந்திசி னோரே

எனபது

இதுவும் அதனையே வகுத்துணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) அம் மடக்கு, நான்கடிச் செய்யுளுள்ளே மடக்குங்கால், ஓரடிக்கண்ணும், ஈரடிக்கண்ணும், மூன்றடிக்கண்ணும், நான்கடிக்கண்ணும் நடக்குமென்று சொல்லுவர் தெளிந்தோர், (எ - று)

நான்கடிச் செய்யுளென்பது ஆற்றலாற் போந்த பொருள் ஓரடிக்கண் வருவன - முதலடிக்கண்ணும், இரண்டாமடிக்கண்ணும், மூன்றாமடிக்கண்ணும், நான்காமடிக்கண்ணும் வருவனவாம் அவை முன்னர்க் காட்டுதும் (உ)

கச ஆதி யிடைகடை யாதியோ டிடைகடை
இடையொடு கடைமுழு தெனவெழு வகைத்தே

எனபது, என்னுதலிற்றோவெனின், இதுவுமது

(இ - ள்) அம் மடக்கு ஆதிமடக்கும், இடைமடக்கும் கடை மடக்கும், ஆதியோடு இடைமடக்கும், ஆதியோடு கடைமடக்கும், இடையோடு கடைமடக்கும், முழுதுமடக்கும் என எழுவகைப்படும் (எ - று) (ங)

கரு. ஓரடி யொழிந்தன தேருங் காலை
இணைமுதல் விகற்ப மேழு நான்கும்
அடைவுறும் பெற்றியி னறியத் தோன்றும்

எனபது, என்னுதலிற்றோவெனின், இதுவுமது

(இ - ள்) ஓரடிமடக்கு ஒழிந்தன ஆராயுங்காலத்துத் தொடையின் இணைமுதலாகிய விகற்பத்தொடை யேழும் நான்குமாகிய பதினொன்றும் போல விளங்கித் தோன்றும், (எ - று)

அவை

(1) முதலீரடிக்கண்ணும் மடக்குதலும், (2) முதலடிக்கண்ணும் மூன்றாமடிக்கண்ணும் மடக்குதலும் (3) முதலடிக்கண்ணும் நான்காமடிக்கண்ணும் மடக்குதலும், (4) கடையீரடிக்கண்ணும் மடக்குதலும், (5) இடையீரடிக்கண்ணும் மடக்குதலும், (6) இரண்டாமடிக்கண்ணும் நான்காமடிக்கண்ணும் மடக்குதலும் என்னும் இரண்டடி மடக்கு ஆறும்;

(1) ஈற்றடி யொழித்து ஏனை மூன்றடிக்கண்ணும் மடக்குதலும், (2) முதலடி யொழித்து ஏனை மூன்றடிக்கண்ணும் மடக்குதலும், (3) முதலயலடி யொழித்து ஏனைய மூன்றடிக்கண்ணும் மடக்குதலும் (4) ஈற்றயலடி யொழித்து ஏனை மூன்றடிக்கண்ணும் மடக்குதலும் என மூன்றடி மடக்கு நான்கும்

நான்கடியு மடக்கிய முற்றுமடக் கொன்றுமாகிய பதினொன்றும், யாப்பதிகாரத்துள், தொடை விகற்பங்கட்கு நாற்சீரடியுளோதியவதனை நான்கடிச்செய்யுளு ளோதினார், 'ஒப்பின முடித்தல்' என்னுந் தந்திரவுத்தியான் இப் பதினொன்றும், ஓரடிமடக்கு நான்கும், ஆகிய பதினைந்தும் மேற்கூறிய ஏழுகூற்றுப்பாட்டோடு கூட்ட நூற்றைந்து வகைப்படும்

அவை, இடையிட்டு வருவனவும், இடையிடாது வருவனவும் இடையிட்டு மிடையிடாதும் வருவனவுமாகிய மூவகையோடுங் கூட்ட முந்நூற்றொருபத்தைந்து வகைப்படும் அவற்றுள் சில வருமாறு —

### அடிமுதன் மடக்கு

**க-வது, முதலடி, முதன்மடக்கு**

**நேரிசை வெண்பா**

வ - று 'துறைவா துறைவார் பொழிற்றுணைவா நீங்க
உறைவார்க்கு முண்டாங்கொல் சேவல்—சிறைவாங்கிப்
பேடைக் குருகாரப் புல்லும் பிறங்கிருள்வாய்
வாடைக் குருகா மனம்"

(இ - ள்) செய்தனிலத் தலைவனே! துறையினகண் பெருத்திருக்கப்பட்ட பொழிலிடத்துச் தலைவா பிரியத் தனித்திருப்பாரக்கும் உண்டாகுமோ, சேவற்குருகானது தன் சிறகை வளைத்துப் பேடைக் குருகை யிறுகப் புல்லும் மிக்க இருளினையுடைய யாமத்துக்கண் வாடைக்காற்று வந்தாற் கரையாத மனம், (எ - று)

இதில் முதலடி முதலில், 'துறைவா, துறைவா' என ஒரே சொல் மடங்கி வந்தமை காண்க

உ-வது இரண்டாமடி, முதன்மடக்கு.

நேரிசை வெண்பா

உ - று 'கனிவா யிவள்புலம்பக் காவலநீ நீங்கில்
இனியா ரினியா ரெமக்குப்—பனிநாள்
இருவராத் தாங்கு முயிரன்றி யெங்கண்
டொருவராத் தாங்கு முயிர்' என வரும்

(இ - ள்) கனிபோன்ற மொழியினையுடைய இவள் புலம்பும்படி அரசனே! நீ பிரிந்தகாலத்து எங்களுக் கினியரா யினிமையான சொற்களைச் சொல்லிக் காக்குந் தலைவ ரினி யாவர்? பனிக்காலத்துத் தம்மிற் புணர்ந்து பிரியாதிருந்த இருவரும் கூடித் தாங்காநின்றகு முயிரல்லதொரு திறத்தாராகப் பிரிந்திருந்த மடவார் தாங்கு முயிர் எக்காலத் தெவ்விடத் துண்டு சொல்வாயாக! (எ - று)

இதன் இரண்டாமடியில், 'இனியா ரினியார்' என ஒரு சொல் மடங்கிவந்தமை காண்க

ங-வது, மூன்றமடி, முதன்மடக்கு

நேரிசை வெண்பா

உ - று "தேங்கானன் முத்தலைக்குந் தில்லைப் பெருந்தகைக்கு
ஓங்காரத் துட்பொருளா மொண்சுடர்க்கு—நீங்கா
மருளா மருளாத் தரித்துரைக்கு மாற்றம்
பொருளாம் புனைமலை யாம்" எனவரும்.

(இ - ள்.) தேனை யுடைத்தாகிய கழிக்கானற்க ணுண்டாகிய முத்தம் வந்தலைக்கப்படாநின்ற தில்லை

சூதாரப் பெரியோனுக்குப் பிரணவத்தி னுட்பொருளாயிருக்கப்பட்ட ஒளிய சோதிவடிவாகிய கடவுளுக்கு இடையறாத ஆசையாகிய மயக்கத்தினை மேற்கொண்டு ஒருவன் சொல்லுகிற அறிவழிந்த சொற்பொருளுமாம், புணர்ப்பட்ட மாலையுமாம், (எ - று)

இதனை மூன்றாமடியில், 'மருளா மருளா' என்றொரு மொழி மடங்கி யிருத்தல் காண்க

ச-வது, ஈற்றடி முதன்மடக்கு

நேரிசை வெண்பா

வ - று "இவ்வளவும் நீயுமிழவ தென்கொலோ தோயும்
கவள மதமான கடத்திற—றிவளும்
மலையாப் புனலருவி நீயணுகா நாளில்
மலையா மலையா நிலம்" என வரும்

(இ - ள) தலைவனே! நீ இவளை வந்து அணையாத போது தோயும் கவள மதமான கடத்தைப் பொத்துப் புரளும் அருவியை யுடைத்தாகிய பொதியமலைக்கண்ணே பிறந்து எல்லார்க்கும் குளிர்ச்சியைச் செய்கின்ற தென்றல், இவ்வளவும் அனலைச் சொரிகின்ற காரணமென் சொல்லுவாயாக, (எ - று)

இத னீற்றடியில், 'மலையா மலையா' என்றொரு சொல் மடங்கினமை காண்க

இவை நான்கும் ஓரடி முதன்மடக்கு

இ-வது, முதலடியும், இரண்டாமடியு முதன்மடக்கு

நேரிசை வெண்பா

வ - று "நினையா நினையா நிறைபோ யகலா
வினையா வினையா மிலமால்—அனையாள்
குரவார்ந் கூந்தற் குமுதவாய்க் கொம்பிற்
புரவாள நீபிரிந்த போது" என வரும்

(இ - ள) தலைவனே! குரவம்பூவினை யுடைத்தாகிய கூந்தலினையும், அல்லி மலரையொத்த வாயினையு முடைத்தாயிருப்பதொரு வஞ்சிக்கொம்புண்டாயின், அக் கொம்பு

போனார்வள் இவளை நீ பிரிந்த பொழுதே நின்னை யாங்கள் நினைத்து எங்கள் நிறையாகின்ற தெங்களை விட்டு நீங்கி வருந்தி ஒரு செய்தியுமறியோ மாகுதும் ஆதலால், எங்களைப் பிரியா தொழிவாயாக, (எ - று)

இதன் முதலடியில், 'நினையா நினையா' என்றும், இரண்டாமடியில், 'வினையா வினையா' என்றும் மடக்குகள் வந்தமை காண்க 'நின்னை' என்பது 'நினை' என விகாரமாயிற்று

கூ-வது, முதலடியு மூன்றமடியு முதன்மடக்கு

நேரிசை வெண்பா

வ - று " அடையா ரடையா ரரணழித்தற் கின்னல்
இடையாடு நெஞ்சமே யேழை—உடையோ
மயிலா மயிலா மதர்நெடுங்கண் மாற்றம்
குயிலாமென் றெண்ணல் குழைந்து "    என வரும்

(இ - ள்) ஊசலாகியிருப்ப இடையாடு முள்ளமே! நீ தலைவியினுடைய சாயலை மயிலா மென்றும், அவளது மதர்த்த நெடிய கண்ணை வேலா மென்றும், மொழியானது குயிலா மென்றும், இனி நினையா தொழிவாயாக அன்றி, நினைத்தியாயின் பகைவரடையும் அரிய அரணை யழித்தற்கு வருத்தமாம், (எ - று)

இதன் முதலடியில், 'அடையா ரடையார' எனவும், மூன்றமடியில், 'மயிலா மயிலா' எனவும் மடக்குகள் வந்தமை காண்க

எ-வது, முதலடியு மீற்றடியு முதன்மடக்கு

நேரிசை வெண்பா

வ - று " மானவா மானவா நோக்கின் மதுகரஞ்சூழ்
கானவாங் கூந்தலெங் காரிகைக்குத்—தேனே
பொழியார்ந்தா ராமேலு நின்புயத்து மேலும்
கழியா கழியா தரவு "    என வரும்

(இ - ள்) மனுகுலவேந்தனே! மானகள் ஆசைப்படு நோக்கத்தையும், வண்டுகள் மதுவுண்ணும்படி சூழ்ந்த கூந்தலையுமுடைய எமது காரிகையாட்கு, மதுப்பொழியு

## ௯ சுழிகுளம்

௨௬௨-ஆம் பக்கத்திலுள்ளது




கவிமுதி யார பாவே
விலையரு மா நறபா
முயலவ துறு நா
திருவ ழிநது மாயா

இது, செவவே யெழுதிய நாலடி நானகு வரியுள, முதலடி முதலெழுததினினறும சுழிரேகை வழியே மேனினறு கிழிழிநதும, கீழநினறு மேலேறியும, புறநினறு வநதுளமுடிய இடஞசுறறிப படிகக நாலடியு முடியுமாறு காணக

## ௭ சருப்பதோ பத்திரம்

௨௬௬ ஆம் பக்கத்திலுள்ளது

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |

மாவா நீதா தாநீ வாமா
வாயா வாமே மேவா யாவா
நீவா ராமா மாரா வாநீ
தாமே மாரா ராமா மேதா.

இது, நாற்புறமும் தலைப்பாக வைத்து வரிசையாகப் படித்தாலும், மடக்கிப் படித்தாலும், நான்கடிகளையும் மேனின்று கீழிறக்கியும், கீழ்நின்று மேலேற்றியும் படித்தாலும் சொரூபங் கெடாமல் மாலைமாற்றாய் முடியுமாறு காண்க

கஉ-வது, அக்கரச்சுதகம் என்பது, ஒருபொருள் பயப்ப தொரு சொற்கூறி, அதனில் ஒவ்வொரு எழுத்தாக நீக்க வெவ் வேறு பொருள்பயக்கப் பாடுவது

உ - று "பொற்றூணில் வந்த சுடர் பொய்கை பயந்த வண்ணல்
சிற்றுயன் முன்வனிதை யாகி யளித்த செம்மல்
மற்றியார் கொல்லென்னின் மலர்தூவி வணங்கி நாளும்
கற்றோர் பரவுங் கங்காரி ஙகாரி காரி" என வரும்

(இ - ள்) பொன்னாகிய தூணிலே தோற்றியே சோதியாயுள்ளான் யார்? பொய்கையானது பெற்ற தலைமையுடையவன் யார்? சிற்றுயனாகிய மால் முன்னாள் மோகினி வடிவுகொண்டபோது பெற்ற பிள்ளை யாரென்று கேட்பீராயின், கற்றூரால் மலர்தூவி நாடோறும் வணங்கப் பட்ட கங்காரி என்றும், ஙகாரி என்றும் காரி என்றுங் கொள்க, (எ - று)

கங்காரி - திருமால் ஙகாரி - முருகவேள், காரி - மாசாத்தன் அக்கரச்சுதகம் - அட்சரநீக்கம்

கங-வது, நிரோட்டம் என்பது, இதழ் குவிக்கும் உயிரு மெய் யுந் தீண்டாமற் பாடுவது

நேரிசை வெண்பா

உ - று "சீலத்தான் ஞானத்தாற் றேற்றத்தாற் சென்றகன்ற
காலத்தா லாராத காதலான்—ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்தடி யேற்கினிதாங்
கச்சிக்கச் சாலைக் கனி" என வரும் என்னை?

(இ - ள்) தொழிலாலும், அறிவாலும், மனத்தெளி வாலும் தன்னிடஞ்கச் செலுத்தின காலத்தின் பெருமை யாலும், ஒப்பில்லாத ஆசையாலும், உயர்ந்தோராயினோர் நினைப்பவும், எத்தனையுந் தாழ்ந்த எனக்கு, மிகவுஞ் சிறந் தினிதாகாநிற்குங் கச்சிப்பதியிலுண்டாகிய திருக்கச்சாலை யிற் றோற்றிய கனியை யொப்பான், (எ - று)

### சூத்திரம்

"உண்டென்ற ஒன்றன் வழிஉற நிலையும்
சோர்வில் நோட்டத் திறத்து"  என்றாராகலின்

நிரோட்டம் என்பதற்கு இதழோடு இதழ் ஒட்டாதது என்று பொருள்.

கரவு, ஒற்றுப்பெயர்த்தல் என்பது, ஒருமொழியுந் தொடர்மொழியுமாயப் பொருள்படும் வற்றை அப்பொருளொழிய வேறு பொருள்பட வைப்பது.

### நேரிசை வெண்பா

வ - று "வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலர்ந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாம்—தண்கவிகைக்
கொங்கார் அலங்கல் அநபாயன் கொய்பொழில்சூழ்
கங்கா புரமா ளிகை"  என வரும்.

(இ - ள்) வளப்பத்தையுடைய மேகங்கள் கீழாக மேலோங்கி வானகத்தின்கண் ணுண்டாகிய கற்பகப்பூக்களை உச்சிமீது உடைத்தாய், உலகெலாம் தன்னுருவச் சாயை யாகிய நிழலைப் பெருக்கும் குளிர்ச்சி பொருந்திய குடை யினையும், மதுநிறைந்த மாலையையுமுடைய அநபாயனது கங்காபுரத்தின் மாளிகை எனவும்,

வளப்பத்தையுடைய மேகத்தைப் பழிக்குந் தன்மையை யுடையதாய், வானகத்தினுண்டாகிய கற்பகத் தோடு பகைகொண்டு கொடுத்து உலகத்துள்ளாருடைய உள்ளங் குளிரும்வண்ணம் காவல்புரியுங் கங்காபுரத்தை யாளும், குளிர்ந்த குடையினையுடைய அநபாயனது கை எனவும், வந்தவாறு காண்க.

கங்காபுரம் - கங்கைகொண்ட சோழபுரம்.

### இதுவுமது

### நேரிசை வெண்பா

பொற்புடைய மாதர் புலவரோர் பொய்யமருவாச்
சொற்பயிலும் பாண சுடாமணிதேர்—கற்புடைய
வஞ்சிநகர் சேரின்ற மாமருதார் ஆனமகிழா
நஞ்சனைய நல்வயலூ ரறத்து"

(இ - ள்) பொய்யோடு கூடாத சொற்களைப் பல காலுஞ் சொல்லாநின்ற பாணே! அவர்தஞ் சூடாமணித்தேர் தம் கற்புடைய மனைவி மனையிலே சேருமாயிற் பொலி வினையுடைய பரத்தையர் முனியாரோ? தேனால் வண்டு மருவப்பட்ட தாரான் இன்புறுந்தகையமல்லல், நல்வயலூரனா கிய தலைவற்கு நாங்கள் நஞ்சேர்வோமோ தீண்டு மிடத்து, (எ - று)

இப்பாட்டின் ஓரடியில், வஞ்சி - நகர் - சேர் - இல - நறவு - மா - மருது - ஆர் - ஆல் - மகிழ் - என்னும் பத்து மரம் வந்தன, என்னை?

நேரிசை வெண்பா

வ - று "ஓரடியுட் பத்து மரமுடனொற் றுப்பெயாத்துத்
தோமருவி யூடற் றிறம்புனைந்து—நீர்மை
மருதம் புணர்த்ததூஉம் வெண்பாவாய் வையம்
கருதப் பகர்வன கவி"

(இ - ள்) அஃதாவது ஒற்றுப்பெயர்த்து ஓரடியில் பத்துமரம் வருதலோடு, தலைவன் தேர் சேர்ந்துவரத் தலைவியின் பிணக்கின் தன்மையைச் சேர்த்துவைத்து, மருத நிலத்தின் றகவுசார், இவை அடங்கியதும் வெண்பாவாக உலகத்தார் கருதக் கவி கூறுவான, (எ - று) என்றா ராகலின்,

ஆல்-கலைக்கும், ஓர் மரத்துக்கும் பெயர் 'ஒற்றுப் பெயர்த்தல்' என்பதற்கு 'ஒன்றினிற்கும் வேறு பொருளைப் பெயர்த்தெடுத்தல்' என்று பொருள்

கஉ-வது, **மாத்திரைச் சுருக்கம்** என்பது, ஒருபொருள் பயந்து நிற்ப தொருசொல், ஒரு மாத்திரையைக் குறைப்பப் பிறிதொரு பொருள் பயக்குஞ் சொல்லாய் நிற்பது

நேரிசை வெண்பா

வ - று "நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெறச் சண்டமாம்
நீரிலையோர் புள்ளி பெறனெருப்பாம்—சீரளவும்
காட்டொன் றொழிப்ப விசையாம் தன்னளவில்
வீட்டொன் றொழிப்ப மிடறு" என வரும்

(இ - ள்) சேரிமையார் கூர்த்த - ஏரி இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க ஏரி எனவும் மரமாம் நிலை - ஏரி இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க, ஏரியாகிய நீருப பாம, காடு - காந்தாரம், இதில் ஒரு மாத்திரையைச் சுருக்கக் கந்தாரம் எனவும் பண்ணும் இதில் இட்டும் ஒரு மாத்திரையைச் சுருக்கக் கழுத்தாம், (எ - று)

இதில் புள்ளிபெற என்றது ஒகார எகாரங்கள் அக்காலத்துப் புள்ளி பெறுதலை நோக்கி என்க என்னும் மையும்

கசு-து, மாத்திரை வருத்தனம் என்பது, இதனை மறுதலைப் பட்டப் பாடுவது

கலி விருத்தம்

வ - று ‘அளபொன் றேறிய வண்டதி னாடற்றல
அளபொன் றேறிய மணணெதிரா துசகுமால
அளபொன் றேறிய பாட லருளுசுவை
அளபொன் றேறமு கூடலோ தாடுமால்" என வரும்

(இ - ள்) வண்டு - அளி, அளபேறிய வண்டு - ஆளி எனவும் மண - தாரை, அளபேறிய மண - தாரை எனவும், பாடல் - கவி, அளபேறிய பாடல் - காவி எனவும், அழகு - வனப்பு, அளபேறிய அழகு - வானப்பு எனவும் காண்க, (எ - று)

இது, நற்றுயிரங்கல் துறையாக அமைந்தது, தலைவி தலைவனுடன் அடவியிற் செல்லுங்காலத்தே ஆளி ஆரப்பி னால், அவளுடைய காவிபோன்ற கண்கள், மழைபோன்ற கண்ணீரில் மூழ்கியாடும், கண்ணீர்த்தாரைகள் மார்பின் மேல் உகும்' என்பது இதன் பொருள் மாத்திரை வருத் தனமாவது, மாத்திரையை அதிகப்படுத்தல்

கஎ-வது, முரசபந்தம் என்பது, ஓரடி ஒருவரியாக நான்கு வரி யெழுதி மேலிரண்டு வரியும் தம்முட் கோமூத்திரியாகவும், கீழி ரண்டு வரியுந் தம்முட் கோமூத்திரியாகவும் சிறுவரா போக்கி, மேல்வரி யிரண்டாம் வரியினும், மூன்றாம் வரியினும் நான்காம் வரியினுங் கீழ்நின்று மீண்டு மேனோக்கவும், கீழ்வரியினும், அவ் வாறே மேலுநின்று மீண்டு கீழ்நோக்கவும் பெருவரா போக்கி, இந் வார நான்கும் நான்கு வரியாகவும் பாடுவது

## ௮ முரசபந்தம்

௨௫௧-ஆம் பக்கத்திலுள்ளது

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| தா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| மா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| கா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |

கான வாரண மரிய வாயினனே
தான வாரண மரிய வாயினனே
மான வாரண மரிய வாயினனே
கான வாரண மரிய வாயினனே

இது மேலிரண்டடிகளுந் தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டடிகளுந் தம்முட் கோமூத்திரியாகவும், சிறுவார் போக்கி, மேல்வரி மற்ற மூன்று வரிகளிலும் கீழுற்று மீண்டு மேனோக்கவும், கீழ்வரியும் அவ்வாறே மற்ற மூன்று வரிகளிலும் மேலுற்று மீண்டு கீழ்நோக்கவும் பெருவார் போக்கி, இந்தவார் நான்கும் நான்கு வரிகளாகவும் முடியுமாறு காண்க

### கலி விருத்தம்

வ - று “கான வாரண மரிய வாயினனே
தான வாரண மரிய வாயினனே
மான வாரண மரிய வாயினனே
கான வாரண மரிய வாயினனே” என வரும்

(இ - ள்) சோழன் வலியமிக்க போர்செய்த இடமா னவை, இசையோடு கூடிய வேதம் அரியவாயக, கூட்டம் பொருந்திய மதயானை யரியவாயக, காட்டுக் கோழியையும் சிங்கங்களையு முடையவாயின, (எ - று)

சோழன் போர்செய்யாத முன்னர் மறைமுழக்கமும், யானைகளுமுடைய இடங்கள், போர்செய்த பின்னாக காட்டுக்கோழி முழக்கமும், யானையைக் கொல்லவல்ல சிங்கங்களுமுடைய வாயின வெனக்கொள்க இது முரசின் வாரகளைப்போல அமைந்திருத்தலின் முரசபந்தம் எனப் பட்டது முரசம் - மிருதங்க வாச்சியம்

கஅ-வது, திரிபாகி என்பது, மூன்றெழுத்துக் கூட ஒரு மொழியாகியும், அதில் முதலெழுத்துங் கடையெழுத்தும் கூட வேறொருமொழியாகியும், இடையெழுத்துங் கடையெழுத்துங் கூட மற்றொருமொழியாகியும் வருவது

### நேரிசை வெண்பா

வ - று “மூன்றெழுத்து மெங்கோ முதலீ றொருவள்ளல்
என்றுலகங் காப்ப திடைகடை—யான்றுரைப்பிற
பூமார் பெய்துலகம் போற்றிப் புகழ்ந்தேத்தும்
காமாரி காரிமா ரி” என வரும்

(இ - ள்) இதனுள் மூன்றெழுத்து மெம்முடைய கோவாகிய காமாரி எனவும், இதன் முதலெழுத்துங் கடை யெழுத்துங் கூடக் காரி என்றொருவள்ளல் எனவும், இதன் இடையெழுத்துங் கடை யெழுத்துங்கூட மாரி என்று உலகங்காக்கும் மழை எனவும் வந்த வாறு கண்டுகொள்க, (எ - று)

திரிபாகி யென்பதற்கு மூன்று பாகத்தையுடையது என்று பொருள்

(கு - ரை) சாபாரி - காமனுக்குப பகைவனாகிய சிவன

௧௮-ஆது திரிபங்கி யெனபது ஒரு செய்யுளாய் உறபடைமைநது ஒரு பொருள படைததலை பலவாகப பிரிதது எழுத வெவவேறு செயயுளா யத தனிததனியே பொருள படநது தொடர்புடைக கிரியையும தனிததனியே காணட உருவது

கட்டளைக கலிததுறை

வ-று "ஆதரா நீரனனை போலினியாய' அமபி காபதியே'
மாதுபங கா வனனி சோசடை யாய'வமபு நீணமுடியாய'
ஏதமுயந தாரினனல சூழவினை தீரெமபி ரானினியார
ஓதுமொன றே'உனனு வாரமு தே'உமபா நாயகனே'"
என வரும

(இ - ள) அனனைபோல இனிமை செயபவனே! அமபிகைககு நாயகனே! உமையை இடபபாகததி லுடைய வனே! கையில நெருபபை (மழுவை)த தாஙகிய சடைக கடவுளே! வாசனை தஙகிய நீணட சடைமுடியை யுடைய வனே! குறறததினின்று நீஙகி நினனருள பெறறு வாழநத வாகளுடைய துனபஞ சூழநத இருவினைகளைத தீககினற எமது கடவுளே! முததியினபததை யுடையவாகள துதிககினற ஏக வஸதுவே! நினைபபவாககு அமுதம போனறவனே! தேவாகளுககு நாதனே! எனனுடைய ஆசையைத தீரபபாயாக எனபதாம, (எ - று)

இதனுள,

வஞசிததுறை

"ஆத ரநதீா
மாது பஙகா'
ஏத முயநதாா
ஓது மொனறே'" எனவும,

"அனனைபோ லினியாய'
வனனிசோ சடையாய'
இனனலசூழ வினைதீா
உனனுவா ரமுதே'" எனவும,

"அமபிகா பதியே'
வமபுநீண முடியாய
எமபிரா னினியாா'
உமபாநா யகனே'" எனவும,

மூன்று வஞ்சித்துறைகள் வந்தவாறு காண்க. இச்செய்யுட்களுக்கும் முதற் கலித்துறையின் பொருள்களே பெரும்பாலும் அமையும். இவற்றுள், 'எம்பிரா னினியார்' என்பதற்கு, 'எமது கடவுளே! இனி எமக்கு உன்னையன்றி வேறுகதி யாவர்?' என்று பொருள் கொள்க.

இதுவுமது

நேரிசை வெண்பா

ஷ - று "சங்கந்தா பூணார்ந் தாமே கலைதாங்கற்
புங்கவன்மால் காணாப் புலவுடைய—கங்கரா!
கோணு கலாமதிசேர் கோடீர! சங்கரா!
சோணு சலா! சலமே தோ?" என வரும்.

(இ - ள்) நல்ல பிரமனும், திருமாலும் முடியையும் அடியையுந் தேடிக் காண முடியாதவனும், பகைவர் ஊன் தங்கிய மழுப்படையை யுடையவனுமாகிய அரனே! வளைவாகிய ஒற்றைக் கலையையுடைய சந்திரன் சேர்ந்த சடையையுடையவனே! சங்கரித்தற்றொழிலையுடையவனே! அருணசலத்திலுள்ளவனே! சங்குவளையலைக் கொடு, அணியத்தக்க ஆரத்தைக் கொடு, மேகலாபரணத்தைக் கொடு, உனக்குச் சஞ்சல மியாது? என்பதாம். (எ - று)

இது, அருணசலேசுரராகிய தலைவரைக் கண்டு ஆசை மிகுக்கக் கைவளை முதலியவற்றை நழுவவிட்ட தலைவி யொருத்தி அவரைக் கண்டு, தன்னைக் கூடி அவற்றைத் தன்பாற் சேர்ப்பிக்கும்படி வேண்டிக் கூறியதாக அமைந்தது. சங்கு என்பதற்கு அழகெனினும் பொருந்தும். கங்கு - மழுவைக் குறித்தது.

இவ் வெண்பாவே,

"பூணார்ந் தாமே கலைதாங்கற் புங்கவன்மால்
காணாப் புலவுடைய கங்கரா!—கோணு
கலாமதிசேர் கோடீர! சங்கரா! சோணு
சலா! சலமே தோ? சங்கந் தா" எனவும்,

"சலமேதோ? சங்கந்தா பூணார்ந் தாமே
கலைதாங்கற் புங்கவன்மால் காணாப்—புலவுடைய
கங்கரா! கோணு கலாமதிசேர் கோடீர!
சங்கரா! சோணு சலா!" எனவும்,

மூன்று வெண்பாவாய்த் திரிபங்கியானது காண்க. இவற்றிற்கும் முதல்வெண்பாவின் பொருளே அமையும். இது, ஒரு செய்யுளே மூன்று பங்காவதால் திரிபங்கி யெனப் பட்டது.

(கு - ரை) திரி - மூன்று. பங்கி - பங்கமுடையது. பங்கம் - பேதம்.

௨௦-வது, **பிறிதுபடுபாட்டு** என்பது, ஒரு செய்யுளை அடியுந் தொடையும் வேறுபடுப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொரு செய்யுளாய் முடிவது.

கட்டளைக் கலித்துறை

வ-று "தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும் பரிசுகொண்டு
வரியளி பாட மருவரு வல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங் காமர் மயிலிய லாயநண் ணுந்தேமொழி
யரிவைதன் னேரென லாகுமெம் மையயா மாடிடமே"
என வரும்.

(இ - ள்) எம்மையனே! யாம் விளையாடும் இவ்விட மானது, தெரிதற்கரிய காதலினாலே கூடியவர் விரும்பும் விதத்தைக்கொண்டு இசைபாடத்தக்க வண்டுகளென்னும் பாடல்மகளிர் பாடுதலைச் செய்ய, மருவுதற்கரிய கொடிக ளாகிய இடையினை யுடைத்தாய்த், திரிகின்ற அழகிய மயில்களென்னும் தோழியர் கூட்டத்தைப் பொருந்தித், தேன்போலு மொழியினையுடைய அரிவைக் கொப்பாரு மென்று சொல்லலாந் தகைமைத்து, (எ - று)

இது,

"தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும்
பரிசு கொண்டு வரியளி பாட
மருவரு வல்லி யிடையுடைத் தாய்த்திரி
தருங்காமர் மயிலிய லாய நண்ணுந்
தேமொழி யரிவைதன் னேரென
லாகுமெம் மைய யாமா டிடமே"

என ஆறடியாய், ஈற்றயலடி முச்சீராய், ஏனையடி நாற்சீராய் வந்து நேரிசை யாசிரியப்பாவாமாறு காண்க. இனித்

திரிபங்கிக்குச் சொன்ன பாட்டையே, இரண்டு பாட்டாகக் கூட்டி அடி தொடை பேதித்துச் சொல்லுமாம்

பிறிதுபடு பாட்டாவது, வேறொரு பாட்டுத் தன்னிடத்தே உண்டாகும் பாட்டு (எ)

சித்திரகவி முற்றிற்று

## ௩. வழுக்களின் வகை

௬௯ பிரிபொருட் சொற்றொடர் மாறுபடு பொருண்மொழி
மொழிந்தது மொழிவே கவர்படு பொருண்மொழி
நிரனிறை வழுவே சொல்வழு யதிவழு
செய்யுள் வழுவொடு சந்தி வழுவென
வெய்திய வொன்பது மிடனே காலம்
கலையே யுலக நியாய மாகம
மலைவுள் ளுறுத்தவும் வரைந்தனர் புலவர்

(இ - ள்) அவை (1) பிரிபொருட் சொற்றொடரும், (2) மாறுபடு பொருண்மொழியும், (3) மொழிந்தது மொழிதலும், (4) கவர்படு பொருண்மொழியும், (5) நிரனிறைவழுவும், (6) சொல்வழுவும், (7) யதிவழுவும், (8) செய்யுள் வழுவும், (9) சந்திவழுவு மென்னும் ஒன்பது வழுவும்,

(1) இடமலைவும், (2) காலமலைவும், (3) கலைமலைவும், (4) உலகமலைவும், (5) நியாயமலைவும், (6) ஆகமமலைவும் என்னும் ஆறுமலைவும் உள்ளிட்ட பதினைந்துஞ் செய்யுளிடத்து வரைந்தனர் புலவர், (எ - று)

முன்னர் ஒன்பது வழுவுங் குற்றமாதல் பெரும்பான்மைய, குணமாதல் சிறுபான்மையவென்றற்கும், பின்னாறு மலைவும், ஒருதலையாகவே குற்றமாயப் புகழ்ச்சி

யிடத்துப் புணர்த்துரையாகப் புணர்ச்சகத்தக்க புலவரான மொழியப்பட்டும் சிறப்பானமைய வென்றற்கும் இவ்வாறு வைத்தெனென்றற்க அஃதேல், குற்றஞ் செய்யுட்குக்கி வருவனவாகவோ ஆதலால், செய்யுட் கிலக்கணங் கூறும் யாப்புநூல் உளவேறே புணர்த்தது, ஈண்டுரைத்த தென்னை யெனின்,

செய்யுளென்பது சட்டகம், அலங்காரமென்பது அச் சட்டகத்தைப் பொலிவு செய்வது, ஆதலாற் செய்யுட்குப் பொலிவு ஈண்டு உரைக்கப்பட்டது இக் குற்றம் அச் செய்யுட்குப் பொலிவழிவு செய்வன ஆதலால் அச் செய்யுட்குப் பொலிவழிவு வாராமற் புணர்க்க வேண்டு மென ஈண்டே புணர்த்தப்படு மாதலாற் பிறிதெடுத்தல னென்க

அஃதேல், இச் சூத்திரத்துட் செய்யுளென்பது பெற்றிலமாலெனின், மேற் பொதுவியலுள் அதிகரித்த செய்யுட்கன்றே அலங்காரப் புணர்த்தியதாதலால் இக் குற்றமும் அச் செய்யுட்கண் வாராமற் புணர்க்கவேண்டு மென்றே கொள்ளப்படும் அல்லதூஉம், இச் சூத்திரத் துட் சொற்றொடரென்றது அச் செய்யுளையே யன்றோ வென்க (அ)

பிறன்கோட்கூறி மறுத்தல்

௪00 மேற்கோ ளேது வெடுத்துக் காட்டென்
றாற்றுளி கிளக்கு மவற்றது வழுநிலை
நிரம்ப வுணர்த்த வரம்பில வென்ப

(இ - ள்) மேற்கோளும், ஏதுவும், எடுத்துக்காட்டும் என முறையாற் சொல்லப்படும் அவற்றது வழுநிலையை ஈண்டு முற்றவுணர்த்த அளவில்லாதலாற் கூறிற்றில வென்று சொல்லுவார், (எ - று)

மேற்கோண்முதன மூன்றும் நியாயநூலுட் சொல் லப்படும் அவைதாமும் மதங்கடோறும் வேறுபட்டு

வருவன வாதலால் இன்பாந்தர வுரைக்கு மலங்கார இலக்கணத்தின்கண் மொழியி னிபமிழ்ந்து பிறிதெடுத்து விரித்ததெனப்தா மாதலால் ஈண்டு வேண்டிற்றிலர் (௬)

(கு - ரை) இதனைப் புறனடை எனவுங் கூறுப.

௧ பிரிபொருட் சொற்றொடர்

௧0௧ அவற்றுள்,

பிரிபொருட் சொற்றொடர்செய்யுண் முழுவதும்
ஒருபொருள் பயவா தொரீஇத் தொன்றும்

(இ - ள்) பிரிபொருள் என்பது - ஒன்றாதபொருள், சொற்றொடர் என்பது - செய்யுள், ஆதலால், ஒன்றாப் பொருளுடைச் செய்யுள், (எ - று)

அஃதாவது, வாக்கியங்களை வெவ்வேறு நோக்கப் பொருளுடையவாய்க் கூட்டி நோக்க ஒரு பொருளாக வுணரப்படாததாய் வருவது

நேரிசை வெண்பா

வ - று "கொண்டன மிசைமுழங்கக் கோபம் பரந்தனவாற்
றெண்டிரைநீ ரெல்லாந் திருமுனியே—உண்டுமிழ்ந்தான்
வஞ்சியார் கோமான் வரவொழிக மற்றிவளோர்
பஞ்சியார் செஞ்சீ றடி" என்பதனுள்,

வானின்கண் மேகங்கள் முழங்க நிலத்தின்கண் கோபம் பரந்தன எனவும்,

தெளிந்த அலைகளையுடைய கடனீரையெல்லாம் அகத்திய முனியே யுண்டுமிழ்ந்தான் எனவும்,

கருவூராருக்குக் கோமானாகிய சோழனே வருதலை யொழிவாயாக எனவும்,

இவள் செம்பஞ்சியை யூட்டிய சிவந்த சிற்றடியாள் எனவும்,

தனித்தனி நோக்கப் பொருள் பயந்து, கூட்டி நோக்கப் பொருள் பயவாமையின் அப் பெயராயினவாறு காண்க. (௧0)

### இதற்குச் சிறப்பு விதி

௧0௨ களியினும் பித்தினுங் கடிவரை யின்றே

என்பது, என்னுதலிற்றோவெனின், எய்தியதிகந்து படாமற் காத்தலுணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) மேன் மொழிந்த பிரிபொருட் சொற் றொடர், கள்ளுண்டு களிப்போன் கூற்றின்கண்ணும், பித்துடையோன் கூற்றின்கண்ணும் கடிந்து நீக்கப்படாது, (எ - று)

அவற்றுட் களியான் மொழிந்தது

நேரிசை வெண்பா

வ - று "காம ருருவங் கல ந்தேன்யான் காங்கேயன்
உமனெதிரா னின்று விலக்குமோ—தாமரைமேல்
மால்பொழிய வந்தா ரருகா மதுவுடனே
பால்பொழியு மிவ்வூரப் பனை"

என்றதனுள், அழகிய வுருவங்களிலே யான் புக்குக் கலந்தேன் எனவும்,

காங்கேயனாகிய அரசன் வீமனெதிரா னின்று போரை விலக்குமோ எனவும்,

தாமரை மலர்மே லருகா மால்பொழிய வந்தார் எனவும்

இவ்வூரப் பனை மதுவுடனே பாலைப்பொழியும் எனவும் வரும்

இவ்வாறு சொல்லப்பட்டமையான் நீக்கப்பட்டது வரையின்றென்றது கடிவரையின்றென்றதனாற் பிள்ளைக் கிளைமைத் தன்மையான மொழியுங்காலும் வரையப் படாவென்றறிக அதுவும் பித்தின் மயங்கிய கூற்றும் வந்துழிக் காண்க (௧௧)

### ௨ மாறுபடு பொருண்மொழி

௧0௩ மாறுபடு பொருண்மொழி முன்மொழிக் கதற்கு
மாறுபடத் தோன்றின் வருமொழித் தாகும்

(இ - ள்) மாறுபடு பொருண்மொழியாவது, முன மொழிந்த சொறபொருளோடு, மாறுபட்ட பொரு ளொனறி வருமொழி யுடைத்து, (எ - று)

வருமொழி யென்றது அதன பொருளை

நேரிசை வெண்பா

உ - று "மின்னு மணிப்பைம்பூண வேந்தே நினக்குலகில
இன்று தவாயாரு மில்லையால்—ஒன்னா
குலமுழுதுங் கூற்றங் கொள வெகுண்டு நீயே
தலமுழுதுந் தாங்க றகும்"
என வரும

(இ - ள்) இதனுள், ஒளியினை யுடைய மணிக ளிழைத்த பசும்பொன்னுற செய்த ஆபரணங்களையுடைய வேந்தனே! நினக்கினறுதவா உலகில யாவருமில்லை யென்று, பின்பு நின பகைவருயிரை யெல்லாங் கூற்றுவன குலத்தோடு கொள்ளுமபடியாக வெகுண்டு நீயே யித்தல முழுவதுந் தாங்குதல நினக்குத் தக்க தென்றமையின மாறுபடு பொருண்மொழியாயிற்று, (எ - று) (கஉ)

சிறப்பு விதி

க0ச காமமு மச்சமுங் கைம்மிகி னுரித்தே

(இ - ள்) காமங் கைம்மிகினும், அச்சங் கைம்மிகி னும் அவ்வாறுரைக்கப்படும், (எ - று)

நேரிசை வெண்பா

உ - று "என்னே டிகலபுரியப் பஞ்சவாக ளஞ்சாரோ
மின்னனைய பாஞ்சா லியைவிட்டேன—அன்னே
மிகலபுரியுங் கூற்றனைய வீம னெதிரநின
றிகலபுரிய வாற்றுவலோ யான"
என வரும

(இ - ள்) இதனுள், என்னோடு மாறுபட்டெதிர்த தறகுப பஞ்சபாண்டவா அஞ்சாரோ என்றும், மின்னனைய பாஞ்சாலியை விட்டேன என்றும், மேமபாட்டினையுடைய கூற்றத்தையொத்த வீமனுக்கெதிரே நின்று மாறுபடு தறகு யான வல்லனோ வென்றுஞ் சொன்னமையால அவ வாறுதல காண்க, (எ - று)

இஃது அச்சம் மிகல் - மேம்பாடு புரிதல் - செய்தல் (கநு)

௨ மொழிந்தது மொழிவு

கoரு மொழிந்தது மொழிவே கூறியது கூறி
வேறுபட வொருபொருள் விளங்கா தாகும்

(இ - ள) மொழிந்தது மொழிதலாவது - முன்னே கூறியவதனையே மீண்டுங் கூறி அதனால் வேறுபட வொரு பொருள் விளங்காதது, (எ - று)

நேரிசை வெண்பா

வ - று ' அங்கமி லாதவ னங்கன றலம்புரியும்
வெங்கணையுங் காக்குங்கொல் வேல்வேந்தா—தங்கோன
சிலையாத தொடையதுல னேரிழைக்காய் முன்னோ
மலையாற கடலகடைந்தான மான" என வரும

(இ-ள) வேலேந்தாங்கிய அரசாக்கரசனாகிய, நலத்த ஆத்திமாலையைத் தரித்த ஒப்பில்லாத சோழனே, அங்கமில்லாதவனாகிய மன்மதன் கைத்தலங்களால் எய்யப்படுகின்ற கொடிய அம்புகளையுங் காப்பானோ? காப்பான், ஏனெனில், ஆதியில் திருமால் திருமகளைப் பெறவேண்டி ஒரு மலையாலே பாற்கடலைக் கடைந்தான், (எ - று)

இதனுள், அங்கமில்லாதவ னென்றும், பின்னு மவனையே அனங்கனென்றுஞ் சொன்னமையான் மொழிந்தது மொழிவாயக் குற்றமாயிற்று

அஃதேல், சொற்பின்வருநிலையும், பொருட்பின் வருநிலையும், சொற்பொருட்பின் வருநிலையும் அவ்வாறன்றோ வெனின், அற்றன்று

சொற்பின்வருநிலையாவது மொழிந்த சொல்லே மொழியினும் பொருள் வேறுபடும் அது,

" மாலகரிகாத்தளித்தமால " என்பது

(இ - ள) மதமயக்கத்தையுடைய யானையைக் காத்த திருமால் என்பதாம், (எ - று)

இதில் முதற்கண்ணுள்ள மால் - மத மயக்கம் ஈற்றிலுள்ள மால் - திருமால் என்பது.

பொருட்பின்வருநிலையாவது மொழிந்த பொருளையே மொழியினும் சொல் வேறுபட்டுப் பொருடோறும் வருவதோ ரலங்காரமுண்டாம். அது,

"அவிழ்ந்தன தோன்றி அலர்ந்தன காயா" என்பது.

(இ - ள்) மலர்ந்தன காந்தள்கள், மலர்ந்தன காயா மலர்கள் என்பதாம், (எ - று)

இதில், அவிழ்ந்தன அலர்ந்தன ஒரு பொருட் சொற்கள் என்பது.

சொற்பொருட்பின்வருநிலையாவது சொல்லும் பொருளும் அதுவேயெனினும் அவற்றின் வெவ்வேறு பொருள் படுதல். அது,

"வைகலும் வைகல்" என்பது.

(இ - ள்) நாடோறும் நாள் என்பதாம், (எ - று)

இரண்டும் நாள் என்னும் பொருளை யுணர்த்துவன வாயினும், பின்னது கழிவுநாள் என்று வேறு பொருள் பட்டு நிற்கும். (௧௪)

சிறப்பு விதி

௧0௬ விரைவினுஞ் சிறப்பினும் வரைவின் றதுவே

(இ - ள்) மேல் ஒருசொற் பொருண்மேற் பலசொல் வருதலன்றோ வழுவென்பது, அதுவே விரைவின்கண்ணும், சிறப்பின்கண்ணுமாயிற் குற்றமன்று, (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "ஒருவ ரொருவர்மேல் வீழ்ந்துவட் நாட
ருவ ருருவரென வஞ்சி—வெருவந்து
தீத்தீத் தீயென்றயர்வர் சென்னி படைவீரர்
போர்க்கலிங்க மீதெழுந்த போது" என வரும்.

(இ - ள்) சோழனுடைய படைவீரர், போரையுடைய கலிங்க தேசத்தின்மீது சண்டைக் கெழுந்தபோது, அவ

வடநாடர், ஒருவர்மேல் ஒருவர் வீழ்ந்து, 'நாம் குறைவுற்றவ ரானேம், குறைவுற்றவரானேம்' என்று பயந்து மயங்கி, 'நெருப்பு மூண்டது, நெருப்பு மூண்டது, நெருப்பு மூண்டது' என்று வாடுவார்கள் என்பதாம், (எ - று)

அருவுதல் - குறைதல் அருவர் - குறைந்தவர் சென்னி - சோழன் இது விரைவு பிறவுமன்ன (கரு)

௪ கவர்படுபொருண்மொழி

கoஎ ஒருபொருள் நுணிய வுரைக்க லுற்றசொல்
இருபொருட் கியைவது கவர்படு பொருண்மொழி.

என்பது, என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையாற் கவர்படு பொருண்மொழி யென்னும் வழுவாமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) ஒரு பொருளைத் தெரிவுற உணர்த்தற்கு வந்த சொல் அதனையே ஐயுறும்படி பல பொருண்மே னிற்பது கவர்படு பொருண்மொழி யென்னுங் குற்றமாம், (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "புயலே புறம்பொதிந்து பூந்தா தொழுகி
மயலே கடவளர்க்கு வாய்த்துச்—செயலே
எரிமருவு பூந்துணர்த்தாய் யாவருமூ டாடார்
அரிமருவு சோலை யகத்து" என வரும்

(இ - ள்) மேற்புறம் மேகத்தால் மூடப்பட்டு அழகிய மகரந்தங்களைச் சொரிந்து, தேவர்களுக்கும் மயக் கத்தைச் செய்தலையுடைய, நெருப்பைப்போன்ற நிறம் பொருந்திய பூங்கொத்துக்களை யுடையதாய், வண்டுகள் சார்ந்திருக்கின்ற சோலையினுள் எவரும் ஊடே செல்லார் என்பதாம், (எ - று)

இதனுள் 'அரிமருவு சோலை யகத்து' என்றவழி, அரியென்பது - வண்டு, சிங்கம், நெருப்பு முதலிய பல பொருள்களுக்கும் பொதுவாதலான் ஒன்று துணியப் படாமையின் வழுவாயிற்று (கசு)

### சிறப்பு விதி

௧௦௮ வழூஉப்பட் டிலவழி் வரைவின் றதுவே

(இ - ள்) அக் கவர்படு பொருண்மொழியும் வழு இல்லாத இடத்துப் பொதுப்பட வரைவின்றுங் கூறற் பாற்று, (எ - று)

எனவே,

### சூத்திரம்

'வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல் நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்"

அஃதாவது, சொல் வேறுபடாத பல பொருளொரு சொல், ஆராயுமிடத்து, குறித்துச் சொன்ன பொருளின் படி நடக்கும் எனபவாகலின்.

### நேரிசை வெண்பா

உ - று "வானவர்க் டாழ்ந்து பணிகேட்ப மாறுய
தானவர்கள் சுற்றந் தடிந்தொழித்த—மேன்மை
அரியே யனைத்துலகுங் காக்குங் கடவுள்
எரியே மறையோர்க் கிறை" என வரும்.

(இ - ள்) தேவர்கள் பணிந்து ஏவல் கேட்ப, பகை யான அசுரருடைய குலத்தைச் சேதித்துக் களைந்த, மேன்மை பொருந்திய அரியே யனைத்துலகுங் காக்குங் கடவுள் அக்கினியே வேதியருக்கு இறை

இதனுள் இத் தொழில் திருமாலுக்கு முக்கியம் இந்திரனெனினுமாம் அரியெனபது இந்திரனுக்கும் திருமாலுக்கும் பொதுப் பெயராதலின், காவற்றொழில், பாவர்மேனிற்பினுங் குற்றமன்றெனக் (௧௭)

### ௬ நிரனிறைவழு

௧௦௯ ஒருநிரன் முன்வைத் ததன்பின் வைக்கும்
நிரனிறை பிறழ்வது நிரனிறை வழூவே

(இ - ள்) ஒருநிரன் முன்னெண்ணி வைத்துப் பின் மொழி மாற்றிக்கொள்ளு நிரலைப் பிறழவைப்பது நிரனிறை வழுவாம், (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "தெற்குக் குடக்கு வடக்குக் குணக்குமேல்
நிற்குந் திறத்துலகை நீட்ளிக்கும்—பொற்பினா
ரொண் கலையோன் வருண னிரவியமன்
யாரும் புகழியலட் ஞா" என வரும்

(இ - ள்) தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு என்னுந் திசைகளின்மேல் நிற்குந் திறமையினாலே உலகைக் காக்கும் பொற்பினையுடையார், பதினாறு கலைகளையுடைய சந்திரன், வருணன், சூரியன், யமன் என எவரும் புகழக் கூடிய இயல்பினையுடையார் என்பதாம், (எ - று)

இதனுள், தென்றிசைமுதல் குணதிசை யீறாக அடைவேயெண்ணி அத்திசைகளினின்றும் உலகங் காப்ப வா—சந்திரன், இயமன், வருணன், சூரியனென்ன முறையே வையாது, சந்திரன், வருணன், சூரியன், இயமனென்ன முறைபிறழ வைத்தமையின் வழுவாயிற்று (கஅ)

சிறப்பு விதி

௧௧0 உய்த்துணர வருமவழி யவ்வாறு புரிதடுதே

(இ - ள்) அந் நிரனிறை உய்த்துக்கொண் டுணரவ தாகத் தோன்றுவதாயிற் பிறழினும் பிறழ்வன்று, (எ-று)

நேரிசை வெண்பா

வ - று. "குடபால் வடபால் குணபாறென் பாலென
றடைவே திசைநான் கவற்றுள்—இடையிரண்டு
நன்மைபுரி வோர்பயந்து நோக்குப வேனைய
வன்மை புரிவோர்க்கே யாம" என வரும்.

(இ - ள்) மேற்குத்திசை, வடக்குத்திசை, கீழ்த் திசை, தென்றிசை என்று முறையே ஏற்பட்ட திக்குகள் நான்கனுள், இடையிலுள்ள இரண்டும் நன்மை புரிவோர் அவற்றைக் கொடுத்து நோக்குவனவாம், மற்றைய தீமை புரிவோர்க் குரியனவாம், (எ - று)

நன்மைக்கு மறுதலை - வன்மை இதனுள் உய்த்துணர்ந்துகொள்ளப் பிறழ்ந்தென வைத்தவாறுவது, மேற

திசை முதலாகத் தென்றிசை யீறாக அடைவே யெண்ணி நடுக்கிடந்த வடதிசையும் குணதிசையும் நற்கருமஞ் செய்வோர் நோக்கற்பாலவென்றும், மேற்குந் தெற்குந் தீக்கருமஞ் செய்வோர் நோக்கற்பாலவென்றும் உய்த்துணர வைத்தவாறு காண்க (௧௯)

### ௪ சொல்வழு

௧௧௧ சொல்வழு வென்பது சொல்லிலக் கணத்தொடு
புல்லா தாகிய புகர்படு மொழியே

என்பது, என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை யானே சொல்வழுவாமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) சொல்வழுவாவது, சொல்லதிகாரத்திற் சொல்லிய இலக்கணத்தோடு, மாறுபட்டு வருஞ்சொற் புணர்க்கப்படுவது, (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "யாவர்க்குந் தாயாக்கு மெங்களுக்கு மெந்தையாகும்
ஆவி யிவளே யனையவாக்கும்—கோவே
நுனக்குப் பயந்த நுணமருங்குன் மாது
தனக்கிடரொன் றில்லாமற் றூங்கு" என வரும்

(இ - ள்.) பெற்றவள், வளர்த்தவள், பாராட்டுபவள் முதலிய எல்லாத் தாய்மார்களுக்கும், எங்களுக்கும், எங்கள் தந்தையாருக்கும், இன்னும் எல்லோருக்கும் இவளே உயிராவள், ஆதலின், அரசனே! இந்த நுட்பமாகிய இடையினையுடைய மாது உனக்கடைக்கலம் இவளுக்கு இடரொன்றுமில்லாமல் இவளைக் காத்துக் கொள்வாயாக, (எ - று)

'யாவர்க்கும் தாயாகும்' என்று கூறிப் பின்னர் 'எங்களுக்கு' என்று கூறியது தவறும், இக் கூற்றிற்குரியாளும் தாய்மார்களில் ஒருத்தியாதலின்

இது, கையடை கொடுத்தல் இதனுள் 'எங்களுக்கு' எனவும், 'நுனக்கு' எனவும், வழூஉச்சொற் புணர்க்கப் பட்டனவாதலாற் சொல்வழு வாயிற்று (௨௰)

## சிறப்பு விதி

கக௨ வழக்கா றாயின் வழூஉவின் றதுவே

(இ - ள்) அச் சொற்கள் வழக்காறு அடிப்பட்ட சான்றோரால் வழங்குவனவாயின் வரையப்படா வழக்கா றென்று தழுவப்படும், (எ - று)

மரூஉக் கட்டுரைக்கண் இலக்கண மின்றியும் வரப் பெறுமெனக்

### நேரிசை வெண்பா

வ - று "யாவ ரறிவா ரிவரொருவ ரிக்குறிஞ்சிக்
காவலரோ விஞ்சையர்தங் காவலரோ—பாவாய்!
அருமந்தன் னாரம் மகன்புனம்விட் டேகார்
தெருமந் துழலுந் திறம்" என வரும்

(இ - ள்) பாவைபோன்ற பெண்ணே! ஒப்பற்றவ ராகிய இவர், இக் குறிஞ்சி நிலத்திற்குத் தலைவரோ? வித்தியாதரர்களுடைய தலைவரோ? அருமருந்து போன்ற இவர், நம்முடைய விசாலமான தினைக்கொல்லையை விட்டுப் போகாதவராய் மயங்கி வருந்தும் தகைமையை எவரறிந்து சொல்லவல்லார்? (எ - று)

இதனுள் 'அருமருந்தன்னார்' என்றபாலது, 'அரு மந்தன்னார்' என அடிப்பட்டு வந்து, வழக்காறாயிற்று அல்லதூஉம், 'மலையமானாடு' - 'மலாடு' எனவும், 'பாண்டிய னாடு' - 'பாண்டிநாடு' எனவும் வருவனவும், அவ்வழக் காறே யெனக்கொள்க (௨௧)

## எ யதிவழு

கக௩ யதிவழூஉ வென்ப தோசை யறுவழி
நெறிப்பட வாரா நிலைமைய தென்ப

(இ - ள்) யதிவழுவாவது, ஓசைகொண்டு சீரறுக் கும் வழி, அறுத்தற்கரிதாய் வேறுபட்டுவரும் தன்மைய தாம், (எ - று)

நேரிசை வெண்பா

உ - று "மாடு பயிலும் வரையாளி மால்யானைக்
கோடுபுயத் துண்டுழலுங் கொள்கைத்தாம்—காடு
அரிதா மியல்பிற் றரையிருட்கண் ணால
பெரிதாகு மைய! பிழை" என வரும்.

(இ - ள்) மலைப்பக்கங்களிலே தங்குகின்ற சிங்கம், மதயானையினது கோட்டைப் புயத்திலே தாங்கி வருந்தும் இயல்பினையுடையதாகிய காடு, எவரும் செல்லற்கரிதாந் தன்மையுடையதாம் ஆதலின், ஐயனே! அக்காட்டில் நள்ளிரவில் வருதல் ஒழிவாயாக, அங்ஙனம் வரின் பெரிதும் பிழையாகும், (எ - று)

'யாளி யானைக்கோடு புயத்துண்டு' என்றது, யானை மதங்கொண்டு சிங்கத்தையும் பாய அதன் தோளில் தந்தம் முறிந்திருக்க அதனோடு சிங்கம் வருந்தித் திரியுமென்றபடி இங்ஙனம் யானை சிங்கத்தையும் பாயுமெனவே காட்டின் மிகுதிப்பாடு விளங்கும்

இதனுட் 'காடரிதாம்' என்பாலது 'காடு அரிதாம்' என்று, அசை சொற்கூடாது அறுத்திசைத்து யதிவழு வாயிற்று (உஉ)

சிறப்பு விதி

கக௪ வகையுளி யுரைப்புழி வரைவின் றதுவே

(இ - ள்) அசை சீர் அற்றபாலவழி யுருது நின்றதெனினும், வகையுளி சேர்த்துக் கொள்வாமென்ற றுற்றமன்று, (எ - று)

(கு - ரை) வகையுளியாவது பதம் நோக்காது இசை நோக்கிப் பிரிக்கப்படுதலுடையது

நேரிசை வெண்பா

வ - று "மேவிவாழ் வாரமே லிருணீக்கி யாருமலாத்
தேவிநீங் காள்செம்பொற் றோளிணைகள்—கோவினணி
சென்னிவிடா மாலினடி வேலினுதி நீலநிறக்
கண்ணிவிடா ளீகைவிடாக் கை" என வரும்,

(இ - ள்) தானமேவி வாழ்வாரிடத்தே, வறுமை யென்னு மிருளை நீக்கி, ஐசுவரியமென்னும் தன்னுடைய பிரகாசத்தைப் பரப்பிப் பொருந்துகின்ற செந்தாமரை மலரில் வாசஞ் செய்யுந் திருமகள், இறைவனுடைய செம் பொன் போன்ற தோள்களைவிட்டு நீங்காள், அவனது அழகிய சிரந் திருமாலினடியைவிட்டு நீங்காது, நீலநிறம் பொருந்திய சயமடந்தை அவனுடைய வேலின் முனையை விட்டு நீங்காள் அவன் கை, ஈகையை விடமாட்டாது (எ - று)

இங்ஙனங் கூறவே, மன்னன் மிக்க ஐசுவரியத்தோடும், காத்தற் கடவுளாகிய விஷ்ணு பத்தியோடும், வெற்றி யோடும், கொடையோடும் வாழ்வானென்பது பெறப்படும் மேல் ஏழாம் வேற்றுமையுருபு இருள் - வறுமையைக் குறிக்கும் அரசனுக்குப் புஜபலமே ஐசுவரியத்துக்குக் காரணமாதலின் இலக்குமி தோளில் சேர்வாள் என்றும் நீலநிறக்கன்னி - துர்க்கை, இவள் ஜயத்திற்குரியளாத லின், 'நீலநிறக் கன்னி வேலினுதி விடாள்' என்றும், வேலே வெற்றிக்குத் துணையாதலின், அதில் சயமகள் இருப்பாள் என்றும் இதனுள் வகையுளி சேர்த்துக் கொள்ளக் குற்றமன்றாயிற்று வகையுளியாவது அந்தந் தச் சொன்முடிபே சீர்முடிவாகத் தனிக்கொள்ளாமல் வேண்டியவிடத்துச் சீர்முடிவு செய்து தனிக்கொள்ளுதல் எனினு மமையும் (உ௩)

அ செய்யுள் வழு

கக௩ செய்யுள் வழுவே யாப்பிலக் கணத்தோ
டெய்த லில்லா வியல்பிற் றாகும்

(இ - ள்) செய்யுள் வழுவாவது யாப்பிலக்கணத் தோடு பொருந்தாத இயல்பினை யுடைத்து, (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "ஆதரத் துயாதர வயாதருங் கொடிக்குப்
பூதலம் புனைபுகழ் வளவன்—தாதறு
தாங்கரும் பாலன்றித் தணியுமோ தாரனங்கன்
பூங்கரும்பால் வந்தடுத்த போர்" என வரும்

(இ - ள்) ஆசையானது வருத்தத்தைத் தர அத னாலே வருந்துகிற பூங்கொடிபோலும் மாதினுக்கு, பூமியை அலங்கரிக்கும்படியான புகழுள்ள சோழன் அணிந்திருக் கின்ற, மகரந்தம் நீங்காத பூவரும்புகளாலாகிய மாலையா லன்றி, மாலையைத் தரித்த மன்மதனுடைய அழகிய கருப்பு வில்லால் வந்து சேர்ந்த போத்தனம்பமானது தணியுமோ, (எ - று)

இது, முன்ன ராசிரியம் வந்து பின்னர் வெண்பாவாய் முடிந்தது இங்ஙன முடிதற் கிலக்கணமின்மையால் யாப்பு வழுவாயிற்று (௨௪)

சிறப்பு விதி

௧௧௬ ஆரிடத் துள்ளு மவைபோல் பவற்றுள்ளு
நேரு மெனப்ப நெறியுணர்ந் தோரே

(இ - ள்) செய்யுள் வழு ஆரிடத்துள்ளும் ஆரிடப் போலியுள்ளும், சிறுபான்மை வரையப்படா, (எ - று)

நேரிசை வெண்பா

வ - று "கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியு ளோஓ கிடப்பதே—கெண்டிக்
கெழுதகைமை யில்லேன் கிடந்தூடப் பன்னாள்
அழுதகண் ணீர்துடைத்த கை" என வரும்

(இ - ள.) தலைவரது பிரிவின் கூட்டமில்லாத யான், பூமியிற் கிடந்து பிணங்கப் பலநாளும் அழுத கண்ணீரைத் துடைத்த எனது கை, வாளைப்பற்றிக் கடகத்திலுள்ள இரத்தினம் ஒளிவிடச் சிவந்த இரத்தத்தினுள்ளே கிடப் பதே, (எ - று)

கெண்டி - தறித்தல், அதாவது வேறுபடுத்தல், அஃது இங்கே பிரிவை யுணர்த்திற்று

இது, பதின்றுசீர் வெண்பாவாய் யாப்பிலக்கணத் தோடு பொருந்தாது வந்தது

ஆரிடமாவன - இருடிகளாற் சொல்லப்படுவன

ஆரிடப்போலியாவன - சாவவும், கெடவும், வாழவும், மனத்தது பாடவும் வல்ல புலவராற் சொல்லப்படுவனவாம்

= சந்தி வழு

ககஎ சந்தி வழுவே யெழுத்திலக் கணத்துச்
சந்தியொடு முடியாத் தன்மைத் தாகும்

(இ - ள்) சந்திவழுவாவது எழுத்ததிகாரத்தே தோற்றப் பட்ட புணர்ச்சியிலக்கணத்தோடு பொருந்தாது வருவது, (எ - று)

**நேரிசை வெண்பா**

உ - று "என்னு ருகவிளைவேன் மனங்கலக்கும்
பொன்பூண் சுமந்த புணர்முலையீர்—மின்போல
நுடங்கிடைக்குங் காதலாய் நோக்கக் கவரும்
படங்கிடைக்கு மல்குற் பரப்பு" என வரும்

(இ - ள்) எலும்பும் உள்ளே உருகும்படி வருந்துவே னாகிய எனது மனத்தைக் கலக்குகின்ற பொன்னாபரணங் களைத் தாங்கிய கொங்கைகளை யுடையீர்! நும் கடித்தடப் பரப்பானது, மின்னலைப்போல அசைகின்ற இடைக்குங் காவலாய், பார்ப்பவரது நோக்கங்கவரும் அரவப்படத் தின் தன்மை பொருந்தியிருக்கும், (எ - று)

இதனுள் 'பொற்பூண்' என்பது 'பொன்பூண்' என வந்தமையிற் சந்தி வழு வாயிற்று (உ)

சிறப்பு விதி

ககஅ இரண்டாம் வேற்றுமைக் கெதிர்மறுத்தும் வருமே

(இ - ள்) இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சியாயின வல்லெழுத்து மொழிக்கு முதலாய் வந்துழி ஏனை வேற்றுமையோடு மாறுபட்டு முடியவும் பெறும், (எ - று)

**நேரிசை வெண்பா**

உ - று "இரவி துணைத்தா ளிகலவேந்தர் சென்னி
விரவு மலர்பொழியு மேவார்—அரசிரிய
மின்பொழியுஞ் செவ்வேல் வெறியோ ரினங்கவரப்
பொன்பொழியுஞ் செங்கைப் புயல்" என வரும்

(இ - ள்) சோழனுடைய இரண்டு பாதங்களும், பகை யரசர்களுடைய சிரசிலே சேர்ந்திருக்கின்ற மலரைச் சொரி யும், செம்மையாகிய வேலானது பகையரசர்கள் பயந்

தோட மினனலைச சொரியும, சிவநத கையாகிய மேக மானது வறிஞர கூடடஙகொளளுமபடி பொனனைச சொரியும, (எ - று)

இரவி - சோழன வெறியோர - வெறுமையோர, ஒனறுமிலலாதவர வறுமை எனனும பணபுபபகுதி திரிநது இஙஙனமாயது.

இதனுள, 'மலர பொழியும' 'மின பொழியும' 'பொன பொழியும' என இயலபாய முடிநதன எனனை,

சூததிரம

"இயறகை மருஙகின மிகறகை தோனறலும
மெயபிறி தாகிடத தியறகை யாதலும"

எனபவாகலின, எனறாககு மிதுவு மிலககணமனறே, எழுததிகாரததோடு மாறுபடடுவநத துணடோ வெனின, மாறுபடடு வருமெனற தனறு; ஐகாரவேறறுமை பொது வகையா னோதிய முடிவோடு பொருநதாது இவவாறு சிறுபானமை வருமென றோதின ரெனறறிக பிரிபொருட சொறறொடர முதலாக வோதிய ஒனபதும இவவாறுவரின வழுவெனப பொதுவிலககணங கூறிச சிறபபுவகையா னிவவாறு வரின வழுவனறெனக கூறியதலலது வேறென விதிககபபடா தெனக கொளக (உஎ)

---

சு மலைவு

ச0 இடமலைவு

கககூ இடமெனப படுபவை மலைநாடி யாறே

(இ - ள) இடமெனறு கூறபபடுவன மலையும, நாடும, யாறும, (எ - று)

மலையாவன —இமயமலை முதலியன

நாடாவன —பதினெண மொழி வழஙகு நிலஙகள.

யாறுவன —கங்கை முதலியன

இவற்றின் மலைவாவது ஒன்றினுள்ள பொருள் ஒன்றினுள்ளதாகச் சொல்லுதல். மலைவு - விரோதம்

நேரிசை வெண்பா

உ - று "தென்மலையின் மானமதமுஞ் சாமரையுந் தேமருசீர்ப்
பொன்மலையின் சந்தனமு மாரமும்—பன்முறையும்
பொன்னி வளநாடன் முன்றிற் பொதுளுமே
மன்னர் திறைகொணர வந்து" எனவும்,

(இ - ள்) பொதிகையிலுள்ள கஸ்தூரியும், சாமரையும், வாசனை பொருந்திய சிறப்பையுடைய மேருமலையிலுள்ள சந்தனமும், பூமாலையும், அரசர்கள் திறைப் பொருள்களாகப் பன்முறையும் கொண்டுவர வந்து, காவிரி பாயும் வளம் பொருந்திய சோழநாட்டை யாளும் சோழனுடைய முன்றிலிலே நிறையும், (எ - று)

நேரிசை வெண்பா

"தண்பொருநைச் செங்கனக மாதங் கிரித்தரளம்
வண்கலிங்கந் தந்த வயப்புரவி—பண்பு
மருவும் யவனத்து மால்யானை சென்னி
பொருநர்க்கு வீசும் பொருள்" எனவும் வரும்

(இ - ள்) குளிர்ச்சி பொருந்திய பொருநை யாற்றிலுள்ள செம்பொன்னும், மாதங்கிரியிலுள்ள முத்தும், வளப்பம் பொருந்திய கலிங்கதேசத்திலிருந்து கொண்டு வரப்பட்ட வெற்றி பொருந்திய குதிரைகளும், நற்குணம் சேர்ந்த யவன தேசத்து மதயானையும் ஆகிய இவைகளே, சோழன், தன்னைப் புகழ்ந்து பாடுவோர்க்கு வாரி யிறைக்கும் பொருள்களாம், (எ - று)

பொருநர் - புகழ்ந்து பாடுவோர் இவற்றுள், இமயத்திலுள்ளன பொதியத்திற்கு உரியவாகவும், பொதியத்திலுள்ளன இமயத்திற்கு உரியவாகவும் கூறினமையின், மலையிடமலைவு ஆயிற்று

பொருநைக்குரிய தாளத்தை மாதங்கிரியோடு புணர்த்தும், மாதங்கிரிக்குரிய சனகத்தைப் பொருநையோடு புணர்த்தும் கூறினமையின், யாற்றுமலைவு ஆயிற்று.

யவனத்திற்குரிய புரவியைக் கலிங்கத்தோடு புணர்த்தும், கலிங்கத்துக்குரிய யானையை யவனத்தோடு புணர்த்தும் கூறினமையின் நாட்டுமலைவு ஆயிற்று.

இடமலைவு - இடத்தின் மாறுபாடு, மலைவு-மாறுபாடு. இங்ஙனமே மேல் வருவனவற்றிற்கும் கொள்க. (உஅ)

## கக. கால மலைவு

கஉ0. காலம் பொழுதொடு பருவமென் றிரண்டே.

(இ - ள்.) காலமாவது - பொழுதும் பருவமும் என இரண்டாம், (எ - று.)

அவற்றுள், பொழுதாவன விடியல் - உச்சி - எற்பாடு - மாலை - யாமம் - வைகறை என இவை. இவற்றுள், ஒரோவொன்றுக்கு நாழிகை பப்பத்தாக ஆறுபொழுதிற்கு நாழிகை அறுபதாம். இவை தமிழ்நூன் முடிபு.

மலைவாவது ஒன்றற்குரிய பூவும் - புள்ளும் - தொழிலும் பிறிதொன்றற்கு உரியவாக வுரைப்பது.

### நேரிசை வெண்பா

வ - று. "செங்கமலம் வாய்குவியத் தேங்குமுதங் கண்மலர
எங்கு நெடுவானின் மீனிமைப்பப்—பொங்குதயத்
தேராழி வெய்யோ னுகந்தான் மலர்ந்ததே
நீராழி சூழ்ந்த நிலம்" என வரும்.

(இ - ள்.) சிவந்த தாமரைமலர்கள் முகங் கூம்ப, வாசனை பொருந்திய அல்லிமலர்கள் முகமலர, நீண்ட ஆகாயத்தில் எங்கும் நாள்மீன் ஒளிர, பொங்குகின்ற தோற்றத்தையுடைய ஒற்றைச்சக்கரம் பொருந்திய தேரினையுடைய சூரியன் மகிழ்ந்து உதயஞ்செய்தான், கடலணுகிய சூழ்ந்த உலகம் விளங்கிற்று, (எ - று.)

இதனுள் மாலைக்குரியன, காலையோடு புணர்த்தத்தால் பொழுதுமலைவு ஆயிற்று பிறவு மன்ன

பருவமென்பன கார் - கூதிர் - முன்பனி - பின்பனி - இளவேனில் - முதுவேனில் என இவை ஆவணிமுதல் இவ் விரண்டு திங்கள் ஒவ்வொன்றாக அறுவகைப்படும் இவை வடநூற்கு மொக்கும் அவற்றின் மலைவாவது ஓர் பருவத்திற் குரியன பிறிதோர் பருவத்திற் றொன்றினவாகக் கூறல்

நேரிசை வெண்பா

வ - று "காதலர் வாரார் களிக்கு மயிலகவத்
தாதவிழ பூங்குருந்தின் றண்பணையின்—மீதே
தளவோர் முகைநெகிழ்த் தண்கொன்றை பூட்ப
இளவேனில் வந்த திதோ" என வரும்.

(இ - ள்) மகிழ்கின்ற மயில்களாட, மகரந்தங்கள் பரந்த மலர்களையுடைய குருந்தமரத்தின் கிளைமீதே படர்ந்த முல்லைக்கொடியில் அழகிய முல்லையரும்புகள் மலர, குளிர்ந்த கொன்றை பூத்தலைச் செய்ய, இதோ இளவேனிற் பருவம் வந்தது, எனது காதற்குரியார் வந்திலர், (எ - று)

மயிலாடலும், முல்லை கொன்றை பூத்தலும், கார்ப்பரு வத்திற் குரியன

இதனுட் கார்ப்பருவத்திற் குரியன, இளவேனிற் பரு வத்திற் றொன்றினவாகப் புணர்த்தமையின் பருவமலைவு ஆயிற்று பிறவு மன்ன (உக)

கஉ கலை மலைவு

கஉக கலையெனப் படுபவை காண்டக விரிப்பிற்
காமமும் பொருளு மேமுறத் தழீஇ
மறுவறக் கிளந்த வறுபத்து நான்கே

(இ - ள்) கலை யென்று சொல்லப்படுவனவற்றை விளங்க விரித்துரைப்பின், இன்பமும், பொருளும் அழிவு படாமற் றழுவிக் குற்றமறச் சொல்லப்படுவன அறுபத்து நான்குமாம், (எ - று)

கலை - சாததிரம, அவை கீதம, வாததியம, கணிதம முதலியன

இவறறின மலைவாவது, அவவநூலிற கூறியபடி கூருது பிறழக கூறுவது

நேரிசை வெணபா

வ - று "ஐநதாம நரமபாம பகைவிரவா தாரூக
வநத கிளைகொளள நானகாய—முநதை
இணைகொணட யாழியறறு மோநதிழைதன ஞவித
துணைவன புகழே தொடுதது" என வரும

(இ - ள) ஐநதாம நரமபாகிய பகை சாராது, ஆரும நரமபாக வநத கிளையைக கொளள, நானகாம நரமபாகிய முதனமைததான இணையைக கொணட யாழை, சுமநத ஆபரணஙகளையுடைய பெணணுனவள, தனது ஆவிககுத துணைவனுகிய தலைவனது புகழையே தொடுதது வாசிப பாள, (எ - று)

இதனுள நினற நரமபிற கைநதாவது கிளையாகலான அதனைப 'பகை' எனறும, ஆருவது பகையாகலான அத னைக 'கிளை' எனறும, நானகாவது நடபாகலான அதனை 'இணை' எனறு எடடாவதன பெயா கொடுததுளு சொனன மையின கலைகளிற சஙகீத நூன மலைவாயிறறு பிறவு மனன (௯0)

கக உலக மலைவு

கஉஉ உலகெனப படுவதீணை டொழுககின மேறறே

(இ - ள) உலகெனறு சொலலபபடுவது ஈணடு ஒழுககததின மேலது, (எ - று)

உலகெனருல, மககணமேலும, நிலததினமேலும, ஒழுககததினமேலும நிறகும பலபொரு ளொருசொல லாகலின, இவவிடதது ஒழுககததையே கோடறகு 'ஈணடு' என றுரைககபபடடது, அவவொழுககம எலலாரு மறியக கிடநதமையான இனனதெனறு பகுததெடுதது துரைகக வேணடுவதிலலை அதன மலைவாவது, உலகத தொழுக லாறறேடு மாறுபடட ஒழுககம நிகழநதனவாகக கூறுதல

### நேரிசை வெண்பா

வ - று "ஆலைகடல்க ளேழுந் தூர்த்து அந்தரத்தி னூடே
மலையனைய மாவையானை யோட்டிக்—கல்வாரை
நீராக்கி வையம் நெடுங்குடையின் கீழ்வைத்தான்
மாருதச்சீர் மாநிலத்தார் மன்" என வரும்

(இ - ள்) மாருத சிறப்பினையுடைய பெரிய பூமியி லுள்ளாரக் கிறைவன், அலைகளையுடைய சப்த சமுத்திரங் களையும் தூர்த்து, ஆகாயத்தினூடே, மலையை நிகர்த்த தனது மதயானையைச் செலுத்தி, பகைவர்களைப் பொடி யாக்கி, இந்தப் பூமி முழுவதையும் நீண்ட தனது குடை நிழலின்கண்ணே தங்கும்படி செய்தான், (எ - று)

தூர்த்தல் - வேறு பொருள்களை நிரப்பி மேடாக்குதல்

இதனுள், ஒருநில வேந்தனை எழுகடலுந் தூர்த்தா னாகவும், ஆகாயத்தே தன் யானையைச் செலுத்திப் பகை வரை வென்றானாகவும், உலகொழுக்கோடு மாறுபடக் கூறி னமையின், உலகமலைவு ஆயிற்று (நக)

### கச நியாய மலைவு

கஉந நியாய மென்பது நெறியுறக் கிளக்கின்
அளவையிற் றெளிக்கும் வினைபொருட் டிறமே

(இ - ள்) நியாய மென்பதனை யிலக்கணவகையாற் கூறுங்கால் காண்டல் முதலிய அளவையாற் பொருள் வினை திறத்தைத் தெளிவிப்பது, (எ - று)

அஃது அறுவகைப்பட்ட சமயத்தோரு முலகத்திற் பொருள்களது தோற்றமும், நிலையும், அழிவும் இன்ன வகைய வென்று கூறுதல் அவற்றின் மலைவாவது அவ் வவர் கூறியவாறு கூறாது மாறுபடக் கூறல்

### நேரிசை வெண்பா

வ - று "ஆய பொருள்கள் கணந்தோ றழியுமெனத்
தூய வசோகின் முனியுரைத்த—தாயவன்றே
காதலா ரீங்க வெழுங்காம வெங்கனல்வாய்
மாதரு யிர்தாங்கு மாறு" என வரும்

(இ - ள்) உலகத்தில் உண்டாகிய பொருள்களெல்லாம், ஒவ்வொரு கணத்திலும் அழிந்துபோமென்று, பரிசுத்தமாகிய அசோகமரத்தினடியி லிருக்கின்ற முனிவனாகிய அருகன் சொன்னது, ஆராயத் தக்கதன்று, தம் காதலர் பிரிய, உண்டாகின்ற வெப்பமாகிய ஆசைக்கடலினிடத்தே அகப்பட்டு மாதர் உயிரைத் தாங்கியிருக்கும் வீரத்தால் என்பதாம், (எ - று.)

இதனுள், தோன்றும் பொருள்களெல்லாங் கணந் தோறும் அழியுமென்ப போதிமுனி யுரைத்தா னென்ற பாலதனை, அசோகின்முனி யுரைத்தா னென்றமையால் நியாயமலைவு ஆயிற்று போதிமுனி - புத்தன் அசோகின் முனி - அருகன் பிறவு மன்ன (கஉ)

கடு ஆகம மலைவு

கஉச ஆகம மென்பன மநுமுத லாகிய
அறனொடு புணர்ந்த திறனறி நூலே

(இ - ள்) ஆகம மென்று சொல்லப்படுவன, மநு முதலாகப் பதினெண் வகையவாய அறத்தொடு பொருந்திய திறத்தை யறிவிக்கு நூல்கள்

அவற்றின் மலைவாவது இந்நூல் இன்னது செய்தல் அறமென்று விதிக்கப்பட்ட விதியிற் பிறழ வருவது ஆகமம் - ஆப்தர்கள் கூறிய சாத்திரம்

நேரிசை வெண்பா

வ று "தெய்வம் விருந்தொக்க றென்புலத்தார் தாமென்னும்
ஐவகையுந் தம்பொருள்கொண் டாற்றுவார்—மையிலா
முக்கோலுங் கற்றோய முழுமடியுந் தாங்கியே
தக்கோ ரெனப்படுவார் தாம்" என வரும்

(இ - ள்) குற்றமற்ற திரிதண்டமும், காவியிற் றோய்த்த முழுவஸ்திரமுந் தரித்துப் பெரியோ ரெனப் பட்ட சந்நியாசிகள், தேவதைகள், விருந்தினர், பந்துக்கள், பிதுர்க்கள், தாங்கள் என்னும் ஐவகையாரையும், தாங்கள் சம்பாதித்த பொருளைக்கொண்டே காப்பாற்றுவார்கள், (எ - று)

கல் - காவிக்கல் ஆற்றுதல் - துயர்தீர்த்தல், பசி தணித்தல் இதனுள் - இலவாழுவார்க்குரிய தொழிலைத் துறவு பூண்டோரோடு புணர்த்தமையின் ஆகமமலைவு ஆயிற்று (௩௩)

இடமலைவு முதலியவற்றிற்குச் சிறப்பு விதி

௧௨௫ கூறிய நெறியி னறுவகை மலைவு
நாடக வழக்கி னடுத்தற் குரிய

(இ - ள்) மேற்கூறிய வழுவென்பதும், இவ்வகை யாற் புணர்ப்பின் ஆமென்றமையான, அதுபோல இச் சொல்லப்பட்ட அறுவகைமலைவும் நாடகவழக்கிற் சொல்லுதற்குரிய, (எ - று)

நாடக வழக்கும், உலகியல் வழக்கும், பாடல்சான்ற புலனெறி வழக்கு மென்னும் மூன்றும் வழக்கினுள்,

நாடக வழக்காவது, இல்பொருளாயப் புகழ்ச்சியிட்டுப் புனைந்துரையாகத் தோன்றுவது எனவே, அவ்வாறு மலைவும் புகழ்ச்சியிடத்து நீக்கப்பட்டது அலங்காரமாகியே வரு மென்பதாம்

க-வது, இடமலை வமைதி

நேரிசை வெண்பா

வ - று " மரகதச் சோதியுடன் மாணிக்கச் சோதி
இருமருங்கு ஞ் சேர்ந்தரிவை பாகன்—உருவ
மலைக்கு மகிலச்சுமந் தார்த்து வான்கோ
டலைத்து வரும்பொன்னி யாறு " என வரும்

(இ - ள்) அகிற்கட்டைகளைத் தாங்கிச் சிறந்த சந்தனக்கிளைகளையும் அலைபிறல் அசைத்துக்கொண்டு வரும் காவிரியாறனது பசசை யிரத்தினத்தின் சோதி யுடனே, செம்மணியின் பிரகாசத்தையும் இரண்டு பக்கத் திலும் சேர்ந்து, அவ் விரு நிறத்தையுங்கொண்ட உமை பாகனாகிய சிவபெருமானுடைய வடிவத்தையும் குறைவுறச் செய்யும், (எ - று)

சிவந்த தமது திருமேனியின் பாதிபாகத்தில் நீல நிறத்தையுடைய உமாதேவி யிருப்பதால் சிவன் பசுமை நிறத்தையும் செந்நிறத்தையு முடையவராவர்.

இதனுள் காவிரியுட் பிற மலைகளும் பிற நாட்டிற்கு முரிய மரகதமும், மாணிக்கமும், சந்தனமும் அலைத்து வருகின்றது என்றமையான், இடமலைவாய்ப் புகழ்ச்சியிடத்துப் பொருந்துவதால் அலங்காரமாயிற்று.

உ-வது, காலமலை வமைதி

நேரிசை வெண்பா

வ - று ' மண்டபத்து மாணிக்கச் சோதியான் வாவிவாய்ப்
புண்டரிக மாலைப் பொழுதலரும்—தண்டாளத்
தாமஞ் சொரியுந் தகைநிலவான் மெல்லாம்பற்
பூவலருங் காலைப் பொழுது" என வரும்.

(இ - ள்) மண்டபத்திலுள்ள செம்மணியின் சூரியப் பிரகாசம் போன்ற சோதியினாலே, தடாகத்தினிடத்திலே தாமரையானது மாலைநேரத்திலும் மலரும்; சந்திரப் பிரகாசத்தை நிகர்த்த குளிர்ந்த முத்துமாலை பொழிகின்ற நற்றுநி வாய்ந்த நிலவினாலே மெல்லிய ஆம்பல் மலரானது காலை நேரத்திலும் மலரும். (எ - று)

இதனுட் காலை மலருங் கமலம் மாலை மலர்ந்ததாகவும், மாலை மலரு மாம்பல் காலை மலர்ந்ததாகவும் கூறினமையின், காலமலைவாய்ப் புனைந்துரையிடத்துப் பொருந்துவதால் அலங்காரமாயிற்று.

௩-வது, கலைமலை வமைதி

நேரிசை வெண்பா

வ - று " கூடம் விரவிக் குழைஅலத்தா னத்தியன்ற
பாட லமுதம் பருகினனே—ஆடுகின்ற
ஊசலயற் றோன்றி யொளியிழைகள் ணணிந்த
ஆசில வடிவே லவன்" என வரும்.

(இ - ள்) ஆடுகின்ற ஊசலின் பக்கத்திலே தோன்றி, பிரகாசம் பொருந்திய ஆபரணங்களை யணிந்த பெண்ணிற்கு,

நாணைகொடுதத குறறமறற கூாமை தஙகிய வேலா யுததகை யுடையவனை, ஆறும நரமபாகிய பகையோடு கூடிக குறைநிலத தானததானியனற பாடலாகிய அமுதத தைப பருகினனை, (எ - று)

இதனுள-ஆறும நரமபாகிய பகையதனோடு கூடிக குறைநிலததானததா னியனறதனைப பாடலமுதம எனற மையின கலைமலைவாயப புணாநதுரைததமையின அலஙகார மாயிறறு

௬-வது, உலகமலை வமைதி

நேரிசை வெணபா

வ - று "கடனுனகும வாதலைககுங காலாளுந தேரும
அடலசெய திருதுணியா யிறறே—உடலொனறி
அநதரமே யேகுவன காணபினே யாணியறறும
இநதிர சால மிது" என வரும

(இ - ள) நானகு கடலைபும வநதலைககினற காலாட படையுந தோபபடையும போாசெயது இருகூறுபின, அவை தேகததோடு பொருநதி அநதரததே செலவதைப பாருஙகள, இது யான செயயும இநதிரசாலம, (எ - று)

இதனுள, உலகமலைவாயப பொருளவநது இநதிரசால மெனறதனால அலஙகாரமாயிறறு

௭-வது, நியாயமலை வமைதி

நேரிசை வெணபா

வ - று "வானுகி மணணாய மறிகடலாய மாருதமாயத
தேனுகிப பாலாந திருமாலே—ஆனயா
வெணணெய விழுஙக நிறையுமோ மேலொருநாள
மணணை யுமிழநத வயிறு" என வரும

(இ - ள) விணணுகி, மணணுகி, அலைகளால மடககு கினற கடலாகி, காறறுகி, தேனுகி, பாலுமாகும இலககு மியை மாாபிற றரிதத மாலே! பசுககளைக காதத இடை யனே! முனனொருநாள மணணை உமிழநத உனனுடைய வயிறுனது, இபபொழுது வெணணெயை விழுஙகுவதால நிறைவுறுமோ, (எ - று)

இதனுள, அனைததுப பொருளு மாகு மெனறும, வெணணெயை விழுஙகினு மெனறும, மணணை யுமிழநதா மெனறும மாறுபடக கூறினமையின **நியாயமலைவாயப** புனைநதுரையால அலஙகாரமாயிறறு

௬-வது, ஆகமமலை வமைதி

நேரிசை வெணபா

வ - று " காயகதி ரோனுககுக கனனனைபின ருஙகனனி
ஆகிபபின மூவரையு மீனறளித்த—தோகை
தலைமைசேர கறபினு டானவணஙகு மூனனுள
மலையெடுததுக காககாதத மால " என வரும.

(இ-ள) வெபபததைச செயகினற சூரியனுககு முனனே கனனனைப பெறறும கனனியாகிப பினனா, தருமா, வீமன, அருசசுனன ஆகிய மூவரையும யமன, வாயு, இநதிரன ஆகிய மூனறு தேவாகளுககும பெறற மயிலபோனற சாயலை யுடையவளும, முதனமையான கறபினை யுடையவளுமாகிய குநதியை வணஙகினன, முன னொளிலே கோவாததனகிரியை எடுதது மழையைத தாஙகி ஆயரைக காதத திருமால, (எ - று)

இதனுள, சூரியனுககுக கனனனைப பெறறுப பினன ருங கனனியாயினு ளெனறும, அதனபின மூவரையும பெறறுளெனறும, இவள கறபுடைமையாற றிருமால வணஙகினெனெனறும கூறினமையின ஆகமவழுவாய அவ வாறு சொலலுதல தகுதியாதலின அலஙகாரமாயிறறு ()

புறனடை

௧௨௬ மெயபெற விரிதத செயயுட டிறனு
மெயதிய நெறியு மீரெங குணனும
ஐயெழு வகையி னறிவுறு மணியு
மடியினுஞ சொலலினு மெழுததினு மியனறு
முடிய வநத மூவகை மடககும
கோளுறத திரிபுதற குனரு மரபி
னேழுற மொழிமிறைக கவிஞ ராறு

மிவ்வகை யியற்றுதல் குற்ற மிவ்வகை
யெய்த வியம்புத லியல்பென மொழிந்த
வவ்வகை முத்திறத் தாங்கவை யுளப்பட
மொழிந்த நெறியி னொழிந்தவுங் கோட
லான்ற காட்சிச் சான்றோர் கடனே

என்பது, என்னுதலிற்றோவெனின், இந் நூலுரைக்கப்பட்ட இலக்கண மின்னத்துந் தொகுத்து இவ்வாறன்றிப் பிறவாறு வருவன வுளவெனினுந் தழீஇக் கொள்கவெனப் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) பொருள்பெற விரித்த முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலை யெனக் கூறப்பட்ட செய்யுண் மரபும்,

அச் செய்யுட்குக் கௌடம், வைதருப்பம் எனப் பொருந்திய நெறியும் அவற்றொடு தொடர்ந்த செறிவு, தெளிவு, சமனிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி யென்று கூறப்பட்ட பத்துவகைக் குணமும், தன்மை முதல் பாவிகமீறாகக் கிடந்த முப்பத்தைந்து அலங்காரமும், அடியினும், சொல்லினும், எழுத்தினுங் கூறி முற்றுப்பெற வந்த மூவகை மடக்கலங்காரமும்,

கோமூத்திரி முதலாகக் குறைபாடில்லா இலக்கணத்திற பிழைப்பின்றி வந்த மிறைக்கவி பன்னிரண்டும்,

இவ்வாறு கூறுதல் வழுவென்றும், அவற்றையே யிவ்வாறு கூறுதல் வழக்கென்றுஞ் சொல்லப்பட்ட பதினைந்து வேறுபாடும் உள்ளிட்டுக் கூறப்பட்ட இலக்கணங்களொழிந்து வருவன வுளவெனினுந் தழீஇக் கோடல், அமைந்த அறிவுடையோராகிய மேலோரது கடன்

அஃதேல், மேற்கூறியவற்றையே மீண்டுங் கூறியது புனருத்தமாம் பிறவெனின், "தொகுத்து முடித்தல்" என்பது தந்திர வுத்தியாகலான் இவ்வா றுரைக்கப்பட்டதெனக் அஃதேல், 'எழுத்தின் கூட்ட மிடைபிறி தின்றி

யும்' என எழுத்து படக்கேயன்றே முன் சொன்னது, ஈண்டடியினுஞ் சொல்லினுமென்று முறைபிறழக் கூறிய தென்னையோவெனின், இதுவும் "தலைதடுமாற்றம்" என னும் உத்திவகையா னுரைக்கப்பட்டது அல்லதூஉம், அடிமடக்கென்பனவும், சொன்மடக்கு என்பனவும், எழுத்தின் கூட்டமென்ப தறிவித்தற்கும், ஓரெழுத்தா னும் ஓரினத்தானும் வருவனவு மப்பாற்படு மென்றற்கும், கோமூத்திரி முதலாகக் கூறப்பட்ட மிறைக்கவியை நோக்கி ஆராயுங்காற் பெரும்பான்மையு மெழுத்தின் மடக்கின் பாற் படுமாயினும் இவை வெவ்வேறு சிறப்புப் பெய ருடையவாய் உலகி னுண்டாகின்றன வாதலாற் சொல்லின் முடியு மிலக்கணத்தா னவ்வாறு சொல்லப்பட்ட தென றற்குஞ் சொல்லப்பட்ட தெனினு மமையும்

சொல்லின்முடியு மிலக்கண மாண்டியாதோவெனின், ஒப்பினாகிய பெயரும், குணங் காரணமாகிய பெயரும் குறித்துரைக்கப் படுதலா னப்பொருளே யுணர்ந்துகொள் ளப்பட்டது

அஃதேல் மாலைமாற்றும், சுழிகுளமும், கோமூத்திரி யும், சருப்பதோபத்திரமுமென நான்குமேயன்றே ஆண் டாசிரியனால் வடநூலி னுரைக்கப்பட்டன ஈண் டுரைத் தனவாகிய ஒழிந்த மிறைக்கவி மிகைபடக் கூறினும் பிற வெனின், ஆகா, ஒழிந்தன, "ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்னுந் தந்திரவுத்தியால் உரைக்கப்பட்டன அல்லதூஉம், இது வடநூலுக்கு வழிநூலாதலாற் றனது விகற்பம்பட வுரைத்தானெனினு மமையும் என்னை,

சூத்திரம்

"முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும்'  என்றாராகலின்

**சொல்லணியியல் முற்றிற்று**

ஆக இயல் ௫-க்குச் சூத்திரம் ௧௨௯  (௫௩)

**தண்டியலங்காரம் மூலமும் உரையும் முற்றும்**

# அட்டநாகபந்தத்தின் விதி

ஒருநானகக காததொடுநாற பததொனறுமா
றுடனாறபத் தைநதாமெட டுடனெந நானகாய
இருளறுபன னிரணடுடனே பதினெடடாகு
மிருபததி ரணடுடனே நாறபத தேழாம
பரவுமிரு பததுநான குடனமுபபததொன
பானமுப பானமூனறே டைமபத தொனறும
அறுமுபபத தேழுடனே நாறபததொனபா
னமட்ட நாகபநத மாஞசெய யுடகே

(இ - ள) நானகாமெழுதது நாறபததோரா மெழுத தாகவும, ஆறுமெழுதது நாறபததைநதா மெழுததாகவும, எடடாமெழுதது இருபதாமெழுததாகவும, பனனிரணடா மெழுததுப பதினெடடாமெழுததாகவும, இருபததி ரணடாமெழுதது நாறபததேழா மெழுததாகவும, இரு பததுநானகாமெழுதது முபபததொனபதா மெழுததாக வும, முபபததுமூனறாமெழுதது ஐமபததோரா மெழுத தாகவும, முபபததேழாமெழுதது நாறபததொனபதா மெழுததாகவும வருமபடி ஒறறுளபட ஐமபததோரெழுத தினாலொரு செயயுடசெயது உபதேச முறைமையால அடடநாகபநதம வரைநது அதிலடைததுககொளவது அடடநாகபநதததின விதியாம, (எ - று)

## சூத்திர முதற்குறிப்பு அகரவரிசை

